29-10-1982

# கம்பராமாயணத்தோற்றம்
## [ஓர் ஆராய்ச்சி]




டாக்டர் **கு. திருமேனி**, எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எச்டி.,
முதுகலைப் பேராசிரியர் & தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர்
தேசியக்கல்லூரி, திருச்சி-1

**கோவல் நிலையம்**
14, வீரேச்சுரம், திருச்சி-620 006

தமிழ் வளர்ச்சித் துறையின் உதவித் தொகை பெற்றது

| | | |
|---|---|---|
| புத்தகத்தின் பெயர் | : | கம்பராமாயணத் தோற்றம்-ஓர் ஆராய்ச்சி |
| ஆசிரியர் | : | டாக்டர் கு. திருமேனி, எம்.ஏ., பி.ஓ.எல்., பி.எச்.டி., முதுகலைப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர் தேசியக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி-620 001 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் |
| வெளியிட்டு நாள் | : | 25—8—82 |
| பதிப்புரிமை | : | ஆசிரியருக்கே |
| வெளியிடுவோர் | : | கோவல நிலையம், 14, வீரேச்சுரம், திருச்சி-620 006 |
| அச்சடிக்கப் பயன் படுத்திய தாள் | : | 14.2 கி. சேஷாயி மில் வெள்ளைத் தாள் |
| நூல் வடிவம் | : | ⅛ டிம்மி |
| பயன்படுத்திய எழுத்து | : | தமிழ் 10 பாயிண்ட் ரோமன் |
| பக்கம் | : | 182 + 8 |
| விலை | : | ரூ. 15/- |
| உள்ளடக்கம் | : | கம்பராமாயணம் பற்றிய ஆராய்ச்சி |
| அட்டையின் அளவு | : | 14.5 கி. ஜே.கே. வெள்ளை அட்டை |
| அச்சிட்டோர் | : | விஜய் பிரிண்டர்ஸ் & பப்ளிஷர்ஸ் உறையூர், திருச்சி-3. |
| அச்சிட்ட படிகள் | : | 1,000 |

## முன்னுரை

உலகுக்கொரு தலைவனாகிய இராமனைத் தலைமகனாகக் கொண்டு எழுதப்பெற்ற இராமாயணங்கள் உலகில் பல உண்டு. இவற்றுள் கல்வியிற் பெரியராய கம்பரால் தமிழ் மொழியில் இயற்றப் பெற்றது கம்ப ராமாயணம் எனப்படும். தமிழ்மொழி ஒரு முது மொழியாய் விளங்கித் தனக்கென ஓர் அடிப்படையைக் கொண்டு, எத்தனையோ இலக்கியங்களை இயலிலும், இசையிலும், நாடகத்திலும் அமைத்துக்கொண்டுள்ளது. இத்தகைய தமிழ் மொழி வடமொழியினின்றும் தோன்றியது என்று வடமொழியில் பற்றுமிக்க சிலர் கூறத் தலைப்பட்டனர். இது கண்ட தமிழ்மொழிக் குரியோர் பலர் உளம் நொந்து மறுத்தனர். அவ்வாறு மறுத்த பலருள், 'கால்டுவெல்' என்ற மேலைநாட்டு அறிஞர் அவ்விரண்டு மொழிகளின் அடிப்படைக் கூறுகளை ஆராய்ந்து வடமொழி யினின்றும் தமிழ்மொழி வந்திருக்க முடியாது என்று முடிவு கட்டினார். வடமொழிப் பற்றுடைய வேறுசிலர் தொல்காப்பியம், திருக்குறள் போன்ற தமிழ் நூல்களை வடமொழியில் உள்ள நூல்களின் மொழிபெயர்ப்பே என்றனர். அதைத் தமிழ்ச் சான்றோர்கள் தக்க காரணம் காட்டி மறுத்தனர்.

இதுபோலவே வடமொழிப் பற்றுள்ள பல்லவ, நாயக்க, மராட்டிய அரசர்களும் மக்களும் தமிழகத்திலுள்ள தெய்வப் பெயர் களையும் ஊர்ப் பெயர்களையும் வடமொழிப் பெயர்களாக மாற்றி உலவவிட்டனர். பின்னர் வந்த ஒருசிலர் அவற்றை உண்மை யென்று சாதித்தனர். அக்கூற்றினையும் தமிழ்ப் பெரியோர் பலர் மறுத்தனர்.

மேற்குறித்த வண்ணம் கம்பராமாயணத்தையும் வடமொழி வான்மீகத்தினின்றும் கம்பர் வாங்கிச் செய்தார் என்று சிலர் தொடர்ந்து கூறி வருகின்றனர். இக்கூற்றினைத் தமிழகத்துச் சான்றோர் பலர் ஐயுற்றனர். ஆனால் மறுக்கத்தக்க வழியில் முனையாமையால் அஃது இதுகாறும் மறுப்புண்ணாமல் கிடந்தது. அம்முயற்சியின் தலைப்பாடே இவ்வாராய்ச்சி.

இராமன் வரலாறும், வான்மீக இராமாயணத்திலும் மற்றைய வடமொழி இராமாயணங்களிலும் புராணங்களிலும் மாறுபடுவதால் இராமகாதை வான்மீகரால் உண்மையறிந்து உரைக்கப்பட்டது அன்று என்பது தெளிவு.

பதினெண் புராணங்கள் பலவற்றில் இராமகாதை பேசப் பட்டுள்ளது. அன்றியும் அப்புராணங்கள் இராமனின் குல முன்னவர் பலரையும் அவர்கள் பெற்ற தெய்விக வரங்களையும் பேசுகின்றன. புராணங்கள் இதிகாசத்திற்கு முந்தியவை. இவற்றைக் கொண்டு பார்த்தால் இராமகாதைக்குரிய குறிப்புகள் புராணங் களுக்கு முன்பே இருந்தவை என்பதும் அவை இராமகாதை யென்னும் இதிகாசமாக உருப்பெற்றமை புராணங்களுக்குப் பிந்திய காலத்திலென்பதும் தெளிவாகும். அதனால் வான்மீகருக்கு முன்னர் இராமகாதை வழங்கப்பெற்றமை கண்கூடு. வான்மீகர் தாமியற்றிய இராமாயணத்தில் பல புராண நிகழ்ச்சிகளை உவமை கூறுவதால் புராணங்கள் அவருக்கு மிகமிக முந்தியன என்பது தெளிவு.

வான்மீகருக்கு இராமன் வரலாற்றை நாரதமுனிவர் சொல்லப் பாடினார் என்று வான்மீகம் கூறுகின்றது. வான்மீகர் காப்பியத்தை ஆதி காவியம் என்று யாரோ பெயர்சூட்டி அது உலக காப்பியத்திற் கெல்லாம் முதலானது என்பதுபோல் கூறிவிட்டனர். வான்மீகர் காப்பியம் வடமொழிக்கு ஆதி காப்பியமாக இருக்கலாம்; ஆனால் உலகக் காப்பியங்கட்கு அன்று.

அது ஆதி காவியமாக இருந்தால் வான்மீகர் காலத்தில் வாழ்ந்த சியவன மகரிஷி செய்த இராமாயணம் ஒன்று இருந்திருக் கிறது. அகத்தியர் மிகப் பழங்காலத்து முனிவர். இவர் செய்த இராமாயணம் ஒன்று உண்டு. சூரிய குலத்திற்கே குருவாய் விளங்கிய வசிட்டர் செய்த வாசிட்ட இராமாயணம் ஒன்றுண்டு. இராமனுக்கு வில்வித்தை பழக்கிய விசுவாமித்திர முனிவர் இயற்றிய அத்யாத்ம இராமாயணம் ஒன்றுண்டு. பார்வதிக்குச் சிவன் கூறிய ஆனந்த இராமாயணமும் ஒன்றுண்டு. அற்புத இராமாயணம், அக்னி வேச்சிய இராமாயணம், உத்வேச்சிய இராமாயணம் போன்றவையும் உண்டு. இவையன்றி வேதவியாசர் தம் பாரதத்தில் இராமகாதையை இராமோபாக்கியானம் என்ற பெயரில் விரிவாகக் கூறுகின்றார்.

மேலும் வான்மீகி இராமாயணத்தில் இராமனுக்கும் ஜபாலி (ஸர்க் 108. அயோத்யா படலம்) என்ற புத்த மதத்தைச் சார்ந்த வருக்கும் வாக்குவாதம் நடப்பதாகச் செய்தியுள்ளது.

"அந்த புத்தர் திருடன், எப்படியோ இவ்வுலகில் புத்தமதம் வேதத்திற்குப் புறம்பானதென நன்கு அறிவீராக. ஆகையால்தான் புத்திமான் ஜனங்களுக்கு நாஸ்திக வாதத்தால் சந்தேகிக்கத் தக்கவன் எவனோ அவனுக்கு முகம் கொடுப்பின்" என வரும். இவ்வாறு ஜபாலி புத்த மதவாதம் பேசுவதால் அவன் புத்தருக்குப் பிந்தியவன். அப்பௌத்த சமயத்தவனோடு இராமன் வாதம்

புரிவதாக வால்மீகி எழுதுகிறார் என்றால் இராமன் எவ்வளவு பிற்காலத்தவன் என்பதும் வால்மீகியின் காலம் எவ்வளவு பிந்தி யிருக்க வேண்டும் என்பதும் காட்டி முரண்படும்.

இவற்றையெல்லாம் வைத்துப் பார்க்கும்போது, கதைக்கு முதல்வராக வான்மீகர் இருக்கவே முடியாதென்பதும், அவரும் மேற்குறித்த இராமாயணங்களிலிருந்தும் செவி வழி அறிந்த செய்திகளையும் காவியமாக்கியிருக்கிறார் என்பதும் தெளிவு.

அவ்வாறே கம்பரும் பதினெண் புராணங்கள் பலவற்றையும் இராமாயணங்கள் பலவற்றையும் வான்மீகரையும் நன்கு பயின்று சங்க காலத்துச் சான்றோர்கள் தொடங்கி ஆழ்வாராதியார்களும் தேவார ஆசிரியர்களும் தமக்கு முன் வாழ்ந்த அனைத்துத் தமிழ் இலக்கண இலக்கிய காப்பிய வழிபாட்டு நூல் புனைந்த அத் துணைச் சான்றோரும் கூறிய கருத்துக்களையும் கற்றுத் தெளிந்து மரபு பிறழாமலும் காப்பியத் தலைவனின் பண்பு சிதையாமலும் இராமனை தாம் அமைத்த இதிகாசத் தலைமகனாக அமைத்துக் காப்பியம் புனைந்துள்ளார்.

கம்பர் இராமனைச் சோழகுல முன்னையோருள் ஒருவன் என்றும், திருமாலின் மரபுவழி வந்த சூரிய குலத்தினன் என்றும், மனு நீதிச் சோழன், சிபிச் சக்ரவர்த்தி, மாந்தாதா, முசுகுந்தன், ஆகியோரன்ன தமிழிலக்கியங்கள் போற்றிப்பரவுகின்ற தமிழ்ச் சோழ மன்னர்களின் மரபில் வந்தவன் என்பதையும் தெரிந்து கொண்டுள்ளார்.

ஆரிய வருகைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் நடந்த தாகக் கூறப்பெறுவது இராமாயண நிகழ்ச்சி. பாரத கண்ட முழுமையும் சோழர்தம் ஆட்சியிலேயே இருந்தது. மனு நீதிச் சோழன் மரபில் வந்தவன் இக்குவாகு எனும் மன்னன். இவனே அயோத்தியின் முதல் மன்னன்.

தென்னகத்துத் திருவாரூரில் ஆண்ட மரபு வழி வந்த இக்குவாகு தென்னகத்திலிருந்து வடபுலத்திற்குக் குடியேறினான். இவ்வாறு வடபுலத்து ஆண்ட சோழ அரசர்கள் மரபில் குஷி, விருகுஷி, காகுத்தன், தயரதன் வழிவந்தவன் இராமன். அதனால் இராமன் இன்று நமக்கு வடவன் அல்லன். இராமன் இந்நாட்டுச் சூரியகுல வழிவந்த, சோழகுல முன்னவனே என்பதை எத்தகைய ஐயமும் தடையும் இன்றி உணர்ந்து தெளியலாம்.

திருமால் தமிழ்க் கடவுள். திருமால் வழிவந்த மனு, சிபி முதலியோர் வழிவந்த கரிகாலன் உள்ளிட்டோர் தமிழ் வேந்தர்கள் மனுவழி வந்த இராமனும் அவ்வாறே. மேலும் வடமொழியைத் தேவபாடை என்றே அழைப்பர். வடமொழி தேவபாடையானால் மக்கட்குரிய மொழி தமிழேயாகும். இராமன் மானுடனாய் வந்தமை

யால் அவனும் மக்கள் மொழிக்குரிய தமிழுக்குரியவனே. கம்பரும் இக்கருத்தையே "தென்சொல் கடந்தான் வடசொல் கலைக்கு எல்லை தேர்வான்" என்று கூறுகின்றார்.

இனி, கம்பரின் கதைக்குக் கருவாக உதவிய நூல்கள் எவை என்று ஆராய்ந்தால் முதலாவதாகக் கம்பர் காலத்துக்கு முந்தைய பழந்தமிழ் இலக்கியங்களில் இராமாயணக் கதை நிகழ்ச்சிகளையும், இராமாயண உறுப்பினர் பற்றிய குறிப்புகளையும் மிகுதியாகக் காணலாம். இவ்வாறு இந்நூல்களில் பயின்று வருமளவிற்கு இராமாயணக் கதை தமிழகத்தில் பரவியிருந்தது என்றால் அது நெடுங்காலமாக மக்களின் விருப்பிற்குரிய கதையாகவும் இருந்திருத்தல் வேண்டும். பரசுராமன் வரலாறு, பத்துப்பாட்டு, அகநானூறு, மணிமேகலை போன்ற நூல்களிலும் இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது சீதை எறிந்த அணிகலன்களை சுக்கிரீவன் முதலிய குரங்கினங்கள் எடுத்த செய்தி புறநானூற்றிலும், இராவணன் கயிலையைத் தூக்கிய நிகழ்ச்சி கலித்தொகையிலும், தந்தை ஏவலினால் சீதையோடு இராமன் வனம் புகுந்த நிகழ்ச்சி இராமனைப் பிரிந்த அயோத்தியின் துயர் இவை சிலம்பிலும், சேதுவில் அணைகட்டிய நிகழ்ச்சி மணிமேகலையிலும், இராமன் மராமரம் துளைத்த செய்தி, சீதையைப் பிரிந்து இராமன் உற்ற துயர் இவை சிந்தாமணியிலும், சீதை இராமன் அழுங்க நிலம் புகுந்தது, சீதையைப் பிரிந்தபோது அவளைக் குரங்கினங்கள் தேடியது ஆய நிகழ்ச்சிகள் பெருங்கதையிலும் காணப்பெறுகின்றன.

இரண்டாவதாகத் தமிழில் பல இராமாயணங்கள் பலதிறப்பட்ட பாடிவில் இருந்த செய்தி தொல்காப்பியம், யாப்பருங்கலம், வீரசோழியம் போன்ற இலக்கண நூல்களுக்கு இலக்கிய மேற்கோளாகக் காட்டப்பெற்ற இடங்களில் கிடைக்கின்றன. யாப்பருங்கல விருத்தி உரையினால் பஃறொடை வெண்பா யாப்பில் ஓர் இராமாயணம் இருந்ததாக அறியமுடிகின்றது. புறத்திரட்டின் வாயிலாக ஆசிரியப் பாவால் அமைந்த இராமாயணம் ஒன்றிருந்த செய்தியை அறிகின்றோம். இதுபோலவே தொல்காப்பியம் புறத்திணையியல் நூற்பாக்களுக்கு மேற்கோளாக உரையாசிரியர் நச்சினார்க்கினியர் போன்ற பெருமக்கள் காட்டிய பாக்கள் பல ஆசிரியப்பாவிலே அமைந்து இராமாயண நிகழ்ச்சிகள் பலவற்றைக் கூறுகின்றன. இவற்றையெல்லாம் கொண்டு பார்த்தால் தமிழில் பல இராமாயணங்கள் இருந்த செய்தி உறுதிப்படுகின்றது.

அவை முழுமையுமாக நூல் வடிவில் கிடைக்கப்பெறாமையால் அவற்றை இயற்றிய ஆசிரியர்களை அறிந்துகொள்ள முடியவில்லை. இவை கம்பர் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டிலும்,

உரையாசிரியர்களின் காலமாகிய 9, 10, 11, 12–ஆம் நூற்றாண்டு களிலும் கம்பர் பயிலவும், உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டவும் இருந்திருக்கின்றன என்பது உறுதி.

மூன்றாவதாகப் பதினெண் புராணங்களில் இராமாயண நிகழ்ச்சிகள் பேசப்பட்டுள்ளன. இப்புராணங்களில் குறிக்கின்ற இராமாயணச் செய்திகள் கம்பராமாயணத்திலும் வால்மீகி இராமா யணத்திலும் காணப்படுகின்றன. இவ்விரண்டு இராமாயணங் களிலும் காணப்பெறாத செய்திகள் பலவும் இப்புராணங்களில் காணப்பெறுகின்றன.

நான்காவதாக உலக முழுவதிலும் பல்வேறு மொழிகளிலும் வழங்கப்பெறுகின்ற இராமகதைகள் எண்ணிலடங்கா. வடமொழி யில் மட்டும் தொண்ணூறுக்கும் மேற்பட்ட இராமாயணங்கள் உண்டு என்றும், அவை ஒன்றிற்கு ஒன்று மாறுபாடுடையவை என்றும் டாக்டர் புஷல்கர் என்பவர் தம்முடைய காப்பியங்களும் புராணங்களும் என்ற நூலில் குறிப்பிடுகின்றார். இதனால் இவற் றிற்கெல்லாம் எது மூலம் என்று ஆராய்ந்து பார்க்கின்றபோது அகத்தியரோ அன்றி வசிஷ்டரோ சொன்ன இராமாயணங்களே மூலமாதல் வேண்டும். அன்றேல் புராணங்கள் மூலமாதல் வேண்டும்.

ஐந்தாவதாகக் கம்பராமாயணத்துக்கும் வான்மீகத்துக்கும் மிகுதியான வேற்றுமைகள் உண்டு. இவற்றையெல்லாம் பார்க்கும்போது கம்பர் தமக்குரிய மூலத்தை வான்மீகத்திலிருந்து கொள்ளவில்லை என்பது தெளிவாகும்.

இதுகாறும் கூறிய செய்திகள் மிக விளக்கமாகவும் ஆதார மேற்கோள்களுடனும் பின்னே தொடர்ந்து ஆராயப்பெற்றுள்ளன. இந்நூலைக் கண்ணுறும் வாய்ப்புடையோர் கொண்ட கருத்து அகற்றிப் பயின்று இவண் கூறிய கருத்தை உளங்கொண்டுத் தெளிந்துத் தம் கருத்துரை வழங்கவேண்டுவன்.

இந்த நூல் உருவாவதற்குப் பொருளுதவி ஓரளவு புரிந்த தமிழகத் தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் அவர்கட்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

நூல் அச்சாவதற்குத் துணைபுரிந்த நண்பர்கள் பலருக்கும் என் நன்றி உரியது.

10-8-82 கு. திருமேனி

# பொருளடக்கம்

முத்தமிழ்ப்பண்ணை

# கம்பரை இயக்கிய பின்னணி

## கம்பர் காவியம் பாடிய அன்றைய சூழ்நிலை

பல்லவர்களின் ஆட்சி தென்னகத்தில் வேரூன்றிய காலத்தில் வடமொழி நூல்கள் தமிழகத்தில் மண்டத் தலைப்பட்டன. தமிழகத்தின் ஊர்ப்பெயர்களும், தெய்வப் பெயர்களும், நூல்களும் வடமொழியில் மாற்றப்பெற்ற காலம் - அது. தமிழ் நூல்களில் பழையன கழிந்து புதியன புகுந்தன. அடுத்துச் சோழர் ஆட்சி தலையெடுத்த பின் சோழ மன்னர்கள் தமிழ் நூல்களைப் போற்றத் தலைப்பட்டனர். இந்த நிலையில் கம்பரும் அவர்போன்ற கவிச் சக்கரவர்த்திகளும் தம் மொழியையும் அது பொதிந்த நூல்களையும் ஆராயத் தலைப்பட்டனர்.

கம்பர்காலத்தில் பழந்தமிழ்ச் சான்றோர்கள் செய்த இராமாயணங்கள் அருகி வடமொழி வான்மீகி இராமாயணம் பெரியதாகப்பரவி வேரூன்றிக்கிடந்தது. அக்காலத்தில் இன்று போலவே தமிழ் மக்கள் தம் மொழியை மறந்து, தர்மவரைப் பொச்சாந்து, வடமொழியையும், வடமொழி வான்மீகி இராமாயணம் போன்ற நூல்களையும் போற்றுபவர்களாயினர். அதே நேரத்தில் கம்பரும் கம்பரையொத்த புலவர் பெருமக்களும் தாம் பயின்ற பழந்தமிழ் இராமாயணங்களின் துணையினாலும், சங்கச் சான்றோர்களின் பாடல்களினாலும், தேவாரம், பிரபந்தம் போன்ற நூல்களின் துணையினாலும், "இராமன் யார்? அவனுடைய வரலாறு என்ன?" என்று ஆராயத்தலைப்பட்டனர். அந்த ஆராய்ச்சியின் முடிவினால் இராமன் தமிழ்க் குலமகன் என்றும் அவன் பரம்பொருள் திருமாலாய் அவதரிக்கத்துணை நின்ற தெய்வம் புகுட குடியினன் என்றும் தெளிந்தார்கள். அத்தகைய தமிழர் குடியில் வந்த தெய்வத்தின் வரலாறு வான்மீகியால் உலகியல் மனிதனாக்கிப் பிழைபடக் காவியம் ஆக்கப் பெற்றிருப்பதை, அவர் தவசி என்ற காரணத்தினாலும் வடமொழிக்கிருந்த அரசியல் செல்வாக்கினாலும் அவர் கூறியது தமிழ் மக்களால் ஆராய்தலின்றி ஏற்றுக்கொள்ளப் பட்டமை கண்டு உள்ளம் புழுங்கினார்கள். உண்மையை நிலை நிறுத்தவும் இராமனாகிய தமிழனின் பெருமையை உள்ளவாறு உணர்த்திக்காட்டவும் முனைந்தார்கள். சடையப்பவள்ளலின் வேண்டுகோளாலும் தமிழ்ப்பற்றுடையார் தந்த ஊக்கத்தாலும் இராமனைப்பற்றி எழுதிய எல்லா வரலாறுகளையும் கம்பர் கற்று,

உண்மை வரலாறு இதுவெனத் தெளிந்து, அதனை உள்ளவாறு காவியமாக இயற்றினர். இச்செய்தியை இரகுவம்சம் பாடிய இராசகேசரியார்,

"பொற்ரு மரைமான் ஒழியாது பொலியு மார்ப
எற்ரு முமேனி ரகுராம சரிதை யாவும்
கற்று ஆர்கலியின் பெரிதாம் தமிழ்க்கம்ப நாடன்
உற்ருங்கு உரைத்தான் உரையா தனஒ துகிற்பாம்

- திரு அவதாரம்: 56

என்று கூறியுள்ளார்.

கம்பர் அன்று அவ்வாறு தமிழ்ச்சான்றோர்களின் துணையினால் அஃதாவது வான்மீகி போன்ற வடமொழியாளர்களுக்கு முந்திய நாவினாரின் உரையின்படி பாடத் தொடங்கியபோது, வடமொழி இராமாயணத்தில் பற்று உடையவர்களும், வான்மீகியிடத்து ஆர்வ மிக்கவர்களும், வால்மீகியைத் தெய்வ ஆற்றல் பெற்ற முனி என்று மதித்தவர்களும், கம்பனை மிக எளிய கவி என்றும், மனிதத் தரத்தான் என்றும் கூறியதோடமையாமல் "இவ்வளவு தகுதியுடைய முனிவன் இராமகாதையைப் பாடிப் பரப்பி நிலைபெறுத்திய பின்னர் இவன் (கம்பன்) எதற்காக ஒரு காவியம் பாடவேண்டும்?" என்று கேட்டு வைத்திருக்கின்றனர். இதனைக் கம்பர் தம் பாடலில் அப்படியே சொல்கின்றார்.

"நொய்தின் நொய்யசொல் நூற்கலுற் றேன்எனை
வைத வைவின் மராமரம் ஏழ்தொளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே"

- தற்சிறப்பு: 5

"வையம் என்னை இகழவும் மாசுஎனக்கு
எய்த வும்மிது இயம்புவது யாது எனின்
பொய்யில் கேள்விப் புலமையி னேர்புகல்
தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே"

- தற்சிறப்பு: 6

என்பன அவர் கூறும் காரணம் தாங்கிய பாக்கள்.

"செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே","வைதவைவின்" "நொய்தின் நொய்ய சொல் நூற்தலுற்றேன்" என்ற சொற்றொடர்களில் கம்பர் தம் துணிவையும் அடக்கத்தையும் உள்ளத்து வெப்பத்தையும் காணலாம்.

### நன்றி கொன்றவரோ கம்பர்?

இப்பாட்டில் வையத்தார் வான்மீகியைப் பெரிதாக மதித்த காரணத்தினால் கம்பனை வைதமையும் அவனுக்கு மாசேற்றிக் கறியதையும் கூறி அதற்குக் காரணங் கூறுகின்றார். வான்மீகி முனிவர் இராமனை மனிதனாகக்கொண்டு, அதிலும், எளிய தரத்த வனாக அமைத்துப் பல குறையை ஏற்றிப் பாடிவிட்டதைக் கண்டு பொறாது அவன் தெய்வத்தன்மையைப் புலப்படுத்தவே தாம் இராமாயணம் பாடுவதாகக் கம்பர், "இது இயம்புவது யாதெனின் தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே" என்று கூறுகின்றார்.

இங்குத் தெய்வமாக்கவி மாட்சி என்று அவர் கூறியது திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள், குன்றெறிந்த குமரவேள், அகத்தியனார், முடிநாகராயர் போன்றோர் வழிவந்த புலனழுக் கற்ற தெய்வமாக்கவிகள் இராமனைப்பற்றிப் பாடிய தெய்வத் தன்மையைப் புலப்படுத்துதற்கேயாம்.

ஆயிரம் பாடல்கட்கு ஒருமுறை நன்றி செலுத்துமுறையில் தம்மைப் பேணிய சடையப்பவள்ளலைப் பற்றிப் பாடிய கம்பர், வான்மீகி முனிவர் தம் கதைக்கு அடிப்படை தந்தவராக இருந்தால் அவருக்கு நன்றி கூறாது விடுவானேன்? வான்மீகி முனிவரை அடிப்படையாகக்கொண்டு "அவர் உரையின்படி" பாடியிருந்தால் வான்மீகிக்கு நன்றியறிதலோடு அவையடக்கம் சொல்ல வேண்டிய கம்பர் தமிழ்ச்சான்றோர்களை நோக்கி,

"துறைய டுத்த விருத்தத் தொகைக் கவிக்கு
உறைய டுத்த செவிகளுக்கு ஒதில்யாழ்
நறைய டுத்த அசுணநல் மாச்செவிப்
பறைய டுத்தது போலும் என் பாவரோ"

- தற்சிறப்பு: 7

"முத்த மிழ்துறை முறை யின் போகிய
உத்த மக்கவி கட்கு ஒன்று உணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

- தற்சிறப்பு: 8

என்று பாடியிருக்கவேண்டா. கம்பர் தம் காப்பியத்தில் வான்மீகி முனிவரைக் குறிப்பிட்டதெல்லாம் வான்மீகி முனிவருக்குத் தாம் மாறுபடுவதற்கேயாம். ஆனால், வான்மீகி முனிவருடைய

பெருமையைக் குறைத்துப் பேசாமல் "செப்த செய்தவன்" என்று பாராட்டுகின்றார்.

"வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி என்பான்
தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை அன்பெனும் நறவமாந்தி
மூங்கையான் பேசலுற்ருன் என்னயான் மொழிய லுற்றேன்"
- பால. நாட்டுப்: 1

என்ற இப்பாட்டில்கூட வான்மீகி நாட்டுப்படலம் பாடியதில் வல்லவர் என்பதை, அஃதாவது "பரணன் பாடினன்" என்பது போலப் புலமைமிக்கவரைப் புலமை தெரிந்து கம்பர் பாராட்டினாரே யன்றி நன்றி செலுத்தினார் என்றோ பின்பற்றினார் என்றோ கொள்ளல் ஆகாது. இவ்விடத்தில் கம்பர் வான்மீகியோடு போட்டியிட்டுப் பாடுவதுபோல் பாடியிருப்பது நோக்கத்தக்கது. வான்மீகியின் புலமையின் பெருந்தன்மை அறிந்து மதித்த இதனைப் போலவே, யுத்தகாண்டத்தில் இர்திரசித்தோடு சென்ற சேனையின் எண்ணிக்கையினைக் கம்பர் குறிக்க நேர்ந்தபோது,

"அன்னுெடு போயின தானை அறிந்து கூற
என்னல் அறிதேனும் இயம்புவான் மீகன் என்னும்
நன்னல் மறையான் அது நாற்பதுவெள்ள மென்னச்
சொன்னுன் பிறர்யார் அஃதுணர்ந்து தொகுக்கவல்லார்"
- கம்பர் யுத் நாக பாக. 23 இராஜம்பதிப்பு

என்று வான்மீகி கூறியதைக் குறிப்பு மொழியில் மொழிவாரைப் போலக்கூறுகின்றார்.

இவ்வாறு ஒருசில இடங்களில் வான்மீகி முனிவருடைய புலமையையும் அறிவையும் மதிப்பாரைப் போன்று கூறுகின்றாரே யல்லாமல் பின்பற்றவில்லை. இதனைத் தம் கூற்றாகக்கூறாமல், "நாற்பது வெள்ளமென்னச் சொன்னுன்" என்று கூறிப்போவது, "பிறன்கோள் கூறல்" என்னும் மதம்பற்றியதாம்.

தமிழ்ச்சான்றோர்கள் பாடலில் இன்ன எண்ணிக்கை என்று ஒன்று கிடைக்காமையால் வான்மீகி கூறியதைத் தாமும் கூறியுள்ளார் போலும். அல்லது பிறர் வாய் மொழியாகக் கேட்டது கொண்டு பாடிய வான்மீகர் எண்ணிக்கை கூறித் தாம் கூறும் கதையை உண்மையாக்கக்கண்டு எள்ளற்குறிப்பால் கூறினார் போலும் என்றும் கருத இடமுண்டு.

நாம் இதுகாறும் "முந்திய நாவினர்" என்ற சொற்றொடரால் வான்மீகி முனிவரைக் கம்பர் குறிக்கவில்லை என்றும் அவர் வான்மீகி முனிவருக்கு முன்னிருந்த தமிழ்ச்சான்றோர்களின் இராமாயணங் களையும், சங்க இலக்கியங்களையும், தேவாரங்களையும், பிரபந்தங்களையும் துணையாகக் கொண்டுதான் இராமாயணம் பாடியிருக்க வேண்டும்.

இங்கு இதனைப் படிப்போருக்குப் பல ஐயங்கள் எழலாம். தமிழில் பல இராமாயணங்கள் உண்டா? இருப்பினும் அவை வான்மீகி முனிவருக்கு முந்தியவையா? முந்தியனவாயின் அவை இராமனை மனிதத்தரத்தில் பேசாது தெய்வத்தரத்தில் பேசியுள்ள னவா? உள்ளனவாயின் தமிழ்ச்சான்றோர்கள் வடபுலத்து இராமனை இத்துணைச்சிறப்பித்துக்காவியம் ஆக்கிக்கொண்டு தமிழ் நாட்டில் பரப்பியது எதற்கு? ஆரிய திராவிடப் போராட்டமன்றோ இக்கதை? என்பன போன்ற வினாக்கள் எழும். இவ்வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி விடை இனி காண்போம்.

## தமிழில் பல இராமாயணங்கள்

இங்கு நாம் பல இராமாயணங்கள் தமிழில் உண்டா என்ற கேள்வியை எடுத்துக் கொள்வோம். தமிழில் பல இராமாயணங்கள் பலதிறப்பட்ட பாவடிவில் கம்பருக்கு முன் இருந்த செய்தி தொல் காப்பியம், யாப்பருங்கலம், வீரசோழியம் போன்ற இலக்கண நூல் களுக்கு இலக்கிய மேற்கோள்களாகக் காட்டப்பெற்ற இடங்களிலும் புறத்திரட்டுப் போன்ற நூல்களிலும் கிடைக்கின்றன.

"எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும் – முப்பாற்குப்
பாரதம்சீ ராம கலைதமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்" - திருவள்ளுவமாலை: 30

பாரதம் பாடிய பெருந்தேவனார் திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரமாகப்பாடிய இத்திருவள்ளுவமாலைச் செய்யுள் தமிழில் பாரதமும் இராமாயணமும் இருந்த செய்தியைக் குறிப்பிடுகிறது.

இங்குத் திருவள்ளுவர் நூல் இயற்றியதற்கு முன்னம் தமிழில் உயர்ந்த நீதிகளையும் நெறிமுறைகளையும் வேதத்திலும் மேம்படச் சொல்லிய நூல்களாகப் பாரதமும், இராமாயணமும் தமிழில் இருந்ததை ஊகித்துணரலாம்.

யாப்பருங்கல விருத்தி என்ற நூலில் "பாதம் பலவரிற் பஃறொடை வெண்பா" * என்ற உரையில் "பல அடியில் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும் புராணசாகரமும் முதலாய செய்யுட்களில் கண்டுகொள்க" என்று எழுதுகின்றார் அந்நூலின் உரையாசிரியர். இதனால் தமிழில் பஃறொடை வெண்பா யாப்பில் ஓர் இராமாயணம் இருந்ததாக அறிய முடிகிறது.

வீரசோழியம் என்ற நூலிற்கு உரை எழுதியவர் வெண்பா யாப்பில் வந்த பல இராமாயணப் பாக்களைப் 'பொருட்படலத்தில் வேந்தன் சிறப்பு என்ற பகுதிக்கு மேற்கோளாகக் காட்டுகின்றார்.

"மற்றிவனை மாலென்று அறிந்தால் அவ் வாளரக்கன்
பெற்றி கருதுவதென் பேதையர்காள் – மற்றிவன்தன்
கண்டான் கடைசிவத்தற் குண்டோ கடலிலங்கை
வண்டார் அரக்கன் வலி"

"ஐயிருபது யோசனையும் ஆங்கோர் இடனின்றிக்
கைபரந்த சேனைக் கடலொலிப்பத் – தையல்
வழிவந்து இராமன் வடகரையா னென்றுன்
விழிவந்து வேறுக மீட்டு"

என்பன அப்பாடல்கள்.

புறத்திரட்டில், ஆசிரியமாலை என்ற தொகைநூற் செய்யுட்கள் சிலவற்றால் ஆசிரியப்பாவான் அமைந்துகிடந்த இராமாயணம் ஒன்று இருந்த செய்தியை அறியலாம்.

"மாமுது தாதை ஏவலின் ஊர்துறந்து
கானுறை வாழ்க்கையில் கலந்த இராமன்
மாசுவிரலை வேட்டம் போகித்
தலைமகட் பிரிந்த தனிமையன் தனுஅது
சுற்றமும் சேனிடை யதுவே முற்றியது
நஞ்சுகறை படுத்த புன்மிடற் றிறைவன்
உலகுபொதி உருவமொடு தொகைஇத் தலைநாள்
வெண்கோட்டுக் குன்ற மெடுத்த மீளி
வன்றோ ளாண்டகை யூரே
அன்றே சொன்முறை மறந்தனம் வாழி
வில்லு முண்டவற் கந்நா ளாங்கே
மாதர்க் கெண்டை வரிப்புறத் தோற்றமும்
நீலக் குவளை நிறனும் பாழ்பட

* யாப்பருங்கல விருத்தி 62.

இலங்கை யகழி மூன்றும் அரக்கியர்
கருங்கா னெடுமழைக் கண்ணும் விளிம்பழிந்து
பெருநீ ருகுத்தன மாதோ கதுவக்
குரங்கு தொழி லாண்ட இராமன்
அலங்குதட ஞெள்வா ளகன்ற ஞான்றே''

- புறத்திரட்டு. எயில்கோள்

இப்பாட்டு ஆசிரியப்பாவான் அமைந்து இராமாயண நிகழ்ச்சிகள் பலவற்றைக் குறிப்பிடுவதைக் காணலாம். சிறப்பாக இலங்கையில் மூன்று அகழிகள் இருந்து இராமனால் அழிக்கப்பெற்ற செய்தி எந்த இராமாயணத்திலும் காணப்பெறாததாகும்.

இதுபோலவே தொல்காப்பியப் புறத்திணையியல் நூற்பாக்களுக்கு மேற்கோள்களாக உரையாசிரியர். நச்சினார்க்கினியர் போன்ற பெருமக்கள் காட்டிய பாக்கள் பல ஆசிரியப் பாவிலேயே அமைந்து இராமாயண நிகழ்ச்சிகள் பலவற்றைக் கூறுகின்றன.

"இருசுடர் வழங்காப் பெருமு திலங்கை
நெடுந்தோள் இராமன் கடந்த ஞான்றை
என்கிடை மிடைந்த பைங்கட் சேனையில்
பச்சை போர்த்த பல்புறத் தண்டை
எச்சார் மருங்கிலும் எயிற்புறத்து இறுத்தலின்
கடல்சூழ் அரணம் போன்றது
உடல்சின வேந்தன் முற்றிய ஊரே''

- தொல். புறத். 12

இந்நூற்பாவுரையில், "மேலது வானத்து" என்ற பாட்டும் தானைமறம் என்ற புறத்துறையில் "இருபாற்சேனையும்" என்று தொடங்கும் பாட்டும் தொல்காப்பியம் பொருளதிகார நூற்பா 7ல் நச்சினார்கினியர் மேற்கோள் காட்டும் "கடலும் மலையும் நேர்படக்கிடந்த" என்ற பாட்டும் பழங்காலத்தில் இராமாயணம் ஒன்று ஆசிரியப்பாவில் இருந்த செய்தியைத் தெளிவாக்குகின்றன.

ஸ்ரீ புராணம் என்ற நூலில் இராமசரித்திரம் விருத்தப் பாவிலும், ஆசிரியப்பாவிலும் பேசப்பெற்றுள்ளது. சைனர்கட்கும் சைன இராமாயணம் என்ற நூல் ஒன்று உண்டு. ஸ்ரீபுராணத்தில் சூர்ப்பணகையை நோக்கி இராவணன் கூறியதுபோல்,

" அலைவட்டங் கிடந்த வல்குற் கதிபதி யாகும் பெற்றி
கலைவட்டங் கிடந்த வல்குற் காரிகைக் கறிவித் தாயேல்
முலைவட்டங் கிடந்த முத்த மாலைமென் முறுவ லாளென்
சிலைவட்டங் கிடந்த தோளைச் செறிதற்கை யுறவு முண்டோ "

என்ற பாட்டு விருத்தயாப்பிலும் காணக்கிடக்கின்றது. சீதையின் சோர்வுபற்றிக் கூறவந்த இடத்தில்,

" உருமிடிப் பண்ட வருமணி நாகமெனத்
திருமணி நிலத்தில் தேவி சோர்ந்து
செய்த பாவையின் மெய்திரி வின்றி
மையலின் உயிர்த்து மடிந்துடன் கிடப்ப
விம்முறு துயரில் கொம்மென உயிரா
விளைந்த தெல்லாம் உளங்கொள உணரா
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
. ... ... ... .. ... ... ... ... ... ... ... ...
எனையும் தனியே இவண் இட்டதுவே "

என்று நாற்பத்தேழு வரிகளைக் கொண்ட ஓர் ஆசிரியப்பாவும் அதையடுத்து ஒரு விருத்தப்பாவுமாக இராமாயணக்கதை தொடர்ந்து கூறப்படுவதைக் காணலாம்.

இவற்றையெல்லாம் துணையாகக் கொண்டு பார்த்தால் தமிழில் பல இராமாயணங்கள் இருந்த செய்தி உறுதிப்படுகின்றது. ஆனால் அவை முழுமையுமாக நூல் வடிவில் கிடைக்கப் பெறாமையால் அவற்றை இயற்றிய ஆசிரியர்களை நாம் அறிந்துகொள்ள முடியவில்லை. இவை கம்பர் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டிலும், உரையாசிரியர்களின் காலமாகிய 9, 10, 11, 12 ஆம் நூற்றாண்டுகளிலும், கம்பர் பயிலவும் உரையாசிரியர்கள் மேற்கோள் காட்டவும் இருந்திருக்கின்றன என்பது உறுதி.

" தமிழில் பல இராமாயணங்கள் இருந்தது மெய்யாயினும் அவை இராமனைக் கடவுளாகக் கூறியுள்ளனவா? என்ற வினாவிற்கு இனி விடை காண்போம்.

திருமாலைப் பழந்தமிழ் இலக்கியங்கள் மாயவன், நெடியோன் அருந்திறல் என்ற சொற்களால் குறிக்கின்றன.

"கட்டில் நீத்தபால்" (அரசிருக்கை துறத்தல்) என்னும் புறத்துறைக்கு நச்சினார்க்கினியர் சங்க காலத்து வழங்கிய இராமாயணத்தி

னின்றும் ஒரு பாடலை மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றார். இங்கு இராமன் திருமால் என்றும், அவன் பேராற்றல் உடையவன் என்றும் குறிப்பது காணலாம்.

''கடலும் மலையும் நேர்படக் கிடந்த
மண்ணக வளாக நுண்வெயிற் றுகளினும்
நொய்தா லம்ம தானே யிஃதெவன்
குறித்தன நெடியோன் கொலலோ மொய்தவ
வாங்குசிலை இராமன் தம்பியாங்கவன்
அடிபொறை யாற்றி னல்லது
முடி பொறை யாற்றலன் படிபொறை குறித்தே''
(தொல்-பொருள்-76)

என்பது அப்பாட்டு.

வீர சோழிய உரையில் கண்ட இராமாயண வெண்பா இராமனைத் திருமால் என்றே கூறி அவனோடு எதிர்த்த இராவணன் ஆற்றலையும் உறழ்ந்து பேசுவதைக் காணலாம்

சைன தீர்த்தங்கரருடைய ஸ்ரீ புராணத்தில், இராமகாதை குறிக்கப்படும் இடமொன்றில், இராமன் திருமாலே என்பதைச் சுட்டிக்காட்டுகின்றார்.

''உருமிடிப் புண்ட அருமணி நாகமென
திருமணி நிலத்தில் தேவி சோர்ந்து
. .. .. ............
..................... .. ..
மான்பின் போசிய மன்னவ னேயெனும்
மாயோன் செய்த மாய மானிடை
மாயவன் செய்த மகிழ்ச்சி கண்டருளி
ஆவதொன் றின்றி அதன்வழி யொழுகிய
நாயகனே எனை நணுகாய் வந்து''

என்று வரும் பாட்டில் இராமனை மாயவன் என்றும் திருமால் என்றும் குறிப்பது நோக்கத்தக்கது.

இங்ஙனம் சங்க காலத்தில் இராமன் திருமாலின் பிறப்பே என்ற நம்பிக்கையில் இயற்றப்பெற்ற இராமாயணங்களை அடிப்படையாகக்கொண்டு சங்கப் புலவர்களும் அவர்கள் மரபைத் தொடர்ந்த புலவர்களும் சான்றோர்களும் கம்பன் காலம் வரையிலும் வழிவழியாக விடாது பின்பற்றியிருத்தலை இனிமேல் காண்போம்.

இராமன் குரக்கினத்தலைவர்களோடு மந்திரம் இருந்தஞான்று அவர்கள் அமர்ந்திருந்த மரத்தின்மீது வாழ்ந்த பறவையினங்கள்

பேரொலி செய்து அவர்கள் உரையாடலைக் கேட்கவொட்டாது தகைப்ப அதனைக் கண்ட இராமன் தன் கடவுள் தன்மையால் அவற்றின் ஒலியை அவித்தான் என்றதொரு செய்தி,

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றால் இவ் வழுங்க லூரே" (அகம். 70)

என்ற பாடலில் குறிப்பிடப்பெற்றுள்ளது. இச்செய்தியெல்லாம் வான்மீகர் கூறாதன.

சிலப்பதிகாரத்தில் ஊர்காண் காதையின்கண், வழிபாடு மேற் கொண்டிருந்த கவுந்தியடிகளிடம் கண்ணகிக்கு அவர் காப்பாக இருக்கவேண்டும் என்று கோவலன் வேண்டிய போது அவனுக்கு மாற்றமாக அவர்.

"தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந்திலையோ நெடுமொழி யன்றோ"

(ஊர்காண் 46:49)

என்று கவுந்தியடிகளின் கூற்றாகக் கூறுவதாக இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். இங்குப்பிரமனைப் பயந்த திருமாலே இராமனாக வந்ததாக அவன் கடவுள் தன்மை கூறப்பெறுவதைக் காணலாம்.

மணிமேகலையில் காயசண்டிகையின் பெரும் பசிக்கு இடு கின்ற உணவெல்லாம் போகுமிடம் தெரியாமல் போவதற்கு உவமை சொல்லவந்த சாத்தனார், இராமன் இராவணனை வெல்லக் கருதிக் கடல் அடைத்தஞான்று, குரங்குகள் பெயர்த்துக் கொணர்ந்த பெருமலைகளெல்லாம் கடலின் வயிற்றிடைப் புகுந்தும், நிறைவு பெற்று அடைபெறாது அது இருந்த கரையாக்கஇட்ட நிகழ்ச்சி யைக் கூறுகின்றார்:

"நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீ ரடைந்த ஞான்று

குரங்கு கொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை அளக்கர் வயிறுபுக் காங்கு"

மணிமேகலை 17:9-12

என்று கூறுமிடத்து நெடியோன் என்ற சொல்லால் இராமனைத் திருமால் என்று குறிப்பதைக் காணலாம்.

திருமாலே இராமன் என்ற நம்பிக்கையுடைய ஆழ்வார்கள் பாடியுள்ள பாக்களும் இராமன் திருமால் என்ற கருத்துக்கு அரண் செய்யும்.

"பைங்கண்விறல் செம்முகத்து வாலிமாளப்
படர்வனத்துக் கவந்தனொடும் படையார்திண்கை
வெங்கண்விறல் விராதனுக விற்குனித்த
விண்ணவற்கோன் தாளணைவீர் வெற்புப்போலும்"

திருமங்கை ஆழ்வார் திருமொழி 3:4-6

தேவார ஆசிரியர்களும் இராமனைத் திருமால் என்று கூறத் தவறவில்லை திருநாவுக்கரசர் இராமாயண நிகழ்ச்சியைத் திரு இராமேச்சுரப்பதிகத்தின் பல பாக்களில் பாடுவர்.

"வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை யொன்றறியார்
பன்கண்ண ராகிநின்று போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்தகோயில் திருஇரா மேச்சுரத்தைத்
தங்கண்ணால் எய்தவல்லார் தாழ்வராத் தலைவன்போல"

திருநாவுக்கரசர்; 1 - 10

என்று இராமனைத் திருமாலாகவே பாடுகின்றார்.

இங்ஙனமே சங்ககால ஆசிரியர்கள் தொடங்கிப் பிற்கால ஆசிரியர்கள் வரை முறையாக இராமனைக் கடவுளாகக் காட்டியதைக்கண்டு தெளிந்த கம்பர்,

"நடையின் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடைநி கழ்ந்த இராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றறந்ததே"

தற்சிறப்பு:11

என்று பாடத்தொடங்குகின்றார்.

இனி, தென்னகத்தில் வான்மீகருக்கு முன் இராமாயணக் கதை நிலவியிருந்ததைக் காண்போம்.

தமிழகத்திலே மூன்று சங்கங்கள் இருந்த வரலாற்றினை இறையனார் களவியல் என்ற நூலும் அடியார்க்கு நல்லார் உரையும், இவையன்றிக் கலித்தொகை, சிலம்பு போன்ற தமிழ் நூல்களும் பரக்கப் பேசுகின்றன முதற்சங்கம் தென்மதுரையில் நிகழ்ந்த போது அதன்கண் திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், அகத்தியனாரும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவனும் இருந்து பல நூல்கள் இயற்றித் தமிழ் ஆராய்ந்தன ரென்றும், தென்மதுரை கடல்கொண்ட பின்னர் கபாடபுரத்தில் இடைச்சங்கத்து அகத்தியனாரும், தொல்காப்பியரும், இருந்தையூ க் கருங்கோழியும், மோசியும் இருந்து தமிழாராய்ந்தனர் என்றும் அறிகின்றோம்.

அங்ஙனமே கபாடபுரம் அழிந்த பின்னர் மதுரையில் கடைச் சங்கத்தில் சிறுமேதாவியாரும், சேந்தன் பூதனாரும், அறிவுடை அரனாரும் போன்ற பெருமக்கள் இருந்து தமிழாராய்ந்தனர் என்ற செய்தியையும் அறிகின்றோம்.

முதற்சங்கமிருந்த தென்மதுரை அழிந்த பின்னர் கபாடபுரத்தினைத் தலைநகராகக் கொண்டு பாண்டியர்கள் ஆண்ட செய்தியையும், அதிலுள்ள மன்னர் பெருமைகளையும் சிறப்புக்களையும் அந்தநகரச் சிறப்புகளையுமே வடமொழி வான்மீகம் உட்படப் பல நூல்கள் குறிக்கின்றன.

பாண்டிநாட்டைப்பற்றிக் குறிப்பிடப்போந்த வான்மீகி முனிவர், "பொன் நிறைந்ததாயும், அழகுடையதாயும், முத்தாலும் மணியாலும் அலங்கரிக்கப்பட்டதாயும், பாண்டியர்க்கு உரியதாயுமுள்ள கபாடபுரத்தை வானர வீரர்காள் பார்க்கக் கடவீர்" என்று தென்திசை நோக்கிச் சீதையைத் தேடிச்சென்ற வானர வீரர்களுக்குச் சுக்கிரீவன் கூறுவதாகக் கூறுகின்றார்.

ஆகவே, இராமாயணம் நிகழ்ந்த காலம் கபாடபுரத்தில் இடைச்சங்கத்து அகத்தியனார் போன்ற தெய்வப் புலவர்களிருந்து தமிழாராய்ந்த காலமாகும்.

நாரணன் விளையாட்டினை நாரதமுனிவர் கூறக்கேட்டு இராமாயணம் செய்தார் வான்மீகர் என்றால் அவர் இராமாயண காலத்தவராதல் அமையாது. இராமாயண காலத்தவர் அல்லர் என்றால் அவர் இடைச்சங்கத்தினை அடுத்தவராதல் வேண்டும்.

ஆகவே வான்மீகி முனிவர்க்கு முன்னர் கபாடபுரம் இருந்த செய்தியை வான்மீகி கூற்றானே உணரக் கிடக்கின்றது.

பெருமையுடைய ஒரு நகரைக் குறிப்பிடுதற்கு "கபாடேநகர விசேஷ" என்று வடமொழியாளர்கள் கபாடபுரத்தைக் காட்டாகக் கூறியிருக்கிறார்கள்.

இந்தக்கபாடபுரம், அகத்தியனார் முதலாக முடத்திருமாறன் ஈறாக வாழ்ந்த பின்னர் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி கடற்கோளால் அழிவுபெற்ற மதுரையைத் தனக்குத் தலைநகராகக் கொண்டு ஆண்டு சங்கத்தை நிறுவி வாழ்ந்திருக்கின்றான். இக்கடற்கோட் செய்தி,

"மலிதிரை ஊர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்"

கலி. 104

எனக் கலித்தொகையிலும்,

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

சிலம்பு 11: 18 - 20

எனச் சிலப்பதிகாரத்திலும் காணக்கிடக்கின்றது.

இக்கடற்கோளுக்கு முன் இருந்த பாண்டிய நாட்டில், பஃறுளியாறு, குமரியாறு போன்ற ஆறுகளும், பல மலைத்தொடர்களும் அவற்றைச் சார்ந்த நாடுகளும் இருந்திருக்கின்றன.

ஒரு புலவன் ஓர் அரசனை வாழ்த்தும்போது 'எண்ணிறந்த காலம் வாழ வேண்டும்' என்று வாழ்த்துதற்கு எண்ணிக்கையில் அடங்காத மழைத்துளிகளையும் யாற்று மணலையும் கடற்கரை மணலையும் ஓர் எண்ணிக்கையாக வைத்து அதற்கு மேலும் வாழ்வானாக என்று வாழ்த்துதல் ஓர் இலக்கிய மரபு. அப்படி வாழ்த்தும்போது இடைச்சங்கமிருந்த கபாடபுரத்து வேந்தனாகிய பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் என்ற புலவர் பஃறுளியாற்று மணலினும் பலகாலம் வாழுமாறு வாழ்த்துகின்றார்.

"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறூஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்திற்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவி னெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

புறம் : 9

இப்பாடல் புறநானூற்றில் இடம் பெற்றிருக்கின்றது. ஒருவன் ஓர் அரசனை வாழ்த்தும் போது அழிந்த ஓர் ஆற்றின் மணலினும் பல ஆண்டு வாழ்வாயாக என்று வாழ்த்துவது மரபன்று; அது வாழ்த்து மாகாது நெட்டிமையார் என்ற புலவர், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்தும் போது சோழர்க்குக் காவிரி போல் பாண்டியர்க்கு அன்று குலக்கொடியாக இருந்த பஃறுளி ஆற்றைக் கண்டு அது பொதிந்த மணலைக் காட்டிலும் பல்லாண்டுவாழ்வாயாக என்று வாழ்த்தியிருக்கின்றார். இதனுல் இப்புறநானூற்றுப் பாடல் எழுந்த காலம் கபாடபுரம் இருந்த இடைச்சங்க காலம் என்பது தெளிவு.

முதற்சங்கத்து இருந்து தமிழாராய்ந்த புலவர் பெருமக்களுள் முரஞ்சியூர் முடிநாகராயரும் ஒருவராவார். இவர் பெருஞ்சோற்று தியன் சேரலாதனை வாழ்த்தியதாக ஒரு பாடல் புறநானூற்றில் இரண்டாவதாக இடம் பெற்றுள்ளது. இதனால் புறநானூற்றுப் பாடல்களில் பல, முதல், இடைச்சங்கப் பாடல்களாக அமைந்திருப்பதைக் காணலாம்.

தொல்காப்பியரும் அகத்தியனாரும் இடைச்சங்கத்திலிருந்து தமிழராய்ந்தவர்கள். தொல்காப்பிய இலக்கணத்திற்குப் பாயிரம் பாடிய பனம்பாரனாரும் அதங்கோட்டாசானும் தொல்காப்பியருக்கு ஒரு சாலை மாணாக்கராவர். இக்காலத்தைச் சார்ந்த பன்ம்பாரனார் என்பவர் பாடிய அகப்பாடல் ஒன்று குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது.

" ஆர்கலி மிகுந்த நீர்திகழ் சிலம்பில்
சூர்நசைந் தனையையாய் நடுங்கல் கண்டே
நரந்தம் நாறும் குவைஇருங் கூந்தல்
நிரந்து இலங்கு வெண்பல் மடந்தை
பரிந்தனன் அல்லனோ இறைஇறை யானே "

குறுந் : 52

இதனால் குறுந்தொகை போன்ற சங்கநூல்களில் இரண்டாம் சங்கத்துப் புலவர் பெருமக்கள் பாடிய பாடல்கள் இடம் பெற்றிருப்பதை அறியலாம்.

அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருள் இவ்விருவரும் அடங்குவர். ஆகவே, இவ்விருவரும் ஏனைய அகத்திய மாணாக்கர்களும் இடைச்சங்க காலத்தில் இருந்தவர்கள் என்பது தெளிவாகும். சங்க இலக்கியங்களில் ஒன்றாகிய குறுந்தொகை என்ற நூலில் பனம்பாரனார் பாடல் இடம் பெற்றுள்ளது போல இடைச்சங்க இறுதியிலும் கடைச்கங்க முதலிலும் இருந்த முடத்திருமாறன் பாடல்கள் நற்றிணையுள் (105, 228) காணக்கிடக்கின்றன.

புறநானூற்றில் ஊன் பொதிபசுங்குடையார் என்ற புலவர் சோழன் செருப்பாழ் எறிந்த இளஞ்சேட் சென்னியைப் பாடும் போது இராமாயண நிகழ்ச்சியை உவமையாகக் கொண்டு கூறியுள்ளார்.

" தென் பரதவர் மிடல் சாய
வடவடுகர் வாளோட்டிய
தொடையமை கண்ணித் திருந்து வேற்றடக்கைக்
கடுமா இடைஇய விடுபரி வடிம்பின்
நற்றேர்க் கள்ளின் சோழன் கோயில்
புதுப்பிறை யன்ன கதைசெய் மாடத்துப்
பனிக்கயத் தன்ன நீணகர் நின்றென்
அரிக்கூடு மாக்கிணை யிரிய வொற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பி னருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந்தோனே யதுகண்டு
இலம்பா டுழந்த வென்னிரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித் தொடக்குநரும்
செவித்தொடர் மரபின விரற்செறிக்குநரும்

அரைக்கமை மரன மிடற்றியாக் குநரும்
மிடற்றமை மரபின வரைக்கியாக் குநரும்
கடுந்தெற லிராம னுடன்புணர் சீதையை
வலித்தகை யரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை யிழைப்பொலிந் தாஅங்கு
அறாஅ வருநகை யினிது பெற் றிகுமே
இருங்கிளைத் தலைமை யெய்தி
அரும்பட ரெவ்வ முழந்ததன் றலையே" புறம். 378

இப்பாட்டில் இராவணனால் கவர்ந்து செல்லப்பெற்ற சீதை எறிந்த அணிகலன்களைக் குரங்குகள் கண்டெடுத்து, அவற்றை அணியும் முறை அறியாமல் விரலுக்கு உரியனவற்றைச் செவியிலும் செவிக்கு உரியனவற்றை விரலிலும், அரையில் கட்டுவனவற்றைக் கழுத்திலும், கழுத்தில் பூண்பனவற்றை அரையிலுமாக மாறி அணிந்தன என்ற அரிய இராமாயணச் செய்தியை உவமையாகக் கூறுவதைக் காணலாம்.

இந்த நிகழ்ச்சி வான்மீகி இராமாயணத்தில் காணப்படாதது. வான்மீகி இராமாயணத்தில் சுக்கிரீவன் இராமனை நோக்கி "இராகவா, என்னுடன் ஐந்து பேர் மலையடிவாரத்தில் நின்று கொண்டிருப்பதைப் பார்த்த சீதை மேலாடையையும், அணிகலன் களையும் கீழே போட்டாள். அவற்றை எடுத்துக் கொண்டு போய் நாங்கள் பாதுகாத்து வைத்திருக்கிறோம்" என்று கூறியதாகத்தான் கூறப்பெற்றிருக்கின்றது. ஆனால் தமிழில் அமைந்த இராமாயணங் களில் சீதையின் அணிகலன்களைக் குரங்குகள் கண்டெடுத்தன என்றும் அவற்றை அவை அணியும் முறை அறியாமல் அணிந்தன என்றும் கூறப்பெற்றிருக்கவேண்டும். இச்செய்தி நகைக்குரியதாகி நாட்டு மக்களிடம் உவமை சொல்லும் அளவிற்கு அடிபட்டுப் பழகிய செய்தியாக இருந்ததால்தான், தெரிந்த பொருள் வழித்தெரியாத பொருளுக்கு உவமை கூறிப் புறநானூற்றுப் புலவர் இதனை அமைத்திருக்கின்றார்.

இங்ஙனமே கடுவன்மள்ளனார் என்ற பழம்புலவர் இராமாயண நிகழ்ச்சி ஒன்றினை உவமை கூறுகின்றார். களவொழுக்கம் காரணமாக நிகழ்ந்த அலர், தலைமகன் வரைவு குறித்தஞான்று அடங்கியதற்கு உவமையாகத் தலைவி கூற்றால் இராமாயண நிகழ்ச்சி உவமையாக்கப்படுகின்றது.

இராமன் குரக்கினத் தலைவர்களோடு திருமறை காட்டுக் கோடிக்கரையின் ஓர் ஆலமரத்தடியிலிருந்து மந்திரம் இருந்தஞான்று பறவையினங்கள் பேரொலி செய்து இவர்கள் உரையாடலைத் தவிர்ப்ப, அதனைக் கண்ட இராமன் அவற்றின் ஒலியைத் தன் கடவுள் தன்மையால் அவித்த நிகழ்ச்சி பேசப்பெற்றுள்ளது.

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக்கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றால் இவ் வழுங்கலூரே" (அகம். 70)

தமிழ்ப் புலவர் பெருமக்கள் இடைச்சங்க காலத்தில் தமிழ்ச் சான்றோர்களால் ஆக்கப்பெற்ற இராமாயணத்தில் உள்ள இராமன் ஒலி அவித்த நிகழ்ச்சியை அலர் அவிந்ததற்கு உவமையாக்கக் கூடுமேல், இந்த நிகழ்ச்சி இந்த நாட்டில் மக்கள் பழக்கத்தில் எவ்வளவு பெரிதாய் அறிந்த ஒன்றாக இருந்திருக்கவேண்டும்? இதுபோன்ற நிகழ்ச்சி வான்மீகி இராமாயணத்தில் இல்லாமையே வான்மீகம் கம்பருக்கு முதல் நூல் அன்று என்ற கருத்தை அரண் செய்வதாகும். வான்மீகர் கூறியிருந்தால் கம்பர் அதனை விடவோ மாற்றவோ வேண்டா.

இராமாயண நிகழ்ச்சி இந்த நாட்டவருக்கு மிகமிகப் பழகிய செய்தியாதலால்தான் மணிமேகலையில் சாத்தனார் காயசண்டிகையின் பெரும்பசிக்கு உவமை கூறுகின்றார்.

"நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீரடைத்த ஞான்று
குரங்கு கொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை யளக்கர் வயிறுபுக் காங்கு"
- மணி. 17:9-21

இளங்கோவடிகளும் கோவலன் பிரிந்த காவிரிப்பூம்பட்டினத்திற்கு உவமை கூறும்போது,

—3

" பெருமகன் ஏவலல்லதி யாங்கணும்
அரசே தஞ்சமென் றருங்கான் அடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்
பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றம் "

-சிலம்பு புறஞ்சேரி : 63 : 66

என்று கூறியுள்ளார். "அருந்திறல் பிரிந்த அயோத்தி போல" என்ற உவமையை அக்காலத்து மக்கள் எளிதில் பயிற்சி காரணமாகப் புரிந்து கொள்வர் என்பதனாலன்றோ ?

இவ்வாறு இளங்கோவடிகள் உவமை கூறியது ஒருபுறமிருப்ப, இராமாயணநிகழ்ச்சிகள் இந்த நாட்டில் நீண்ட நாட்களாகப் பழகிப் பழகி அடிபட்ட செய்தி என்பதையும் இதன் வழி உணரலாம்.

தன் பிழை உணர்ந்து வருந்திய கோவலனுக்கு ஆறுதல் மொழி கூறப்போந்த கவுந்தியடிகள்,

" தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுத்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந் திலையோ நெடுமொழி யன்றே"

- ஊர்காண் : 46 : 49

என்று கூறுகின்றார். " நெடுமொழியன்றே " என்று கூறுவது கொண்டு நோக்கும் போது இராமாயணச் செய்திகள் நீண்ட காலமாக நம் நாட்டில் வழங்குவன என அறிந்து கொள்ளலாம்.

இதுகாறும் கூறியவற்றால் வான்மீகிக்கு முன்னர் இடைச்சங்க காலத்து வாழ்ந்த புலவர் பெருமக்கள் தம் காலத்திறகு முன்னர் நிகழ்ந்த இராமாயண நிகழ்ச்சியைத் தெளிவாகத் தெரிந்து பலப்திறப் பட்ட பாவடிவில் இராமகாதை செய்த செய்தியை அறிகின்றோம்.

இனி, வான்மீகி கூறாத எத்தனையோ இராமாயண நிகழ்ச்சிகளைத் தேவார ஆசிரியர்களும், ஆழ்வார்களும் பாடி யிருப்பதைக் காண்போம்.

திருஞான சம்பந்தர் தாம் பாடிய பதிகத்தின் எட்டாம் பாடல் தொறும் இராவணனைப்பற்றிப் பாடுகின்றார். புள்ளிருக்கு வேளூர் பதிகத்தில் வான்மீக இராமாயணத்தில் காணப்படாத ஒரு கதை நிகழ்ச்சியைக் கூறுகின்றார். சீதையை இராவணன் கவர்ந்து சென்ற ஞான்று அவள் அலறுதலைக் கேட்ட சடாயு என்ற புள்வேந்தன் இராவணனை எதிர்மறுத்துத் தகைக்கின்றான். இராவணனும் சடாயுவும் ஒருவருக்கொருவர் தம் உயிர் நிலை கூறிப்பொர ஒருப்பட்ட ஞான்று இராவணன் தனக்குள்ள உயிர் நிலை இதுவென்று சொல்லாது பொய் சொல்ல, புள்வேந்தன் தன்னுடைய உயிர்நிலை சிறகு என்று மெய் சொல்ல, இராவணன் தன் மந்திரவாள் கொண்டு அவன் சிறகைத் துணித்துப் புள்வேந்தனைக் குற்றுயிராக்கிச் சென்றான் என்று கூறப்பட்டுள்ளது.

"தையலா ளொருபாகஞ் சடைமேலாள் அவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோர் அந்தணனூர் உறையுமிடம்
மெய்சொல்லா இராவணனை மேலோடி ஈடழித்துப்
பொய்சொல்லாது உயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே"

–தேவா, 7ம் திருமுறை 35 பதிகம் திருப்புறம்பயம் 10:7573

இவர் போன்றே பத்தாம் பாடல்தொறும் இராவணனைப் பாடும் நாவுக்கரசர் தாம் பாடிய தேவாரத்தில் ஓரிடத்தில் இராவணன் கயிலையை எடுத்த நிகழ்ச்சி அனைத்தையும் முன்நின்று கண்டவர் போல் கூறுகின்றார்.

"கடுகிய தேர்செ லாது கயிலாயமீது கருதேலுன் வீரம் ஒழிநீ
முடுகுகவ தன்று தன்மமென நின்று பாகன் மொழிவானை நன்று முனியா
விடுவிடு வென்று சென்று விரைவுற் றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள்
நெடு நெடு இற்று வீழ விரலுற்ற பாதம் நினைவுள்ள தென்றன் மனனே"

தேவா, 4 ம் திருமுறை பதிகம் 14. பொது தசபுராணம்- 11:4302

இராமபிரானுக்கு வந்த தளர்ச்சியொன்றைச் சிவபிரான் தவிர்த்தாக அப்பர் அடிகள் பாடுகின்றார். இஃது எதுவென்று கம்பராமாயணத்திலோ வான்மீகத்திலோ விளக்கமில்லை.

" தளங்கிளரும் தாமரையா தனத்தான் கண்டாய் தசரதன் தன் மகன் அசைவு தவிர்த்தான் கண்டாய் "

- அப்பர் திருக்கொட்டையூர். 9ம் திருமுறை 13வது பதிகம் 9-6975

இராவணனை வாலி தன் வாலால் கட்டி ஒறுத்து வலியடக்கிய செய்தியைக் குறிப்பிடும் போது திருஞானசம்பந்தர் அவனுடைய இருபது தோள், அவற்றின் திறம் முதலியவற்றைக் கூறுகின்றார். மேலும், வாலியினுடைய சிவபக்தியையும் தெளிவாகக் குறிப்பிடு கின்றார்.

" நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடங்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே "

- சம்பந்தர். திருநெல்வாயிலறத் துறை 90பதி. 7:2448

பெரியாழ்வார் தாம் பாடிய திருமொழியில் அசோகவனத்தில் இருந்து சீதையிடம் இராமன் அனுமன் வாயிலாகத் தெரிவிக்கும்படிச் சொல்லியனுப்பிய அடையாளங்கள் பலவற்றுள் சீதையும் இராமனும் தனியாக விளையாடிக் கொண்டிருந்த போது இரவு நேரத்தில் சீதை இராமனை மல்லிகை மலர் மாலையால் யாத்த செய்தி ஒன்றைச் சொல்லுமாறு சொன்னதாக உள்ள செய்தியை,

" அல்லியம்பூ மலர்க்கோதாய், அடிபணிந்தேன் விண்ணப்பம்
சொல்லுகேன் கேட்டருளாய் துணைமலர்க்கண் மடமானே
எல்லியம் போ தினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில்
மல்லிகைமா மாலைகொண்டு ஆர்த்ததுமோரடையாளம் "

- திவ். பிரப. பெரியாழ்வார் - திருமொழி. நெறித்தகருங்குழல் 2: 319

என்று குறிப்பிடுகின்றார். இஃது எந்த இராமாயணத்திலும் இல்லாத தொன்று.

அடுத்து இராமன் கடல் அடைந்த போது ஆண்டுள்ள எல்லோரும் தம்மாலான உதவிகளைச் செய்தது போல ஓர் அணிலும் நீரிற் குளித்து நிலத்திற் புரண்டு தன் மேல் ஒட்டும் மண்ணை நீரிற் செலுத்திக் கடல் தூர்ப்பதற்குரிய செயலைத் தன்னால் ஒல்லும்வகை செய்த அந்த நிகழ்ச்சியைத் தொண்டரடிப்பொடி ஆழ்வார் தாம் பாடிய திருமாலையில்,

" குரங்குகள் மலையை நூக்கக் குளித்துத்தாம்
புரண்டிட் டோடித்
தரங்கநீ ரடைக்க லுற்ற சலமிலா வணிலும் போலேன்
மரங்கள்போல் வலிய நெஞ்ச வஞ்சனேன் நெஞ்சு தன்னால்
அரங்கனார்க் காட்செய் யாதே அளியத்தே னயர்க்கின் றேனே"

- திவ்.பிர தனியன் (திருமாலை 27) -898.

என்று பாடியுள்ளார். இந்த நிகழ்ச்சியும் இரு இராமாயணங்களிலும் இல்லாத ஒன்றே.

இது காறும் கூறிய செய்திகள் பழமை தொட்டுத் தமிழகத்தில் நிலவியனவாதலால், சங்கச் சான்றோர் தொடங்கி இளங்கோவடிகள், சாத்தனார் முதலிய சங்கம் மருவிய புலவர்களோடு, அவர்களை யடுத்து வந்த தேவார திருவாசக திவ்யப்பிரபந்த ஆசிரியர்கள் ஈறாகவுள்ள அனைத்துப் புலவர் பெருமக்களும் தத்துவப் பெரியோர் களும் இந்த இராமாயண நிகழ்ச்சிகளை நூல்வழித்தெரிந்தும் செவிவழிச் செய்திகளாகக் கேட்டுத் தெரிந்தும் மக்களுக்கு உவமை வாயிலாகவும் வருணனை வாயிலாகவும் கூறியுள்ளனர்.

இனி, வான்மீகி இராமாயணத்தினின்றும் கம்பராமாயணம் வேறுபட்டிருப்பது, கம்பர் தம் கற்பனையாலும் தமிழ் நாட்டவர்க் கேற்பத் தமிழ் மரபில் பாடவேண்டும் என்று வரைந்து கொண்ட தாலும் அன்று; வான்மீகிக்கு முன்னர் தமிழில் அமைந்து கிடந்த இராமாயண நிகழ்ச்சிகளை ஒட்டிப் பாடியதாலேயாம் என்பதைக் காண்போம்.

வான்மீகி இராமாயணத்தில் விசுவாமித்திர முனிவர் இராம இலக்குவரோடு மிதிலை சென்று சனகனால் வில்லின் வரலாறும் ஆற்றலும் கேட்டறிந்து, அவ்வில்லின் துணையால் சீதைக்குத் திருமணம் நிகழ இருப்பதையும் அறிந்து, வில்லை இராமனுக்குக் காட்டுமாறு சனகனிடம் கூற, அந்த வில்லை இராமன் எளிதாக எல்லோரும் காண எடுத்து ஒடித்து விடுகின்றான் பின்னர் இராமனுக்கும் சீதைக்கும் திருமணம் நடக்கின்றது அத்திருமணக் காலத்தில்தான் சீதையை முதன்முதல் இராமன் பார்க்கின்றான்.

வான்மீகி கூறும் இந்த வரலாறு கம்பராமாயணத்தில் வேறு விதமாக அமைந்துள்ளது. அஃதாவது விசுவாமித்திர முனிவரோ டும் இலக்குவனோடும் இராமன் மிதிலைவீதிவாய்ப் போகும்போதே

சனகனுடைய மாளிகையின் மேல்நிலையில் நின்ற சீதையைக் கண்டு, அஃதாவது ஒருவரை ஒருவர் நோக்கெதிர் நோக்கி உள்ளங் கலந்து ஒருயிராகின்றனர். இதனை,

"எண்ணரு நலத்தின ளிணையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறு துணர்வு மொன்றிட
அண்ணலும் நோக்கின னவளு நோக்கினள்

"பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்த முள்ள மீர்த்தால்
வரிசிலை யண்ணலும் வாட்கணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதயமெய்தினர்"

- பால. மிதிலைக்காட்சிப் 36:37

என்று கம்பர் அச்செய்தியை மிக விரிவாகப் பல பாக்களில் பாடுகின்றார். இப்படலத்தைப் பல ஏட்டுச் சுவடிகளில் "கைக் கிளைப் படலம்" என்று குறிப்பிட்டு இருப்பது இதனை வலியுறுத்தும்.

எனவே, கம்பராமாயணத்தின்படி சீதையை முன்னமே கண்டு காமுற்ற இராமன், பின்னர் வில்லையொடித்து மணங் கொண்டான் என்ற செய்தி வான்மீகத்தினின்றும் மாறுபட அமைந் திருப்பதற்குக் காரணம் கம்பர் தமிழ் மக்களுக்கேற்பக் "கற்பெனப்படுவது களவின் வழித்தே" என்ற தொல்காப்பிய நூற்பாவின் அடியொற்றிக் களவு மணங் கூறிக் கற்பு மணம் கூறுகின்றார் என்றும், அவர் கற்பனை வளத்தால் தமிழ் மரபோடு ஒட்டிப் பாடிவிட்டார் என்றும் புலவர் பெருமக்கள் (மு. இராக வையங்காரைத் தவிர) கூறி அமைதி கண்டார்கள் ஆனால் கம்பர் தமக்குமுன், அஃதாவது இடைச்சங்க காலத்திலிருந்த தமிழ்ச் சான்றோர்கள் செய்த இராமாயணத்தில் அமைந்து கிடந்த கதைநிகழ்ச்சியின்படிக் காதல் மணமாகப் பாடினாரேயல் லாமல் தாமாகக் கற்பித்துக் கொண்டு பாடவில்லை என்பது,

"ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்
வேள்வி போற்றிய இராமன் அவனொடு
மிதிலை மூதூர் எய்திய ஞான்றே
மதியுடம் பட்ட மாக்கட் சீதை

கடுவிசை வில்ஞாண் இடியொலி கேளாக்
கேட்ட பாம்பின் வாட்டம் எய்தித்
துயிலெழுந்து மயங்கின ளதான்று"

இப்பாவால் அறியக்கிடக்கின்றது. இது தொல்காப்பியத்தில் கைக்கிளைத் திணைக்கு நச்சினார்க்கினியரால் எடுத்துக் காட்டாகக் காட்டப்பெற்றுள்ளது. இதனைத் துணைக்கொண்டே கம்பர் இக்கதைப் பகுதியை விரித்துரைக்கின்றார்.

மதியுடம்பாடு என்பது ஒருவர் உள்ளத்தை மற்றவர் அறிவது ஆகும். மெய்ப்பாட்டால் சீதையும் இராமனும் ஒருவரையொருவர் காமுற்றுக் கலந்ததைக்குறிக்கும் ஒரு சொல் இங்கு மதியுடம்பாடு என்று கையாளப்பெற்றுள்ளது. இராமன் துணையினால் வேள்வி முடித்த விசுவாமித்திர முனிவர் இராம இலக்குவரை அழைத்துக் கொண்டு மிதிலைக்குச் செல்லும்போது சனகனுடைய அரண்மனையின் அரமியத்து நின்ற சீதையை இராமன் கண்டு காமுறச் சீதையும் மதியுடன் படுகின்றாள். இராமனிடத்தில் தன் மனம் போக்கிய சீதை தன் தந்தை வில் ஒடிப்பவனுக்கே தன்னைத் தருவதாக வைத்திருக்கின்ற கோட்பாட்டினைத் தெரிந்து முன் கூட்டியே தான் இராமனைக் காதலித்தது குறித்துப் பெரிதும் துன்புறுகின்றாள். இப்பொழுது கண்ணாற் கண்டு காமுற்றவனை மணப்பதா அல்லது தந்தையின் ஆணையின் வழி நின்று வில் ஒடிப்பவனை மணப்பதா என்ற போராட்டத்திற்கிடைக்கிடந்த சீதையின் காதில் வில் இற்ற பேரொலி கேட்டது அப்பொழுது அவள் தான் கண்டு காதலித்தவனுக்கு வேறாக யாராவது வில் லிறுத்திருந்தால் என் செய்வது என்று தவிப்பதை இடியோசையைக் கேட்ட பாம்பு எங்ஙனம் உயிர்கழியத் துன்புறுமோ அங்ஙனம் துன்புற்றாள் என்று இப்பழம்பாடல் கூறுகின்றது.

இப்பாட்டு "அதான்று" என்று தொடர்கின்றது. எனினும் அதன் தொடர்ச்சி நமக்குக் கிடைக்கவில்லை. தொல்காப்பிய நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் இப்பாட்டினை மேற்கோளாகக் காட்டிய காலத்தில் இவ்விராமாயணம் இருந்திருக்கின்றது. அதனால் கம்பர் பழந்தமிழ் இலக்கியங்கள் கூறியதைக் கூறினாரேயன்றி, தமிழ் மரபிற்காக மாற்றவில்லை.

இன்னும் தொல்காப்பியர் நூற்பா செய்த காலத்தில், இலக்கியங்கண்டு இலக்கணம் செய்தாராகலின் இராமாயண நிகழ்ச்சியையும் அதுபற்றிய இலக்கியத்தையும் மனத்திற் கொண்டே

செய்திருக்கின்றார் என்று துணிய இடமுண்டு. "கொள்ளார் தேயம் குறித்த கொற்றமும்" (தொல்: புறத்-67) என்ற நூற்பாவிற்கு நச்சினார்க்கினியர் உரைவிளக்கம் தரும்போது "இராமன் இலங்கை கொள்வதன் முன் விடணற்குக் கொடுத்த துறையுமிது" என்று குறிப்பிடுகின்றார். இராமனது இத்தகைய வீரத்தை மனத்தாற் கொண்டே தொல்காப்பியர் நூற்பா எழுதினார் போலும். இவை போன்று இராமாயண நிகழ்ச்சிகள் பலவற்றை உளங்கொண்டு தொல்காப்பியர் நூற்பா யாத்துள்ளார் எனக் கருத இடமிருக்கின்றது. நச்சினார்க்கினியர் "அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்" என்ற நூற்பாவுரையில் நூல்கள் பலவற்றைக் குறிப்பிடும் போது, "எழுத்துஞ் சொல்லும் பொருளும் இம்மைப் பயன் தருதலின் அகத்தியம் தொல்காப்பியம் முதலிய தமிழ் நூல்களும் இடையாய ஓத்தாமென்றுணர்க. இவை எல்லாம் இலக்கணம், இராமாயணமும் பாரதமும் போல்வன இலக்கியம்" என்கின்றார் (தொல். புறத்திணை-20). நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரை எழுதும் போது இராமாயணமும் பாரதமும் ஆசிரியப்பாவடிவில் இருந்திருக்கின்றன.

இவ்விளக்கம் கொண்டு தொல்காப்பிய இலக்கணத்திற்குப் பழந்தமிழர் இயற்றிய இராமாயணம் இலக்கியமாய் அமைந்திருப்பதை உணரலாம். அகத்தியர் ஓர் இராமாயணம் செய்தார் என்பது இக்கூற்றிற்கு அரண் செய்யும்.

கம்பர் வான்மீகி இராமாயணத்தைப் பின்பற்றாமல் தமிழ்ச் சான்றோர்களின் கற்பனையற்ற உண்மை இராமாயணங்களையும் இலக்கியங்களையும் பின்பற்றித்தான் பாடினார் என்பதற்கு மற்றுமோர் எடுத்துக்காட்டு உண்டு.

வான்மீகி ராமாயணத்தில் அகலிகையினுடைய வரலாறு பேசப்பெற்றுள்ளது. அங்குக் கோதம முனிவன் வடிவில் இந்திரன் வந்து அகலிகையை மருவி அவ்வடிவிலேயே மீண்டான் என்றும், கோதம முனிவன் இந்திரனைப் போலி முனிவன் வடிவிலே கண்டான் என்றும் கூறப்பெற்றுள்ளது. இந்திரனின் வஞ்ச முணர்ந்த முனிவன் "இந்திரா, நில்" என்று தடுத்தபோது அவன் தன்னுருக் கொண்டுநிற்ப, முனிவன் அவனை ஒறுத்தான் என்று பேசப் பெற்றுள்ளது.

இந்நிகழ்ச்சி கம்பராமாயணத்தில் வேறுபட்டுள்ளது. அஃதாவது அகலிகையிடம் இந்திரன் கோதமன் வடிவிற் சென்று

அவள் அறியாவகை அவளை வஞ்சித்து மருவ, அதுபோது ஆண்டுக் கோதமன் வரக்கண்டு நடுங்கிய இந்திரன் ஒரு பூனை வடிவெடுத்து முனிவன் காணாவகை மறைந்து செல்ல அச்சூழ்ச்சியறிந்த முனிவன் அவனைத் தடுத்து ஒறுக்கின்றான்.

வான்மீகர் உரையின்படிக் கம்பர் பாடியிருந்தால் பூனை யொன்று குறுக்கே ஓட வாய்ப்பில்லை. இப்பூனையின் குறுக்கீடு தமிழர் பண்பாட்டை வளர்ப்பதற்காகவோ சிறப்பிப்பதற்காகவோ கம்பர் பாடியதன்று; தமிழ்ச்சான்றோர்கள் கூறிய இலக்கியங்களில் கண்ட இராமாயண நிகழ்ச்சிக் குறிப்பாலேயாம்.

திருப்பரங்குன்றத்துக் கோயிலில் எழுதப்பெற்றிருந்த ஓவியங் கள் பலவற்றைத் தன் காதலிக்குக் காட்டிவந்த தலைவன் ஒருவன் ஆண்டு எழுதப்பெற்றிருந்த இராமாயணம் பற்றிய நிகழ்ச்சி யொன்றை அவளுக்குக் காட்டுவதாகப் பரிபாடலில்,

“ இந்திரன் பூசை இவள் அகலிகை இவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படி இது என்றுரை செய்வோரும்”

பரிபாடல் 19:50 - 52

என்று வரும் அடிகள் கம்பர் இந்திரன் பூனையான நிகழ்ச்சியைப் பரிபாடலிலிருந்து வாங்கிப் பாடினார் என்பதைக் காட்டுமே யல்லாது எதற்கோ மாற்றிப் பாடினார் என்பதைக் காட்டாது.

இவற்றையெல்லாம் கூர்ந்து பார்த்தால் இதுகாறும் நாம் கண்டுவந்தாங்குக் கம்பர் வான்மீகி முனிவருக்கோ, வடமொழி யாளர்கட்கோ எவ்வாற்றானும் கடமைப் பட்டவர் அல்லர் என்பது தெளிவாகும். பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த தமிழ்ப் பெருமக்கள் தம் நிலக்கடவுளான மாயோனின் பிறப்பொன்றின் பெருஞ்சிறப்பினை அறிந்து காவியமாக்கி மக்கட்கு வீரத்தையும், நல்லொழுக்கத்தையும். விதிவலியையும் காட்டிப் பலகால் கூறி அடிபட்ட செய்தியை எவ்வளவோ காலத்திற்குப் பின் நாரதமுனிவர் வான்மீகி முனிவருக்குக் கூற அதனைக் கேட்டு அவர் காவியம் செய்தார் என்று கொள்ளுதல் பொருத்தமாகுமேயன்றிக் கதைக்கும் மற்றவற்றிற்கும் வான்மீகியை உரியராக்கிக் கம்பர் காவியம் பாடினார் என்பது பொருந்தாது வான்மீகியே இராமாயணக் கதை நிகழ்ச்சி முழுவதற்கும் முதல்வர் என்றால் கம்பர் இத்தகைய பெரு

மாற்றங்கள் செய்திருக்க வாய்ப்பில்லை. இஃது ஒன்றே வான்மீகி முனிவருக்கும் கதை தந்தோர் தமிழ்ச் சான்றோர் என்பதற்குத் தக்க சான்றாகும்.

வான்மீகி ராமாயணத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் உள்ள ஒற்றுமைகளைக் கொண்டு வான்மீகியைப் பின்பற்றிக் கம்பர் பாடினார் என்றால், வான்மீகிக்கும் கம்பருக்கும் உள்ள வேற்றுமைகளைக் கொண்டு வான்மீகியைக் கம்பர் பின்பற்றவில்லை என்று ஏன் கூறக் கூடாது? வான்மீகி இராமாயணத்திற்கும் கம்பராமாயணத்திற்கும் உள்ள ஒற்றுமைகளைக் காட்டிலும் வேற்றுமைகள் தாம் மிகுதி என்பதைப் படலம், கதை நிகழ்ச்சி, உறுப்பினர் பண்பாடு போன்றவற்றில் இனிக் காண்போம். இச்செய்தி கொண்டு கதைக்கு அடிப்படையாகக் கம்பர் வான்மீகத்தைக் கொள்ளவில்லை என்னும் உண்மை உறுதி பெறும்.

## திருமாலும் தென்னாடும்

திருமால் வழிபாடு இந்த நாட்டில் என்று தோன்றிற்று என்று யாராலும் வரையறுத்துக் கூறமுடியாது.

திருமால் இந்த நாட்டிற்கு எத்துணை காலத்திற்கு முந்திய பழந்தெய்வம் என்பதனைப் பரிபாடல்,

“ தொன்முறை இயற்கையின் மதியொடு . . . . மரபிற்றாகப்
பசும்பொன் உலகமும் மண்ணும் பாழ்பட
விசும்பில் ஊழி ஊழூழ் செல்லக்
கருவளர் வானத்து இசையில் தோன்றி
உருவறி வாராவொன்றன் ஊழியும்
உந்துவளி கிளர்ந்த ஊழூழ் ஊழியும்
செந்தீச் சுடரிய ஊழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய ஊழியும் அவையிற்று
உள்முறை வெள்ளம் மூழ்கி ஆர்தருபு
மீண்டும் பீடுயர் பீண்டி அவற்றிற்கும்
உள்ளீ டாகிய இருநிலத்து ஊழியும்
நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டம் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி ஒருவனை உணர்த்தலின் முதுமைக்கு
ஊழியாவரும் உணரா
ஆழிமுதல்வ நிற்பேணுதும் தொழுதும் ”

- பாடல் 2

என்று கூறுவதால் அறியலாம். இப்பாடல் அவுணர்களை அழித்த போரைக்குறித்த பழம்பாடல், அஃதாவது இராமாயண காலத்திற்கு முந்திய பாடல் அதனால்தான் திருமால் செய்த கொடிய பல போர்களைக் குறித்தவர் இராவண வதையைக் குறிக்கவில்லை.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நிகழ்ந்த போரில் திருமால் தேவர் பக்கம் இருந்து அவுணர்களைத் தோற்கடித்துள்ளார். இச்செய்தியை இப்பாட்டில் இப்பாடலாசிரியர் குறிப்பிட்டுள்ளார். இப்போருக்குப் பிறகுதான் இராமாயணப் போர், மாபாரதப்போர் முதலியன நிகழ்ந்துள்ளன. இப்பாட்டில் இராமாயணப்போரும், மாபாரதப்போரும் குறியாது, தேவாசுரப்போர் குறித்தது கொண்டு திருமால் இந்த நாட்டுக்கு எவ்வளவு காலம் பழமை யான தெய்வம் என்பதைக் காட்டற்கேயாம்.

முருகப்பிரான் சூரபதுமனோடு செய்த போரும் உண்டு. இப்போரும் இராமாயணப் போருக்கு முந்தியது. முருகனுக்கும் சூரபதுமனுக்கும் நிகழ்ந்த போர் பற்றிய செய்தியைப் பரிபாடல் கூறுகின்றது.

" பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தம ருழக்கித்
தீயழல் துவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசூர் மாமுதல் தடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கொன்றுணல் அஞ்சாக் கொடுவினை கொஃறகை
மாய அவுணர் மருங்கறத் தபுத்த வேல்
நாவலந் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து
மலைபாற்றுப் படுத்த மூவிருகயந்தலை
மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத் தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்

பரிபாடல்-5

முருகப்பிரானும், பரசுராமனும் சிவபெருமானிடம் வில்வித்தை கற்ற வர்கள். இராமன் மிதிலையில் சீதை காரணமாக வில்லிறுத்த செய்தியறிந்த பரசுராமன் அரச மரபினோர் பழிதீர்த்து முடிந்த பின்னும் தன்னாசிரியன் வில்லை ஒரு அரசமரபினன் ஒடித்தான் என்ற பழிச்சொல்லை நீக்க, இராமனிடம் போருக்கு வந்த செய்தியை இராமாயணம் கூறும். அதனால் முருகன் சூரபதுமனோடு செய்த போர், இராமாயணப் போருக்கு முந்தியது.

இராவணன் பாட்டன் மாலியவான் முதலிய அரக்கர்களை இலங்கையினின்றும் பாதலத்திற்கு விரட்டிய போது, திருமால் அரக்கர்களோடு செய்த போரும் இராமாயணத்திற்கு முந்தியது. அதனால் தான் தொல்காப்பியர்,

"வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பைப்" பற்றிப் பேசும் போது, அந்நில எல்லையை நானிலமாகப் பகுத்து அதில் ஒவ்வொன்றிற்கும் தெய்வம் குறிக்கும் போது முல்லை நிலத்திற்குத் திருமால் தெய்வமென்பதை,

"மாயோன் மேய காடுறை உலகமும்"

என்கின்றார்.

இத்தெய்வப்பகுப்புத் தொல்காப்பியர் தாமாக வகுத்துக் கொண்டதன்று. இவருக்கு ஆசானாக இருந்த அகத்தியர் உள்ளிட்டோர் கபாடபுரத்திலும், தென்மதுரையிலும் சங்கம் அமைத்துத் தமிழ் ஆராய்ந்து கொண்ட முடிபாகும். அதனால் மாயவன் என்னும் திருமாலும், சேயோனாகிய முருகனும், இந்திரனும் வருணனும் நானிலங்கட்குக்காவல் தெய்வமாகி நின்று காத்தல் காரணமாக அவர்கள் தெய்வமாய் இலங்கிய செய்தியைத் தொல்காப்பியர் தாமறிந்த வண்ணம்

"மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் லுலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

தொல்-அகத்-5

இந்த நாட்டு மக்கட்கு இவர்கள் பழங்காலத் தெய்வங்களாய் வேதகால நாகரிகத்திற்கு முந்தி இருந்ததை அறியலாம்.

"இப்பொழுதுள்ள உயிரினப்படைப்பு தொடங்கி இருபத்தேழு சதுர்யுகங்கள் கடந்து இருபத்தெட்டாம் சதுர்யுகம் நடக்கின்றது. இப்படைப்புக்களில் வந்த ஆறு மனுக்கள் இறந்து ஏழாம் மனுவின் முதல் மனித இனம் இப்பொழுது தொடர்ந்து வருகின்றது. பாகவதத்தில் மைத்திரேயர் விதுரற்குத் தத்துவ முரைத்த பகுதியில்,

"பற்றில் பண்ணவர் பற்றும் பரமனுக்கு
உற்று நோக்கின் உருக்குணம் இல்லையென்று

அற்றம் நீக்கும் அருந்தவன் சொற்றலும்
வெற்றி வேற்கை விதுரன் விளம்புவான் "

" உந்திநான் மலர்மேல் அயன் உற்றதும்
சிந்தை கூர்தவம் செய்து படைத்ததும்
பந்த நீங்கு காலத்தின் பகுதியும்
வந்து தீங்கற மாயவன் காத்ததும் "




" துதிசெய்யும் சுரராதியர் தோற்றமும்
மதியின் மிக்க மரீசி முதலியர்
பதின்மர் வந்து படைத்த பகுதியும்
விதிஅளித்த மனுச்செய் விருப்பமும் "

" மனுவின் நன்னர் மரபும் வெம்மாயையும்
நினைவரும் பெரு அநித்திய ஞானமும்
முனிவில் வண்மை முனிவ மொழியுமென்
வினையற விளிம்பென்ன விளம்புவான் "

-மூன்ரும் கந்தம். 27 28. 29. 30

மரீசி முதலியோர் படைப்புரைத்த அத்தியாயத்தில்,

" ஆதியின் மனுவில் தோன்றி ஆய்மறை
ஓதிய ருசியினை மணந்த வொண்டொடி
மேதகு வெள்ளியம் புருடன் தன்னொடு
மேதை தக்கினை எனும் அணங்கைப்பெற்றனன் "

" அன்ன பன்னிருவரும் ஆதியாம் மனு
மன்னவன் காலம் வானவர்க ளாயினர்
சொன்ன அக்காலம் அம்மனுவில் தோன்றினுய்
பன்னகஞ் சுமந்தெழு பால ராயினர் "

-நாலம் கந்தம் 1, 12.

மனுக்களை உரைத்த அத்தியாயத்தில்,

" முறை விளையாட நீதிமுடிபுனை மக்கள் தம்மை
இறை விளையாடல் எல்லாம் இயம்புதி என்ன போற்றி
நறை விளையாடும் தார்வேல் நரபதியுரைப்ப நான்கு
மறை விளையாடு நன்ஞ மாதவன் வழங்கு மாதோ"

" ஆதிமா மனுவின் காலத்து அமலன் நல்விளையாட்டெல்லாம்
ஓதினேம் அரச மற்றும் ஒழிந்த மாமனுவின் காலத்து
ஏதமில் முனிவர் விண்ணேர் இந்திரன் இவர்கள் என்று
சோதிமால் தோற்றுமாறு சொல்வதும் கேட்டி மாதோ "

" இயம் பிரண்டாஞ்சீர் மனுவினை உரைக்கினில் அங்கும்
அக்கினிமுன்னின்ற
நயந்தரு சுவாரோசிடன் அவன் உலகநவை அறக்காக்கும்
வயந்தரு வேதசிரசினை மணந்த மதிநுதல் துடிதை
ஈன்றெடுத்த
பயன்தரு துடிதராதியர் அமர் பரமன் நல்விபுவென
உதித்தாள் "

எட்டாம் கந்தம். 10, 11, 12

" சொல்லும் அம்மனு மூன்றும் மிடுங்காலைச் சுடர்விரி
மூக்கினின் றுதித்த
நல்லெழில் இக்குவாகு என்றுரைப்போன் நவை அற
உரைத்த மைந்தர்கள்தாம்
செல்லுறழ் தடக்கை விருக்கியோடு அருஞ்சீர் சேர் நிமி
தண்டகன் முதலாம்
எல்லையில் திறவார் நூற்றுவர் என்பர் இயம்பு மன்னோகளின்
விழுக்கி "

ஒன்பதாம் கந்தம் 5

என்று கூறப்பட்டுள்ளது.

இவ்விருட்சி என்பான் ஒரு தவறு செய்ய அது காரணமாகக் கான்போய்ச் சிலகாலம் வாழ்ந்து, தந்தை விண்ணகம் புகுந்தபின் அரசியலை ஏற்றுப் புரஞ்சயன் என்பானைப் பயந்தான். இவன் மகனே ககுத்தன் என்பவன். இதனை,

" இயம்பும் அம்மன்னர் ககுத்தன் என்பெயரும் சிந்திர
வாகனன் எனும் ஓர்
அயன்தரு பெயரும் அடைந்தனன் அடைந்தவாறு
என்காரணமென்னின்
தயங்கொளி விண்ணோர் தானவர் வெருட்டித்த மணியப்
பதியிழந்தோடி
அயன்தொழும் திருமாலடியினை வணங்க அன்னவன்
அமரருக்கறைவான் "

ஒன்பதாம் கந்தம் 10

என்பதால் அறியலாம். சிவன், இந்திரனை விடையேறாக் கடந்ததும் அவனுக்குப் பிருது என்பான் பிறந்ததும் பின்னர் மாந்தாதா வந்ததும், உபரிசரன் போன்றோர் வந்த வரலாறும் தொடர்ந்து கூறுகின்றார்.

தசரத இராமன் பிறப்பைக் கன்மாடபாதன் கதையுரைத்த அத்தியாயத்தில்,

" திசைவிளங்க நல்லறத்தினை நிறுவிய செங்கோல்
இசை தரும்படி செலுத்திய ரகுவெனும் இறைவன்
அசனெனும் பெயர் அரசனை அளித்தனன் அசனும்
தசரதன் தனைத் தந்தனன் மூச்சகம் தளிர்ப்ப "

" அன்னவன் ஈன்ற மைந்தன் என்றுரைப்ப அமரருக்கருள் தரவேண்டிக்
கன்னியந்துளவோன் தன் கலையானும் கலைகளின் கலைகளினாலும்
மன்னிய இராமலக்குவன் பரதன் வையகம் பராவு சத்துருக்கன்
என்னுமிந் நால்வராகி வந்து ஏழோடு ஏழ உலகாண்டனன் என்றான் "

ஒன்பதாம் கந்தம் 6. 7

வேதவியாசர் இயற்றிய பாரதத்தில் கூறப்பெறும் பாரதப் போருக்குப் பெருஞ் சோற்றுதியன் என்ற சேரன் சோறு வழங்கினான் என்றும், பாண்டியன் ஒருவன் ஐவரொடு நின்று பொருது வெற்றி கொண்டான் என்றும் தமிழ்நூல்களும், புராணங்களும் கூறுவதால் வடமொழி முதிர்ந்து செம்மையான காலம், தமிழர்கள் கூறும் இடைச் சங்ககாலம் என்பதற்குப் பிந்தியது என்பது தெளிவு.

இந்தப் பாரத காலம் கிருஷ்ணாவதாரத்தோடு பொருந்தியது. இந்த நாகரிகத்திற்கு முன்னர் இருந்து அழிந்தவை மொகஞ்சதாரோ, ஹாரப்பாநாகரிகம் திராவிடநாகரிகம் ஆகியவை. இவற்றின் தொடர்ச்சியே சோழமரபினர் நாகரிகம் என்று கோடல் வேண்டும். எனவே பாரத காலத்திற்கு முற்பட்டது சோழர் மரபு என்று அறியப்படும். பாரதப் போரில் சோழன் ஒருவன் பாண்டியன் ஒருவன் பாண்டவர்க்குத் துணை நின்ற செய்தியை,

" குன்றின் . . . . . . . .
அன்று வருகுட காவிரி நாடனும்
அம்பொன் வரிகழல் மாகதர் கோவுமே.

கங்கை நதியிடை வேயெடு பாகுஅடர்
கம்ப நிகள மதாசலம் நீருண
வங்க மறிகடல் சூழ்எழு பார்வலம்
வந்த மனுகுல சோழனை மாகதன்

- வில்லி. பார. 17ம் போர் 65, 66

பிறைமுடிச் சடையவன் பிள்ளை வள்ளுகிர்
விறலுடைப் புலிக்கொடி வீரன் மெய்யெலாம்
புறவினுக்கு அரிந்தநாள் போல் மேல் விடும்
திறலுடை வாளியால் சிவப்பித்தான் அரோ.

- 128, 134, பதினெட்டாம் போர் 1 6

---

## தமிழ் மக்களின் தொன்மை

கருணாமிர்த சாகரம் மு ஆபிரகாம் பண்டிதர். பதிப்பு 1917.

### சத்திய விரதனது கப்பலும் மலயமலையும்

The Tamilian Antiquary by Pandit D. Savariroyan MRAS.

"Before this diluvial catastrophe, the Western Ghats were known as the Northern Mountains, in relation to the southern land which submerged by the ocean. The Satapata Brahmina relates that the ark of manu rested in the Northern mountains and the Puranas mention that he, the "Lord of Dravida, underwent austere penance in the Malya. The Mahabaratha and the Purana give an account of seven other Rishis who accompanied manu and settled in the new colony. This indicates the advent of other clans led by the other Rishis who followed the footstep of the Lord Dravida. Thus it appears that the Tamilian race that settled in the Pandu land belonged to these eight Rishis or Prajapatis, one of whom was the famous Rishi Pulastya of the extreme south, from whom were decended Agastya, the Tamil Muni and Ravana, the King of South.

The Satapata Brahmina, in which the story of Manu first occurs does not mention the name of rhe Northern mountains. However there is ample evidence in the Puranic accounts to identify the ' Northern Mountains with the Western Ghats and the particular spot on which the ark rested with Malya.

ஜலப்பிரளயத்தினால் நேரிட்ட இந்த விபத்துக்குமுன் கடலால் மூடப்பட்டு அழிந்த தென் தேசத்தைப் பற்றிச் சொல்லுமிடத்தில் மேற்குக் கணவாய் மலைகளில் வடக்கே உள்ள மலைகள் என்று சொல்லுகிறது. "சதாபத பிராமணம்" என்ற நூலில் மனுவின் பேழையானது வடக்குமலைகளில் தங்கினதாயும், புராணங்களில் "திராவிட அதிபதி" மலையமலையில் கொடுந்தவம் புரிந்ததாயும் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு ஏழு ரிஷிகள் மனுவுடன் அவர் புதிதாய்க் குடியேறின இடங்களில் அவருடன்கூடச் சென்றிருந்ததாக மகாபாரதமும் புராண நூல்களும் கூறுகின்றன. இதனால் என்ன வெளியாகிறதென்றால் திராவிட அதிபதி செய்ததுபோல் மற்ற ரிஷிகளால் வழிநடத்தப்பட்டு மற்ற ஜாதிகளும் புதுக்குடியேறினார்கள் என்பதுதான். இவ்விதமாய், பாண்டிதேசத்

தில் குடியேறின தமிழர்கள் மேற்சொன்ன எட்டு ரிஷிகள் அல்லது பிரஜாபதிகளைச் சேர்ந்தவர்களாயிருக்க வேண்டுமென்றும் அவர்களில் ஒருவர் தென் கோடியில் வசித்த பேர்போன புலஸ்திய ரிஷி என்றும் தெளிவாகிறது. இந்தப் புலஸ்திய ரிஷி வழியில்தான் தமிழ் முனியாகிய அகஸ்திய ரிஷியும் தென் தேசத்தரசனாகிய இராவணனும் தோன்றினார்கள்.

மனுவின் சரித்திரம் முதல்முதல் சொல்லப்பட்டிருக்கிற நூலாகிய சதாபத பிராமணத்தில் வடக்கு மலைகளைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை என்றாலும் வடக்கு மலைகள் மேற்குக்கணவாய் மலைகள்தாம் என்பதற்கும் பேமை தங்கின இடம் 'மலயம்'' என்பதற்கும் புராணங்களில போதுமான ஆதாரங்களுண்டு.''

மேற்கண்ட சில வரிகளில் திராவிட தேசத்தரசனாகிய சத்திய விரதன் ஜலப்பிரளயத்துக்குத் தப்பும்படியாக ஏறிச்சென்ற கப்பல் அதற்கு வடதிசையிலுள்ள மலயமலையில் ரிஷிகளுடன் வந்து தங்கினதாகக் காண்கிறது. மலயம் என்பது பொதிகை மலைக்குப் பெயர். கிருதமாலாநதியென்பது இக்காலத்தில் இல்லாத நதியென்று சரித்திரக்காரர் சொல்லுகிறார்கள். மதுரைக்கருகிலுள்ள வைகைநதிக் கரையில் திராவிட தேசத்தரசனாகிய சத்தியவிரதன் தவம் செய்து கொண்டிருந்தான் என்பது பொருந்தாது. மேலும் மலயமலை என்பது உத்தர மதுரைக்குத் தெற்கிலுள்ள மலையாகுமே யொழிய வடக்கிலுள்ள மலையாக மாட்டாது. ஆனால் மேற்றிசை மலைகளில் உற்பத்தியான குமரியாறு தென்பாண்டி நாட்டிற்கு வடவெல்லையாய் நின்று அழிந்து போனது போல, கிருதமாலாநதியும் பொதியமலையி லுற்பத்தியாகித் தென்மதுரைக்கு அருகில் ஓடிக்கொண்டிருந்து சத்தியவிரதன் தவஞ்செய்வதற்கேற்ற இடமாயிருந்து பின்பு அழிந்து போயிருக்கவேண்டும். அப்படியானால், தென்னிந்தியாவிற்கு வெகுதூரம் தெற்கேயிருந்த தென் மதுரை கடலால் அழிக்கப்பட்ட காலத்தில் அங்கிருந்த சத்திய விரதன் என்னும் திராவிட தேசத்தரசன் கப்பலேறித் தென் மதுரைக்கு வடக்கிலுள்ள மலயமலைக்கு வந்து சேர்ந்தானென்று சொல்லுவதே பொருந்தும்.

Essays by S. V. Thomas, M.A., page No. 84.

"The earliest mention of Cape Comorin by European writers is contemporaneus with the time of Alexander the Great. We have reason to believe that so early as the time of the Periplus the Cape was already famous as a sacred shrine of the Hindus. The temple was dedicated to Siva's wife called Kumari, or young woman as emblematic of eternal youth and beauty. It is impossible to decide the precise site of the ancient temple seen by the Greek sailors. There are at present 3 temples at Cape Comorine one is in complete ruins, and the sea is everyday swallowing it up. This is probably the ancient of three. Another is situated on an elevated rock the foot of which is constantly washed by the waves. The temple is antique in appearance and structure, but is dedicated evidently to Siva's son, not wife, as it contains a rude stone image of Ganesa. The third is the temple which pilgrims now go to visit. This has a comparatively modern look about it.

It is very probable that the most ancient temple has been buried under the sea, and that when encroachments of the sea were arrested by the solid rocks that now stands out to check its progress another temple was built and dedicated to the same goddess. This view is supported by the report that is current among the fishermen living in the neighbour hood. They say that in 1883 when the Green Sun perplexed the scientific world, the sea receded all of a sudden some furlongs that there were seen the ruins of the old buildings with brasen gates and other accompainments that some of the fishermen ventured out to drag them ashore, but that before they could succeed the sea came back to assert her ancient dominian, and the enterprise was given over. If this be true, we have strong reasons for supposing that the temple which astonished the Greeks is embedded in sea, and that the present temple afterwards rose to the honour of the tutelary goddess of the Cape.

"ஐரோப்பிய சரித்திரக்காரர் கன்னியாகுமரியைப்பற்றி முதல் முதல் சொல்லுங்காலம் மகா அலெக்சாந்தருடைய காலத்துக்குச் சரியாய் இருக்கிறது. பெரிப்ளஸ் என்னும் நூல் எழுதப்பட்ட காலத்

திலேயே அந்த முனையானது இந்துக்களுக்கு ஒரு புண்ணிய ஸ்தலமாக இருந்தது என்று நினைக்க ஏதுவுண்டு. அதிலுள்ள கோயில் சிவனுடைய மனைவியாகிய பார்வதிபேரால் பிரதிஷ்டை பண்ணப்பட்டிருந்தது. ("குமரி" என்றால் அழகிய இளம்பெண், நித்திய இளமையையும் அழகையும் உடைய பார்வதி) கிரேக்க மாலுமிகளால் பார்க்கப்பட்ட கோயில் எந்த ஸ்தலத்தில் கட்டப்பட்டிருந்ததென்று இப்போது சொல்லமுடியாது. இப்போது கன்னியாகுமரி முனையில் மூன்று கோயில்கள் இருக்கின்றன. இவைகளில் எல்லாவற்றிலும் பழமையானது என்று லேசில் ஒப்புக்கொள்ளக் கூடியது அழிந்து போய்க் கடலில் முழுகிக்கொண்டே வருகிறது. மற்றொன்று உயரமான கன்மலையின் மேல் கட்டப்பட்டிருக்கிறது; அதன் அடிவாரத்தில் கடல் அலைகள் எப்போதும் அடித்துக்கொண்டேயிருக்கின்றன. இந்தக்கோயில் வெளித் தோற்றத்திலும் கட்டட அமைப்பிலும் அதிகப் பழமையானதாகத் தோற்றுகிறது. அது பார்வதி பேரால் பிரதிஷ்டைபண்ணப்படாமல், சிவனுடைய குமாரன் பேரால் பிரதிஷ்டையாயிருக்கிறது. ஏனென்றால் கல்லால் கரடுமுரடாய்ச் செய்த கணேசருடைய விக்கிரகம் அதில் இருக்கிறது. மூன்றாவது கோயில்தான் இப்போது சுவாமி தரிசனத்துக்கு வருபவர்கள் வழங்கும் கோயில். அதைப்பார்த்தால் தற்காலம் கட்டப்பட்டது போல் தெரிகிறது.

ஆனால் நாம் நிதானமாய்ச் சொல்லக்கூடியது என்னவென்றால், அவைகளில் எல்லாவற்றிலும் அதிகப் பூர்வமான கோயில் கடலுக்குள் முழுகிப்போயிருக்க வேண்டும் என்றும், நாளாவட்டத்தில் கடல் அந்தக் கன்மலையைத் தாக்கமுடியாதென்று கண்டபோது அந்த மலையின்மேல் பார்வதிக்கு வேறொரு கோயில் கட்டப்பட்டது என்றும் நினைக்கலாம் அந்தப் பக்கத்தில் வசிக்கும் செம்படவருக்குள்ளும் இதே தாற்பரியம் தான் தற்காலம்வரை இருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் சொல்லுவது என்னவென்றால் 1883ம் வருஷத்தில் சூரியன் பச்சைநிறமாகி சாஸ்திரிகளெல்லாம் அதிலிமித்தம் மயங்கினபோது அவ்விடத்தில் கடலானது சில பர்லாங்கு தூரம் உள்ளுக்குச்சென்று விட்டதாம் அப்போது திடீரென்று பல இடிந்த கட்டடங்கள் கடலில் தோன்றினதாகவும் அவைகளெல்லாம் வெண்கலக் கதவுகளுள்ளவைகளாயிருந்தமையால் சில மீன்பரதவர் கண்டு அவைகளைக் கரைக்கு இழுத்துவர முயன்றதாகவும் ஆனால் அவர்கள் திரும்பிவருமுன் கடல் அவைகளை மறுபடியும் மூடிப்போட்டதாகவும், பிறகு அவர்கள் அவைகளைக் கரைக்குக் கொண்டுவர முடியாமல் விட்டுவிட்டதாகவும் சொல்லிக் கொள்ளுகிறார்கள். இது நிச்சயமாய் இருக்குமானால், கிரேக்கர்கள் கண்டு பிரமிப்

படைந்த கோயில் கடலில் முழுகிப்போயிருக்க வேண்டும் என்றும் இப்போது பார்வதிக்குக் கட்டப்பட்டிருக்கும் கோயில் பின்னால் உண்டானதென்றும் நினைக்க இடமுண்டு.

மேற்கண்ட வசனங்களில், தென்னிந்தியாவின் தெற்குக் கடைசியில் இருக்கும் கன்னியாகுமரியில் நித்தியகுமரியாய் விளங்கும் பார்வதி தேவியாரின் கோயில் கடலுக்குள் அமிழ்ந்திருப்பதாகவும் அதற்குப் பிற்காலத்தில் கட்டப்பட்ட கோயில்களும் கடலால் மோதப்பட்டு நிற்பதாகவும் கணேசர் ஆலயங்களும் அங்கேயிருக்கிறதாகவும் காண்கிறோம். கடலால் மூடப்பட்ட இக்கட்டடங்கள் 1833ம் வருஷத்தில் ஒரு சமயம் கடலால் சில தூரம் விடப்பட்ட காலத்தில் அக்கட்டடங்களிலிருந்து வெண்கலக் கதவுகளை மீன் பிடிப்போர் கண்டு கரைசேர்க்கப் பிரயத்தனப் படுகையில் கடல் மறுபடியும் பொங்கி வருவதைப் பார்த்து அப்பிரயத்தனத்தை விட்டுவிட்டார்களென்று சொல்லப்படுகிறது. அக்காலத்திலுள்ளோர் தங்கள் அரசமாளிகையிலும் கோட்டை வாசலிலும் கோயில் வாசலிலும் பொன்னாலும் வெண்கலத்தாலும் கதவுநிலைகள் செய்து உபயோகித்து வந்தார்களென்று அறிகிறோம். மேலும் கன்னியாகுமரியிலுள்ள பூர்வ ஆலயங்கள் கடலால் அழிக்கப்பட்டிருக்கின்றன வென்பதும் தெரிகிறது.

## தமிழ்ப்பாஷையினது தொன்மை

**தென்னாட்டிலுள்ளோர் வழங்கிவந்த தமிழ்ப்பாஷையின் பூர்வீகமும் சிறப்பும் :**

இதை வாசிக்கும் கனவான்களே தென்னிந்திய சங்கீதத்தின் நுட்பத்தையும் அதன் பூர்வீகத்தையும் நாம் அறிய வேண்டுமானால் சங்கீதத்தமிழையும் நாடகத்தமிழையும் தன் அங்கமாகக்கொண்டு முத்தமிழ் என்று பெயர்வழங்கும் தமிழ்ப்பாஷையைப்பற்றி நாம் சற்று விசாரிக்கவேண்டியது அவசியம். தமிழ்ப்பாஷையுண்டான காலமே கர்நாடக சங்கீதமும் உண்டான காலமாம்; தமிழ்பாஷைக்குரிய இனிமையே தென்னிந்திய சங்கீதத்தின் இனிமையாம். தமிழ்ப்பாஷை எப்படி அன்னிய பாஷைகளோடு கலவாத தனிப் பாஷையோ அப்படி தென்னிந்திய சங்கீதமும் மற்றச் சங்கீதங்களோடு கலவாமல் தனித்த விதிகளுடையதாம். அறிஞர்களால் உயர்ந்ததென்று எண்ணப்படும் தென்னிந்திய சங்கீதத்தையும் அதன் மற்ற வரலாறுகளையும் நாம் விசாரிக்குமுன் தமிழ்ப்பாஷைகளோடு ஒப்பிட்டும் மற்ற தேசங்களோடு ஒப்பிட்டும் மற்றவரால்

தமிழ் பாஷைக்கு உண்டான நன்மை தீமைகளைக் காட்டியும் அறிஞர்கள் சொல்லும் சில வசனங்களை எழுதினேனே யொழிய மற்ற எந்த விதத்திலும் ஒரு பாஷையையாவது ஒரு ஜாதியாரையா வது குறைசொல்ல வந்ததாக நினையாதிருக்கும்படி மிகவும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

உலகச்சரித்திரங்கள் எழுதப்படுவதற்கு முன்னும் மற்ற தேசத்தார் நாகரிகமுடையவர்களாகுவதற்கு முன்னும். அழிந்து போன லெமூரியாக் கண்டத்திலுள்ள நாகரிகமுடைய தென் மதுரையும், அதில் அரசாண்டு வந்த பாண்டிய ராஜர்களும் சங்கப் புலவர்களும் பேசிவந்த பாஷையாகிய தமிழும், மிகுந்த தொன்மை யும் தனிச்சிறப்பும் வாய்ந்தவைகளாயிருந்தன. தமிழ் என்னும் பதத் தின் முதல் இரண்டு எழுத்துக்கள் சேர்ந்த தமி என்னும் முதனிலை யானது ஒப்பின்மை, தனிமை என்றும், தமிழ் என்னும் பதமானது இனிமை, மதுரம் என்றும் அர்த்தம்பொருந்தியதாய் மற்றப்பாஷை கள் கலவாததாயிருந்ததென்றுசில அறிஞர் சொல்லும் அபிப்பிராயங் களை ஈங்கே பார்ப்போம.

Manual of the Administration of Madras Presidency I P. 42.

"There is little doubt that the Dravidian languages are incomparably older in point of time than the Sanskrit. It is not an unreasonable supposing that they once occupied the whole of Hindustan and have been driven to their present position to the south and along the coast by the encroachment, of other languages coming from the North west.

திராவிட பாஷைகள் சமஸ்கிருத பாஷைக்கு வெகு காலத் துக்கு முன்னுள்ளவையென்பதற்குச் சந்தேகமில்லை, ஆதியில் அவைகள் இந்துஸ்தானம் முழுவதும் வழங்கிவந்த தென்றும் பிறகு வடமேற்கிலிருந்து உற்பத்தியான மற்றப் பாஷைகள் வரவர அவை தற்காலம் இருக்கிற கீழ்க்கரை தென்கோடி முதலிய இடங்களுக்குத் துரத்தப்பட்டன என்றும் நினைக்க இடமுண்டு.

மேற்கண்ட வசனங்களைக் கவனிக்கையில் ஆரியர் இந்தியா விற்கு வருவதற்கு முன் இந்து தேசம் முழுவதிலும் பேசப்பட்ட பாஷை தமிழ் என்று தோன்றுகிறது. மேலும் தமிழானது காலசம்ப வங்களினால் மாறுதலையடைந்தாலும் அதன் இலக்கணம் மாறாமல் ஒரேமாதிரியாயிருக்கக்கூடிய அவ்வளவு தேர்ச்சியை அநேகமா யிரம் வருஷங்களுக்கு முன்னாலேயே அடைந்திருந்ததென்று பின் வரும் வசனங்களில் காணலாம்.

Manual of the Adminstration of Madras Presidency Vol. I. P. 112

"As far as present evidence however they are indigenous to India and perhaps specially indigenous to southern India. — As to their language no other is known to which it can be affliated It stands alone, without any immediate predecessors. In origin, it must be long anterior to the Sanskrit, which has subsequently played so important a political part with regard to it. Its original strength is shown by the great persistence of its grammatical formations through all the vicissitudes of history.

"தற்காலத்தில் ஏற்படும் குறிப்புகளைக் கவனித்தால் அவர்கள் இந்தியாவிலே, முக்கியமாய் தென்னிந்தியாவிலே உற்பத்தியானவர்களென்று தெரிகிறது. அவர்கள் பாஷையோவென்றால் மற்ற எந்த பாஷைக்கும் சொந்தமானதாகச் சொல்லக் கூடியதாக இல்லை. அதற்கு முன்னுள்ள மற்ற எந்த பாஷையோடும் அது சேராமல் தனியே நிற்கிறது. உற்பத்தியைப் பார்த்தால் அது சமஸ்கிருதத்துக்கு வெகு காலத்துக்கு முன்னுள்ளது. ராஜாங்க விஷயமாய் சமஸ்கிருதம் பிற்காலத்தில் வெகு முக்கியத்துக்கு வந்தபோதிலும் உற்பத்தியில் அது பிந்தினதுதான். தமிழ் பாஷையினுடைய ஆதி பலத்தையறிய வேண்டுமானால், சரித்திர சம்பந்தமான மாறுதல்கள் எத்தனையோ உண்டாகியும் அதன் இலக்கண உறுப்புகள் மாறாமல் எக்காலத்திலும் அதே விதமாய் இருப்பதைக் கவனித்தால் விளங்கும் "

மேற்கண்ட வசனங்களை நாம் கவனிக்கையில் எபிரேய பாஷையின் எழுத்துக்களிலிருந்து கிரேக்க பாஷையின் எழுத்துக்களும் சில கிரேக்க பாஷையின் எழுத்துக்களிலிருந்து பாலிபாஷையின் எழுத்துக்களும், பாலிபாஷையின் எழுத்துக்களிலிருந்து சமஸ்கிருத பாஷை எழுத்துக்களும் அவைகளிலிருந்து அனேக பிராகிருத பாஷையின் எழுத்துகளும் வந்ததென்றும் அப்பாஷைகளின் வார்த்தைகள் ஒன்றுக்கொன்று சம்பந்தமுடையவைகளாயிருக்கின்றனவென்றும் சொல்வதுபோல, தமிழ் பாஷை இன்ன பாஷையிலிருந்து உண்டானதென்று சொல்ல ஏதுவில்லாமல் தனித்த பாஷையாயிருக்கிறதென்று சொல்லுகிறார். மேலும் எத்தனையோ சரித்திர சம்பந்தமான மாறுதல்கள் உண்டானபோதிலும் அவைகளினால் மாற்றப்படாத இலக்கண விதிகளைப் பூர்வமாய் அடைந்திருக்கிறதென்றும் சொல்லுகிறார் மிக பூர்வமாயுள்ள இத்தமிழ்மொழி, அதன் பின்வந்த வேறு எந்தப்

பாஷையாலும் யாதொரு மாறுதலையுமுண்டாக்க முடியாமல் தனிப் பாஷையாயிருந்து வருகிறதென்பதைப் பின்வரும் வசனங்களில் காணலாம்.

தமிழ்மொழியென்று சொல்லவுங்கூட வெறுத்த ஆரியர். திராவிட பாஷையென்று பெயர் வைத்தார். தமிழ் என்ற பதம் சமஸ்கிருத பஷையினின்றே யுண்டானதென்று மற்றவர் எண்ணும்படித் திராவிடம் என்ற வார்த்தை, ட, வுக்கு ள, வரலாம் என்ற விதிப்படி திராமிளம் என்று வந்ததாகவும், திராமிளம் என்ற வார்த்தை இரண்டாம் எழுத்துக் குறுகித் திரமிளம் என்று வந்ததாகவும், அதன்பின் இரண்டாம் எழுத்துக்கெட்டு தமிளம் என்று ஆனதாகவும், தமிளம்தானே அம்கெட்டு தமிழ் என்று வந்ததாகவும் சொல்லுகிறார்கள். எப்படியானால் ஆகட்டும். வி, அதாவது வகர இகரத்திற் கெதி என்னவாயிற்று? அதற்கும் ஒரு நியாயம் சொன்னால் நன்றாயிருக்கும்; அதற்கும் மகர இகரத்திற்கும் என்ன சம்பந்தம்? இப்படியே தலையைச் சுற்றி மூக்கைத் தொடுகிறவன் கதைபோல் சொல்லக்கூடியதாயிருப்பதனால் அல்லவோ சொற்ப வரிகளுக்கும் அர்த்தந்தெரியாமல் எளிய நடையிலுள்ள சாரங்க தேவர் எழுதிய சங்கீதரத்னாகரத்தின் ஒரு சுலோகத்திற்கு 20 விதமாய் அர்த்தஞ்செய்தும், உண்மையறியாமல் போனார்கள். எழுத்து எழுத்தாய் அர்த்தஞ்செய்வதை நாம் கவனித்தால் எல்லாம் பிரமம் என்று தெரிந்து கொண்டவன் மௌனம் சாதித்தது போலாகும் வாய்திறக்க முடியாது என்பது தெளிவாய்த் தெரிகிறது சமஸ்கிருதம் உயர்ந்த பாஷையென்றும் அரிய விஷயங்கள்அதில் எழுதப்பட்டிருக்கின்றனவென்றும் நாம் ஒப்புக் கொண்டாலும், பேச்சுப்பழக்கத்திற்கு வராத பாஷையென்றே சொல்ல வேண்டியதாயிருக்கிறது.

தமிழ் வழங்கும் அனேக வார்த்தைகளைத் தங்கள் பாஷையில் முதல் முதல் இருந்ததாக மற்றவர் நினைக்கும்படி காலாகாலங்களில் மாற்றி, மாற்றியதற்கிணங்க நூல்களும் புராணங்களும் கட்டுக்கதைகளுஞ் செய்து பரப்பி வந்தார்கள். நீர் என்ற பதம் நீரம் என்ற சமஸ்கிருத பதத்திலிருந்து வந்ததென்றும் தமிழர் பேசும் வார்த்தைகளில் நூற்றுக்குத் தொண்ணூறு சமஸ்கிருதமென்றும் வாய் கூசாமல் சொல்லுவார்களானால் வேறு] என்ன சொல்லமாட்டார்கள். முதல் ஊழிக்கு முன் 4,400 வருஷங்களாகச் சங்கம் வைத்து நடத்திய வித்வ சிரோமணிகளும் அக்காலத்தும் அதற்கு முன்னுமிருந்த ஏராளமான தமிழ் மக்களும் தண்ணீர் குடிக்கவில்லையோ? அல்லது அதற்கு ஏற்ற பெயர் வைக்கத் தெரியாதிருந்தார்

களோ? ஆரியர் வந்தபின் தானோ அவர்கள் குளிர்ந்த நீருக்குத் தண்ணீரென்றும் சூடு நீருக்கு வெந்நீரென்றும் இப்படியே ஆற்றுநீர் ஊற்றுநீர், சேற்றுநீர், செந்நீர், செய்நீர், கடல்நீர், குடிநீர், இளநீர் கண்ணீர், உமிழ்நீர் என்றும் சொல்ல ஆரம்பித்தார்கள்? இப்படியே சிறந்த ஏராளமான தமிழ் மொழிகளைத் தங்கள் பாஷையிலிருந்தே வந்ததென்று சொல்வதற்கு ஏற்றதாகச் சில எழுத்துக்களைக் கூட்டியும் சில எழுத்துக்களைக் குறைத்தும் நெடில் குறிலாகவும் குறில் நெடிலாகவும் மாற்றியும் சம்பந்தமில்லா எழுத்துக்களாகத் திரித்தும் வழங்கினார்கள். தமிழ் நாட்டிலுள்ள சில முக்கியமான மலைகளுக்கும், ஆறுகளுக்கும், பட்டணங்களுக்கும், மனுஷர்களுக்கும், சமஸ்கிருதப் பெயர்கள் வைத்துப் புராணங்களும் கதைகளும் கட்டினார்கள். தாங்கள் செய்த புராணங்களையும் கவிகளையும் பிறர் அறியப் பிரசங்கித்து ராஜாக்களையும் ஜனங்களையும் உண்மையென்று நம்பும்படி நீர் என்ற வார்த்தையை நீர, நீரம், நாரம் என்று மாற்றி அவைகளிலிருந்து நாரதம், நாராயணன் என்று தொடுத்துக் கொண்டு பின் நாரத்திலிருந்தும் நீரத்திலிருந்தும் நீர் வந்ததென்று சொன்னதை நம்புகிறவர்கள் அவர்கள் கட்டிய கதைகளையும் நம்பினார்கள். அவர்கள் சொன்னதையெல்லாம் நம்புகிறவர்கள் ஏற்பட்டபின் சமஸ்கிருத பாஷையின் அனேக வார்த்தைகள் தமிழில் வழங்கத்தலைப்பட்டன. இதை விவேகிகள் அறிவார்கள். அதிகம் சொல்ல இங்கு அவசியமில்லை. இயல் இசை நாடகமென்னும் முத்தமிழிலுள்ள இசைத் தமிழாகிய சங்கீதத்தைத் தென்னாட்டிலிருந்தே மற்றவர்கள் கொண்டு போனார்களென்பது பற்றியும் வடபாஷைக்காரரும் தமிழ் நாட்டினின்றே இசைத் தமிழைக் கொண்டு போயிருக்க வேண்டுமென்பதுபற்றியும் இங்கு எழுத நேரிட்டது. அதன் விபரம் இதன்பின் பார்ப்போம். தமிழ் மொழியோடு வடமொழி கலந்தவிதம் பின் வரும் வசனங்களில் காணலாம்.

Manual of the Adminstration of the Madras Presidency Vol. I P. 49

" North Indian civilian, when it came as far south the Tamil country found the people already in possession of the art of writing and of cultivated language. In consequence of this Sanskrit did not regulate the Tamil phonetic system, and merely held the place of a foreign learned language.

" வடஇந்தியாவின் நாகரிகமானது தெற்கே தமிழ் நாடு மட்டும் வந்தபோது, எழுத்து, பாஷை முதலிய நாகரிகத்துக்குரிய சின்னங்கள் தென்னாட்டு ஜனங்களுக்குள் முன்னமேயிருக்கக்

கண்டது. இதனால்தான் சமஸ்கிருத பாஷையானது தமிழ்ப் பாஷையில் எவ்வித மாறுதலையும் உண்டாக்க முடியாமல் ஒரு அன்னிய பாஷையாகவே இருந்து வருகிறது.

மேற்கண்ட வரிகளைக் கவனிக்கையில், வடதேசத்திலிருந்து வந்த ஆரியரைப் போலவே அப்போதிருந்த தமிழ்மக்களும் நாகரிகத்திலும் கல்வியிலும் சிறந்தவர்களாயிருந்தார்கள். தாங்கள் போகுமிடங்களில் தங்கள் பாஷையின் நலங்காட்டி அங்குள்ள பாஷையில் பல மாறுதல்களை உண்டாக்கினது போல தமிழ் மொழியை மாற்ற அவர்களால் இயலாமல் போயிற்றென்று தெளிவாகத் தெரிகிறது. மிகத் தொன்மையான தமிழ் மொழிக்குத் திராவிடமென்றும் அதைச் சேர்ந்த பாஷைகள் பேசும் தேசத்திற்கு திராவிடதேசமென்றும் ஜனங்களுக்குத் திராவிடரென்றும் ஆரியர்கள் பெயர் வைத்தார்கள். தமிழென்ற பதத்தைச் சிறந்ததாக எண்ணும் தங்கள் பாஷையில் எழுதிக் கொள்ள திறமையில்லாமல் அதற்கு முற்றிலும் சம்பந்தமில்லாத வேறொரு பெயரைக் கொண்டு அழைக்கப் புகுந்தார்கள் என்பதைப்பின்வரும் வசனங்களில் காண்க.

## சிங்காரவேலு முதலியார் எழுதிய அபிதான சிந்தாமணியின் முன்னுரை

"தமிழ்நாட்டரசர் மூவரும் சூரியசந்திர வம்சத்திலிருந்து பிரிந்தவர்கள், இவர்கள் துவாபரயுகத்திற்கு முன்பும் அரசாண்டதாகத் தெரிகிறது. ஒரு பாண்டியன் பாரத யுத்தத்தில் பாண்டவர்களின் சேனைக்கு அன்னமிட்டதாகத் தெரிகிறது. இவன் தமிழ்ப் புலவரை ஆதரித்தவன்.

பின்னுமிவ்வரிய பாஷை மற்றைய பாஷைகள் போல் வேறு பாஷைகளின் துணைவலி பெறாது தானாய் விளங்கும் ஏற்றமுற்றது. இதனை அறிவுள்ளோர் பலர் பழைய நூல்களிற் கண்டறியலாம். ஆயின் தமிழ் என்பது திராவிடம் என்பதன் திரிபன்றோவெனின் திரிபாகாது. தமிழ், தெலுங்கு, கன்னடம், மகராஷ்டரம், கூர்ச்சரம் இவைகளையுந் திராவிடமென்பவாகலின் இதற்கேயுரியதாகாது. ஆயினும் அப்பெயர் கூறவந்த வடநூலார் அக்காலத்திற்கு முன்னே தோன்றிய பாஷைக்குத் தாங்கள் பெயரறியாது அந்நாட்டில் தாங்கள் வந்தகாலத்து இட்ட பெயராகவுமிருத்தலின் இது வடமொழிக்குப் பிந்தியதாகாது. வடமொழி வடநாட்டிலிருந்தது போல் தென்மொழி தென்னாட்டிலிருந்தது. இதனால் தமிழ்ப் பாஷை தனித்த பூர்வ பாஷை என்பது கொள்ளக்கிடந்தது".

## லெமூரிய நாட்டில் பேசப்பட்டு வந்த பாஷை தமிழ்ப் பாஷையே என்பது.

மனிதஜாதி உற்பத்தியான ஆதிபூமி லெமூரியா என்று நாம் பலவிதத்தாலும் திட்டமாய் அறிகிறோம். லெமூரியாக் கண்டத்தி லிருந்து மனித ஜாதிகளும் மனித ஜாதிக்கு முந்திய வாலில்லாக் குரங்கினமும் மற்றும் சில பிராணிகளும் தாவர வர்க்கங்களும் அதற்குச் சுற்றிலுமுள்ள இடங்களிலிருப்பதைக் கொண்டு தென் னிந்தியாவின் தென்பாகத்திலிருந்து அழிந்து போனதாகச் சொல்லப் படும் குமரிநாடே லெமூரியாவென்று தெளிவாகத் தெரிகின்றது. குமரியாற்றிற்கும் பஃறுளியாற்றிற்கும் நடுவிலிருந்ததாகச் சொல்லப் படும் மிகுந்த நீர்வளமுள்ள, 1) ஏழ்தெங்க நாடும், 2) ஏழ்மதுரை நாடும், 3) ஏழ்முன்பாலை நாடும், 4) ஏழ்பின்பாலை நாடும், 5) ஏழ்குன்ற நாடும், 6) ஏழ்குணகரை நாடும், 7) ஏழ்குறும்பனை நாடும் ஆகிய 49 நாடுகளடங்கிய தென்பாண்டி நாடே மனித ஜாதிக்கு ஆதி பிறப்பிடமென்று தெளிவாகத் தெரிகிறது. ஏழு ஏழு நாற்பத்தொன்பது நாடுகள் என்று சொல்லுவதை நாம் கவனிக்கையில், நாவல் தீவு (நாவல் மரம்) இறலித்தீவு (இத்திமரம்) குசைசதீவு (நாணல்) கிரவுஞ்சத்தீவு (அன்றில்) புஷ்கரத்தீவு (யானை) தெங்குத்தீவு, கமுகுத்தீவு என்ற ஏழு பெரும் பூபாகங்க ளும்; ஆஸ்ட்ரேலியா, சுமாத்திரா, ஜாவா போல ஏழு தீவுகளாக இருக்கலாமென்றும் அவை ஒவ்வொன்றும் எவ்வேழு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கலாமென்றும் தோன்றுகின்றது. தென்னிந்தியா வில் இயற்கையாய்க் காணப்படும் நாவல், இத்தி, அன்றில், யானை, தெங்கு, கமுகு முதலிய மரங்களும் ஜீவராசிகளும் ஏழு தீவுகளிலும் மிகுதியாய் இருந்ததாகத் தெரிகிறது. மற்ற இடங் களில் இருப்பதாக நாம் காணமாட்டோம். ,சப்த சுரங்களும் இவ்வேழு தீவுகளிலேயிருந்து உண்டானதாக பூர்வ நூல்களில் சொல்லப் படுகிறது இந்த நாற்பத்தொன்பது நாடும் கடலால் அழிக்கப் படுமுன் மிகுந்த செழிப்புடையதாயும், இயற்கையமைப் பின் வளங்கள் மிகுந்ததாயும் பாண்டிய ராஜாக்களால் ஆளப் பட்டு வந்ததாயும் நாம் இதன்முன் பார்த்தோம். கடலால் அழிந்த இந்த நாட்டிற்குத் தென்மதுரை தலைநகரா யிருந்தது. இதில் தமிழே பேசி வந்தார்கள். இத்தமிழ் மொழியே பல இடங் களிலும் பல பாஷைகளிலும் வழங்கியிருப்பதை இன்றும் காணலாம்.”

வான்மீகி இராமாயணத்தின்படி இராமகாதை வந்த வரலாறு நாரத முனிவரால் என்பது தெளிவு. நாரத முனிவர் இல்லை யென்றால் வான்மீகி முனிவருக்கு இராமகாதை அறிவிப்பாரும்

இல்லை. அவருக்குப் பிரமன் அருளுமில்லை; இராமகாதை அவருக்கு மனக்கண்ணில் தோன்றுமாறும் இல்லை. இதனைத் தெளிவாக அறிந்தால்தான் கம்பராமாயணத்திற்குச் சிறப்புப்பாயிரம் பாட வந்த பெருமக்கள் வான்மீகி முனிவரைக் கம்பர் பின்பற்றிப் பாடவில்லை என்றும், வால்மீகரும் பாடினார் கம்பரும் பாடினார் என்றும் கொள்ள இடந்தந்து பாடியுள்ளது புலனாகும்.

“ நாரணன் விளையாட்டெல்லாம் நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தான் அறிந்த வான்மீகி என்பான்
சீர் அணி சோழ நாட்டுத் திருவழுந்தூருள் வாழ்வோன்
தார் அணி கொடையான் கம்பன் தமிழினால் கவி செய்தானே’
கம்ப. சிறப்புப்பாயிரம்-1

என்று கம்பரையும் வான்மீகரையும் இணைத்தவர்கள்,

“ நாரதன் கருப்பஞ்சாறாய் நல்லவான்மீகன் பாகாய்
சீரணி போதன் வட்டாய் செய்தனன் காளிதாசன்
பார் அமுது அருந்தப் பஞ்சதாரையாய்ச் செய்தான் கம்பன்
வாரமாம் இராமகாதை வளமுறத் திருத்தினானே ”
கம்ப. சிறப்புப்பாயிரம்-12

என்று வேறு பலரையும் அவரோடு இணைத்துப் பாடியுள்ளனர்.

இந்த இரு தனியன்களை இயற்றியவரும், இன்ன இன்னார் இன்ன இன்ன வண்ணம் இன்ன இன்ன செய்தனர் என்றனரேயன்றிக் கம்பர் வான்மீகியைத்தான் பின்பற்றிப் பாடினார் என்று யாண்டும் குறிப்பிடவில்லை. இரண்டாவது பாட்டில் “ கம்பன் வாரமாம் இராமகாதை வளமுறத்திருத்தினானே ” என்ற அடியைப் பார்த்தால், முன்னையோர் இராமனைப்பற்றிச் செய்த தவறுகளைத் திருத்திச் செம்மையான நூல் செய்தான் என்பது விளங்கும். இக் கருத்தால் போலும் தனியன் பாடிய மற்றொரு பெருமகனார்,

“தராதலத்திலுள்ள தமிழ்க்குற்றமெல்லாம்
அராவும் அரமாயிற்றன்றே-இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வான் அடிபணியும் ஆதித்தன்
கம்ப நாட்டாழ்வான் கவி ” கம்ப. தனியன்-12

என்று பாடியுள்ளார்.

இப்பாட்டை மொழிமாற்றிப் பொருள் கொள்ளாது நேரே பொருள் கொண்டால் கம்பன் கவிதையைத் தவிர வேறு எல்லாக் கவிதைகளும் குறைபாடுடையன என்று ஆகும்.

"தராதலத்திலுள்ள தமிழ்" என்ற இடத்திலுள்ள "தமிழ்" என்ற சொல்லை இறுதியடியிலுள்ள கம்பநாட்டாழ்வான் தமிழ்க்கவி என்று சேர்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறாயின் தராதலத்தில் இராவணன்மேல் அம்புநாட்டாழ்வனைப்பற்றிப் பிறர் பாடிச்சேர்த்துள்ள குற்றமெல்லாம் இராவணன்மேல் அம்புநாட்டாழ்வான் அடி பணியும் ஆதித்தன் கம்பநாட்டாழ்வான் தமிழ்க்கவி அராவும் அரமாயிற்றன்றே என்று மொழிமாற்றிப் பொழிப்புத்திரட்டி "இராவணன் மேல் அம்புநாட்டாழ்வான்" என்பதை நடுநிலைத் தீவகமாக்கினால் கம்பன் வாரமாம் இராமகதை வாளமுறத்திருத்தினான் என்பதும் சரியாகும்.

இக்கூற்றுக்களால், இராமகாதை பிறமொழிக் கவிகளால் பிழைபட்டவாறும் கம்பன் திருத்தியவாறும் புலப்படுகின்றது.

இவ்வாறு கம்பன் இராமகாதையைச் செப்பனிடுமாறு எங்ஙனம் என்று காண்போம். வான்மீகி முனிவருக்கு நாரதர் கூறியது போல வான்மீகி முனிவர் கூறியாங்கு, வான்மீகி இராமாயணத்தின் தொடக்கப்பகுதி கூறுகின்றது. இக்கருத்து ஆண்டு யாரோ கூறியது போலிருக்கவேண்டியது, வான்மீகரே கூறியது போன்றிருப்பது இயையவில்லை. இத்தகைய இயையாமை அந்த நூலில் நிகழ்ந்ததற்குக் காரணம் இராமகாதை தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்குச் செவிவழிச் சென்றதால்தான் வான்மீகி இராமாயணத்தில் பெரிய பெரிய முரண்பாடுகள் நிகழ்ந்துள்ளன.

இராமாயண வரலாற்றினை நாரதமுனிவர் தெளிவாக அறிந்தவரே. அவர் இராமன் வரலாற்றை மட்டும் தெரிந்திருக்கவில்லை. திருமால் தொடங்கிச் சோழ மரபினர் எண்ணிறந்தோர் வரலாற்றினை அவர் தெளிவாகத் தெரிந்திருந்தார். தலைச்சங்கத்திலிருந்து தமிழாய்ந்த திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுள், குன்றெறிந்த முருகவேள், முரஞ்சியூர் முடிநாகராயர், நிதியின் கிழவன் போன்ற தெய்வப்புலவர் வரிசையில் இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகு போன்று பஞ்சபாரதியம் முதலிய நூல்களைச் செய்தவர் தமிழ் முனிவர், தேவ இருடி நாரதர். (சிலம்பு-அடியார்க்கு நல்லார் உரைப்பாயிரம்) இவர் தமிழனாகிய இராமனையும் அவனுக்கு முன்னும் பின்னும் உள்ள சோழ மரபினையும் நன்கறிந்தவர். கரிகால்வளவன் இமயங்காறும் படையெடுத்துச் சென்றபோது அம்மலை தடையாக நின்றது கண்டு அதனை அவன் தன் கைச்செண்டால் தாக்க அது திரிந்து நின்றது. அப்பொழுது நாரதமுனிவர் அக்கரிகாலன் முன்னர்ப்போந்து அவனுக்கு ஆசி

கூறிச் சோழவரலாற்றினைக் கூறியதாகக் கலிங்கத்துப்பரணி இராச பாரம்பரியம் என்ற பகுதியில் செயங்கொண்டார்,

“ காலமும்மையும் உணர்ந்தருளும் நாரதனெனும்
கடவுள் வேதமுனி வந்து கடல் சூழ் புவியில் நின்
போலும் மன்னர் உளர் அல்லர் என ஆசிபுகலாப்
புகல்வதொன்றுளது கேளரச என்று புகல்வான்”

“ கமலயோனி முதலாக வரும் உங்கள் மரபிற்
காவல் மன்னவர்களாகி வருகின்ற முறையால்
அமல வேத மிது காணு மிதிலாரண நிலத்து
அமலனே அபயனுகி வருகென்றருளியே ”

கலிங்கத்துப்பரணி. இராசபாரம்பரியம்-7.8.

என்று வரலாறு கூறுகின்றார்

இங்கு வான்மீகிக்கு இராமன் வரலாறு கூறிய நாரத முனிவரைப் போலல்லாமல் இம்முனிவர் திருமால் தொடங்கி வருகின்ற சோழ பரம்பரையினரைக் குலோத்துங்க சோழன் காறும் கூறுகின்றார்.

இவண் நாரத முனிவர் கூறிய வரலாறு திருமால் வழிவந்த சோழ வரலாறு ஆதலின் குலோத்துங்கன் காலத்தில் கரிகாலனுக்கு நாரத முனிவர் கூறிய குலவரலாறு புலவர்பெருமக்களாலும், அரசப் பெருமக்களாலும் பெரிதாக ஆராயப்பெற்று அந்நிகழ்ச்சிகள் இலக்கியங்களில் இடம்பெற்றதோடு கல்வெட்டுகளிலும் (திருவாலங்காடு) பொறிக்குமாறு இடம் பெற்றது.

இச்சூழ்நிலையில் வாழ்ந்த கம்பர் இராமனைச் சோழகுல முதல்வர்களில் ஒருவன் என்றும், திருமாலின் மரபு வழிவந்த சூரிய குலத்தினன் என்றும், திருமாலின் பிறப்பென்றும் தெளிந்து, நமக்கு முன்னோராயுள்ள ஆழ்வார்கள் இராமனைபற்றிக்கூறிய கருத்தினையும் தேவார ஆசிரியர்களும், அவர்களுக்கு முன்னர் காவியம் இயற்றிய சாத்தனார், இளங்கோவடிகள் போன்றோரும் கூறிய கருத்துக்களையும், புறநானூற்றுப்புலவர்களும் அவர்களுக்கு முன்னுள்ளோரும் இயற்றிய இராமாயணக்கதைகளையும் நிகழ்ச்சிகளையும் ஆய்ந்துள்ளார்.

தமக்கு முன்னர் தம்மவன் இராமன் வரலாற்றினைப் பிறமொழியினர் கதையளவில் கேள்விவழிக் கேட்டவற்றை வைத்துக் கதை புனைந்து பண்பாட்டுக்குக் கேடு விளைத்ததைக் கண்டு மனம்

புழுங்கி, மறுப்பனவற்றை மறுத்தும், புறக்கணிக்கப் பெறுவன வற்றைப் புறக்கணித்தும் செம்மையான வரலாற்றைக் காவியமாக்கித் தந்துள்ளார்.

இங்ஙனம் கம்பரை ஒத்த கவிச்சக்கரவர்த்தியாக விளங்கிய செயங்கொண்டாரும், மூவருலா பாடிய ஒட்டக்கூத்தரும், திருவாலங்காட்டு கல்வெட்டுடை வீர இராசேந்திர சோழனும் சோழமரபு காக்கப்பெற வேண்டும் என்பதற்காக அதனை வற்புறுத்தி எழுதியுள்ளனர். இராமன் வடபுலத்தில் வாழ்ந்ததால் சோழன் அல்லனென்றோ, சூரிய குலத்தன் அல்லன் என்றோ, திராவிடன் அல்லன் ஆரியன் என்றோ இக்கதை நம்மவர் கதை அன்று ஆரியர் கதை என்றோ புறக்கணித்துவிடக்கூடாது என்பதற்காகக் கம்பர் தாம் பாடிய காவியம் எங்கணும் இராமன் தமிழன் என்பதை எண்ணிறந்த இடங்களில் குறிப்பிடுகின்றார்.

உரோம பாத முனிவன் கலைக்கோட்டு முனிவனைத் தயரதன் பொருட்டாக அயோத்திக்கு அழைத்தது பற்றிக் குறிப்பிடும்போது,

"புறவு ஒன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகை
தன்புகழில் பூத்த
அறன் ஒன்றும் திருமனத்தான் அமரர்களுக்கு இடரிழைக்கும்
அசுரர் ஆயோர்
திறல் உண்ட வடிவேலான் தசரதன் என்று உயர்
சீர்த்திச் செங்கோல் வேந்தன்
விறல் கொண்ட மணிமாட அயோத்திநகர் அடைந்து
இவண்நீ மீள்தல் என்றான்"

கம்.பால: திரு அவதாரப்-62

இங்குத் தசரதன் புறாவிற்காகத்துலைபுகுந்த சிபியின் மரபில் வந்தோன் என்றும் அவனும் தெய்வ ஆற்றல் படைத்த அமரர்கட்கு இடர் வரும்போது அசுரர்களை வலியொடுக்கி வாழ்ந்தான் என்றும் கூறப்பெற்றுள்ளது நோக்கத்தக்கது.

தசரதன் சிபி மரபினன் என்பதைக் கம்பர் இங்குக் குறித்ததைப்போல இராமனைக்குறிக்கும் போதெல்லாம் சூரிய குலத்தன் என்றும், சிபி, மனு போன்ற சோழ குலத்தன் என்றும் பல இடங்களில் கூறுகின்றார்.

விசுவாமித்திர முனிவனோடு மிதிலை புகுந்த இராம இலக்குவர்களைச் சனகனுக்கு அறிமுகம் செய்யும்போது,

"இன்னுயிர்க்கும் இன்னுயிராய் இருநிலம் காத்தாரென்று
பொன்னுயிர்க்கும் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கும் நெடுவேலாய் இவர்குலத்தோன்
மென்புறவின்
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாருக வழங்கினனல்"
கம்.பா:ல குலமுறை-7

என்று இராமனைச் சுட்டிக்காட்டி அவன் குலக்தோன் புறவிற்கு உயிர்வழங்கிய செய்தியைக் கூறி, அவனைத் திராவிடனன் என்றும் கம்பர் உணர்த்துவதைக் காணலாம்.

கைகேயி சூழ்வினைப்படலத்தில், கைகேயி கேட்ட வரத்தினைத் தர மயங்கிய தயரதனை நோக்கிக் கைகேயி கடிந்துரைக்கும் போது புறவிற்கு உடம்பரிந்திட்ட குலமரபினைச்சுட்டிக் காட்டி,

"அரிந்தான் முன்ஓர் மன்னவன் அன்றே அருமேனி
வரிந்தார் வில்லாய் வாய்மை வளர்ப்பான் வரம் நல்கி
பரிந்தால் என்னும் என்றனள் பாயும் கனலே போல்
எரிந்து ஆருதே இன்னுயிர் உண்ணும் எரி அன்னுள்"
அயோ: கைகேசி-47.163

என்று கம்பர் தசரதனைச் சிபிமரபினன் என்று கைகேயி வாயிலாகக்கூறுவது நோக்கத்தக்கது.

இவ்வாறு இராமன் சிபிச்சோழ மரபினன் என்ற இதனோடு நில்லாமல் உயுத்த காண்டத்தில் கும்பகர்ணன் வழியாகக் கம்பர் உணர்த்திக்காட்டுவது பலவாறு துணைபுரிவதாகும்.

நம்மவர் இராமனை ஆரியன் என்றும், இராவணனைத் திராவிடன் என்றும் கொண்டு, ஆரியன் என்ற சொல்லைக்கம்பர் என்ன பொருளில் பயன்படுத்தியுள்ளார் என்று ஆராயாது, மயங்கித் தலைதடுமாறியதால் இராமனைப்பற்றிப்பேசலும், எழுதுதலும் புகழ்தலும் இழுக்கென்று கருதிப்புறக்கணித்தது எத்துணைப் பேதமை என்பதை இப்பகுதி நன்கு புலப்படுத்துகிறது.

கும்பகர்ணன் இராவணனுக்காகப் போர்க்களம் புகுந்து இராமனை வெல்லுமாறெல்லாம் முனைந்து பொருது அது கடை போகாதபோது தன் அண்ணனுக்குத் தன் கடமையைக் கடைபோக முடித்ததாகக்கருதி இறுதியில் தன் குலத்திற்கும், தன் குலமுதலாக இராமன் பால் உய்ந்து வாழும் வீடணனுக்கும் ஓர் உதவி செய்யக் கருதி இராமனிடம் இரண்டு வரங்கள் கேட்கின்றான் அந்த வரத்தில் ஒன்று வீடணனை அடைக்கலமாக ஏற்ற இராமன் தன் குல

மரபுணர்ந்து வீடணனைக் காக்கவேண்டுமென்று கேட்பதாகும். இவ்விடத்தில் சிபிச்சோழன் தன்னிடம் அடைக்கலமாகப் புகுந்த புறவினைக் காத்ததுபோல வீடணனையும் இராவணன் சினத்தி னின்றும் விடுவித்துக் காக்க வேண்டும் என்பதை,

"புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன் வழிவந்தீர்
இக்கடன்கள் உடையீர் நீர் எம்வினை தீர்த்து உம்முடைய
கைக்கடைந்தான் உயிர்காக்கக்கடவீர் எங்களைக்
கட்டால்"

யுத்த. கும்பகர்ணன் வதைப் : 366. 7754

என்று கூறுகின்றான். இங்குக் கும்பகர்ணன், இராமனின் குலவழியைக் கூறு முறையில் சிபி அஃறிணைப் பொருளாய புறவினுக்கே உதவியுள்ளமையால்தான் வீடணனுக்குக் கும்பகர்ணன் வேண்டும் அடைக்கலம் இராமனால் அவன் மரபினன் சிபி காத்தலினும் போற்றிக்காக்க வேண்டியது என்று உணர்த்தும் முறையில் சிபிச்சோழன்மரபினன் இராமன் என்று உணர்த்துகின்றான்.

இங்குக் கும்பகர்ணன் தன்னைத் திராவிடன் என்றோ, தான் தோன்றுதொட்டு வருகின்ற சிபி மரபினன் என்றோ கூறாது,

"புக்கடைந்த புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
மைக்கடங்கார் மதயானை வாள்வேந்தன் வழிவந்தீர்"

யுத்த : கும்ப.வதை - 356-7754

என்று இராமனை வரைந்து சுட்டுவதைக்காணலாம். இதனால் இராமன் சோழன் வழிவந்த திராவிடன் என்பதும், இராவணன் முதலியோர் இத்திராவிடர்க்கு வேறானவர் என்பதும் புலப்படும்.

## இராமன் மனுகுலத்தோனும் சூரிய குலத்தோனுமாவான்

இராமன் சோழன் என்பதைக் காட்டியது போலவே மனுகுலத்தோன் இராமன் என்பதையும் சூரியகுலத்தோன் இராமன் என்பதையும் கம்பர் தாம்பாடிய நூலெங்கணும் குறித்துள்ளார்.

குலமுறை கிளத்துப்படலத்தில் இராமன் மனுச்சோழன் மரபினன் என்றும், அவன் திராவிடன் என்றும், அரசமரபினன் (க்ஷத்திரியன்) என்றும் குறிப்பிடப்புகுந்த கம்பர்,

"ஆதித்தன் குலமுதல்வன் மனு வினையார் அறியாதார்
பேதித்த உயிர் அனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையால் நிலமடந்தை முலைசுரப்ப
சாதித்த பெருந்தகையும் இவர்குலத்து ஓர்தராதிபன்காண்"
(பால. குல முறை:-3)

என்கின்றார். மனு ஆதித்தன் வழியினன் என்றும் இராமன் மனு மரபினன் என்றும் இங்குக் குறித்ததைத் தொடர்ந்து அனுமப் படலத்தில் இராமனோடு நட்புக்கொண்ட அனுமன் சுக்கிரீவனிடத்தில் இராம இலக்குவர்களைப்பற்றி அறிய 'யாவர்' என்று இராமனைக் கேட்ட போது இலக்குவன் தாங்கள் சூரிய குலத்துவந்த சோமன் மனு மரபில் தோன்றிய தயரதனுடைய மக்கள் என்று கூறுகின்றான்.

"சூரியன் மரபில் தோன்றிச் சுடர்நெடு நேமி பாண்ட
ஆரியன் அமரர்க்காக அசுரரை ஆவியுண்ட
வீரியன் வேள்வி செய்து விண்ணுலகோடும் ஆண்ட
காரியல் கருணையன்ன கண்ணகன் கவிகைமன்னன்"

"புயல்தரு மதத்திண் கோட்டுப் புகர்மலைக்கு இறையை ஊர்ந்து
மயல்தரும் அவுணர் யாரும் மடிதர வரிவில் கொண்ட
இயல்தரும் புலமைச் செங்கோல் மனுமுதல் எவரும் ஒவ்வாத்
தயரதன் கனகமாடத்தடமதில் அயோத்தி வேந்தன்"

"அன்னவன் சிறுவனுல் இவ்வாண்டகை அன்னை ஏவ
தன்னுடை உரிமைச்செல்வம் தம்பிக்குத் தகவின் நல்கி
நல்நெடுங் கானம் சேர்ந்தான் நாமமும் இராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கு ஏவல்செய் அடியன் யானே"
கிட்கிந்தா 1:26, 27, 28, 3878, 3879, 3880

இங்குக் கம்பர் சூரியன் தொடங்கி மனுவழி வந்த தயரதன் இராமன் முதலியோரைத் திராவிடர் என்று காட்டல் நோக்கத்தக்கது.

இராமன் தன்னை அரசமரபினன் என்றும், அந்தணமரபினன் அல்லன் என்றும் குறிப்பிடுகின்றான். சூர்ப்பணகை இராமனோடு உறவுகொள்ள வேண்டிய போது இராமன் அவளை மணப்பது இயலாது என்பதற்குரிய காரணமாகக் குல இயல்பு இயையாமையைக் கூறுகின்றான்.

"சிந்தனை அரக்கி நீதிநிலையிலாள் வினைமற்று எண்ணி
வந்தனள் ஆகும் என்றே வள்ளலும் மனத்துள் கொண்டான்
சுந்தரி மரபிற் கொத்த தொன்மையின் துணிவிற்று அன்றால்
அந்தணர் பாவைநீ யான் அரசரில் வந்தேன் என்றான்"
(ஆரணிய: சூர்ப்பணகை-49) 2877

—7

இவ்வாறு கம்பர் சூரியன் தொடங்கி மனுவழியாகச் சிபி, தயரதன், இராமன்காறும்கூறிய இம்மரபு சோழ மரபுதான் என்பதைக் கலிங்கத்துப்பரணி தெளிவாக வற்புறுத்துகின்றது. சோழ அரச பரம்பரையைத் திருமால் தொடங்கிக் கூறும் அந்த நூலில்,

“ஆதிமால் அமல நாபிக்கமலத்து அயன் உதித்து
அயன் மரீசி என்னும் அண்ணலை அளித்த பரிசும்
காதல் கூர்தரும் மரீசி மகனாகி வளரும்
காசிபன் கதிர் அருக்கனை அளித்த பரிசும்”

கலிங்-பரணி-இராசபாரம்பரியம்.

என்ற பாட்டில் திருமால் தொடங்கி அயன், மரீசி, காசிபன், கதிர் என்றவர்தம் வழிமுறையைக் கூறி அடுத்து,

“அவ்வருக்கன் மகனாகி மனுமேதினி புரந்து
அரிய காதலனை ஆவினது கன்று நிகர் என்று
எவ்வருக்கமும் வியப்ப முறைசெய்த கதையும்
இக்குவாகு இவன் மைந்தன் எனவந்த பரிசும்”

” ” ”

என்ற பாட்டில் சூரியன் தொடங்கி மனு, இக்குவாகு என்ற இருவரை அம்மரபில் தொடர்ந்தவர் என்று கூறுகின்றார். இவர்களில் மனு சோழநாட்டுத் திருவாரூரினனாய் இருந்து ஆவிற்கு முறைசெய்ததை யாரும் வடநாட்டு நிகழ்ச்சி என்று கூறமுடியாது. இவன் தென்னகத்து ஆண்ட சோழ குடித் திராவிடனே.

அடுத்துப் பல அரிய செயல் புரிந்த சோழர்களைக் கூறிச் சிபியின் வரலாற்றைக்

“கடல்கலக்க எழும் இன்னமுது தன்னையொருவன்
கடவுள் வானவர்கள் உண்ண அருள் செய்த கதையும்
உடல் கலக்கற அரிந்து தசையிட்டும் ஒருவன்
ஒருதுலைப் புறவொடு ஒக்கநிறை புக்கபுகழும்”

கலிங்-பரணி-இராசராசபாரம்பரியம்.

என்ற பாட்டில் குறிப்பிடுகின்றார்.

கம்பர் தம் நூலில் பலவிடத்து இராமன் திராவிடன், சோழ மரபினன் என்பதைச் சுட்டிக்கூறியதற்குக் கலிங்கத்துப்பரணி அரண் செய்தது போலவே கம்பர் காலத்தை அடுத்து வாழ்ந்த புலவர் பெருமக்களும், அரண் செய்துள்ளனர்.

" அறவாழி மைந்தன்மேல் ஊர்ந்தோன் "
இராசராசசோழன் உலா-5

என்று இராசராச சோழனுலாவுடையாரும்,

" மருளும் பசுவொன்றின் மம்மர் நோய்தீர
உருளும் திருத்தேர் உரவோன் "
குலோத்துங்கன் உலா 3-4

என்று குலோத்துங்க சோழனுலா வுடையாரும்,

" சிந்தனை ஆவிற்கு முற்றத் திருத்தேரின்
மைந்தனை ஊர்ந்த மனுவோனும் "
விக்கிரமசோழன் உலா : 7, 8

என்று விக்கிரமசோழனுலாவுடையாரும் கூறிச் சோழ மரபினன் மனு என்பதையும், அவன் திராவிடன் என்பதையும் வற்புறுத்துவதைக் காணலாம்

இவர்கள் இவ்வாறு கூறக்காரணம் இப்பெருமக்கட்கு முன்னர் வாழ்ந்த தமிழ்ப்புலவர் பரம்பரையினர், தம்மவர் பெருமையினை உணர்ந்து அம்மரபினை விடாது தாம் இயற்றும் இலக்கியங்களின் வழியாகக் காத்து வைத்ததே காரணம்.

பழமொழி என்ற நூலில் இம்மனுவின் வரலாற்றை,

" கறவைக்கன்று ஊர்ந்தானைத் தந்தையும் ஊர்ந்தான் "
பழ. 242

என்று கூறியது நோக்கத்தக்கது.

இந்நூலுக்குச் சற்றுமுன்னர் எழுந்த ' மணிமேகலை ' யில்

" மகனை முறை செய்த மன்னன் "

என்று சாத்தனார் இம்மரபினை நினைவு கூர்ந்தார்.

இவ்வாறு இவர்கள் சோழ மரபினரை நினைவு கூறக் காரணம் அவருக்கு முன்னர் வாழ்ந்த இளங்கோவடிகள், மனு என்பவன் சோழன்தான் என்றும், அவன் சோழ நாட்டினன் என்றும், அவன்மரபினர் ஆட்சிக்குட்பட்டு வாழ்பவள் தான் என்றும் தன்னை யார் என்று வினவிய பாண்டிய வேந்தனுக்கு மாற்றங்கூறும் போது கண்ணகி,

" வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சு சுடத்தான் தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப்புகார் என் பதியே"
சிலம் 20 வழக்கு 53-56

என்று கூறுவது கொண்டு மனுவேந்தன் சோழ மரபினரின் முன்னோன் என்பதும் அவன் வழி வந்த தயரதன் இராமன் முதலியோர் திராவிடர்கள் என்பதும் சொல்லாமல் விளங்கும் செய்தியாகும். இதுபோலவே சிபியைப்பற்றிய செய்தியையும் கம்பர்,

"பிறந்தநாள் தொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்தநாள் உண்டோ என்னைச் சரண என்று வாழ்கின்றானைத்
துறந்த நாட் கின்றுவந்து துன்னினுன் சூழ்ச்சியாலே
இறந்தநாள் அன்றோ என்று இருந்தநாள் ஆவதென்றான்"
(யுத்த விடணன் அடைக்கலம்: 110) 6599

என்று இராமன் தன்பால் அடைக்கலம் புகுந்த 'வீடணனை' ஏற்றுக்கொள்வது, புறவிற்கு அடைக்கலம் கொடுத்த சிபி வழிவந்த தனக்கும் ஏற்றதென்று கூறும்போது குறிப்பிடுவதைக் காணலாம்.

இதனைக் கலிங்கத்துப்பரணி,

"உடல்கலக்கற அரித்து தசையிட்டுமொருவன் ஒருதுலைப்
புறவொடு ஒக்கநிறைபுக்க புகழும்"
(கலிங்கத்துப்பரணி இராசபாரம்பரியம்)

என்று சோழ மரபினரைத் தொடர்ந்து கூறும் இடத்தில் குறிப்பது கொண்டு தெளியலாம்.

இராசராச சோழனுலா,

"புக்கால் மருன் நிறையென்று சரணடைந்த வஞ்சப்
புருநிறை புக்க புகழோன்"

என்று கூறுவதையும்,

குலோத்துங்க சோழனுலா,

"கொலையேறுடம் படையைக் கொய்தாலும் எய்தாத்
துலையேறி வீற்றிருந்த சோழன்"

என்று பேசுவதையும்,

விக்கிரம சோழனுலா,

"உலகறியக் காக்குஞ் சிறுபுறவுக் காகக் களிகூர்ந்து
தூக்கும் துலைபுக்க தூயோனும்"

என்று ஒருமிக்கக் கூறுவதைக் காணலாம்

கம்பர், செயங்கொண்டார், ஒட்டக்கூத்தர் போன்றோர் இவ்வாறு சோழ மரபு சிபி மரபென்று கூறக்காரணம் இவர்கட்கு முன்வாழ்ந்த தமிழ்ச்சான்றோர்கள் இம்மரபினைத் தம் இலக்கியங்களில் தொடர்ந்து காத்ததாலேயாம்.

கண்ணகி பாண்டியனவையில் தன்னைப் பாண்டியனிடம் இன்னார் என்று குறிப்பிடும்போது.

“எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன்”

சிலம்பு வழக்குரை : 51 5 2

என்று சோழமரபு கூறுமுகத்தான் சிபிச்சோழனைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

இளங்கோவடிகள் இச்சோழவரலாற்றை,

“அறனறி செங்கோல் மறநெறி நெடுவான்
புறவுநிறை புக்கோன் கறவை முறை செய்தோன்
பூம்புனற் பழனப் புகார் நகர் வேந்தன்”

சிலம்பு 23 : 57_59

“புறவு நிறை புக்குப் பொன்னுலக மேத்தக்
குறைவில் உடம்பரிந்த கொற்றவன்காண் அம்மானை”

சிலம்பு

என்று மனுவையும் சிபியையும் சோழமரபினர் என்று தவறாது சுட்டுகின்றார்.

இவர் இவ்வாறு கூறக்காரணம் இவருக்கு முன்னிருந்த சங்கச் சான்றோர்கள் புறநானூறு போன்ற நூல்களில் பரக்கப் பேசுவதாலேயாம்.

மாறோக்கத்து நப்பசலையார் என்ற புலவர்பெருமகனார், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை,

“நஞ்சுடை வாலெயிற்று ஐந்தலை சுமந்த
வேக வெந்திறல் நாகம் புக்கென
விசும்பு தீப்பிறப்பத் திருகிப் பசுங்கொடிப்
பெருமலை விடரகத்து உருமெறிந் தாங்குப்
புன்னுறு புனகண் தீர்த்த வெள்வேல்
சினங்கெழு தானைச் செம்பியன் மருக”

புறம்-37

என்று பாடும் இப்பாட்டில் சிபி சோழன் என்றும், குளமுற்றத்து துஞ்சிய கிள்ளியும் அவ்வழிவந்தோன் என்றும் கூறுவதைக் காணலாம்.

அதே கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்பசலையார்,

“புறவின் அல்லல் சொலிய கறையடி
யானை வான்மருப் பெறிந்த வெண்குடைக்
கோல்நிறை துலாஅம் புக்கோன் மருக”

புறம் 38

என்று பாடும் இந்தப் பாட்டில் சிபி தன் தசையைப் புறவிற்காக நிறுத்துக்கொடுத்தத் துலாக்கோல் யானைத்தந்தத்தால் ஆனது என்ற ஒரு விளக்கத்தைத் தந்து அத்தகைய சிபி மரபினன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்று கூறிப் பெருமை பேசுகின்றார்.

தாமப்பல் கண்ணனார் என்ற புலவர் சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தானைப் பாடும்போது.

"நிலமிசை வாழ்நர் அலமரல் தீரத்
தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக்
கால் உணவாகச் சுடரொடு கொட்கும்
அவிர்சடை முனிவரும் மருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி யஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக" புறம்-43

என்று சிபி புறவிற்கு நிறைபுகுந்த செய்தி, காற்றை உணவாகக் கொண்டு கதிரவனோடு சுழன்று வாழும் முனிவர்களையும், மருட்டியதாகும் என்று அவ்வரிய நிகழ்ச்சிக்கு அரண் செய்து பேசி, அப்பெரியோன் சோழமரபினன் என்றும், அம்மரபினன் மாவளத்தான் என்றும் குறிப்பது கொண்டு அறியலாம்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கோவூர் கிழார் பாடியபோது,

"நீயே புறவின் அல்லல் அன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை" புறம் 46

என்று குறிப்பதுகொண்டும் சிபி சோழ மரபினன் என்பதையும், கிள்ளிவளவன் அவ்வழியினன் என்பதையும் கூறக்காணலாம்.

இவ்வாறு சங்கப்புலவர்கள் சிபியைச் சோழ மரபினன் என்று போற்றிப் பேணியதால் அவர் மரபு வழிவரும் அனைத்துப்புலவர்களும் அவ்வழியினைத் தொடர்ந்து பேணியுள்ளனர்.

இவ்வளவனைப் புறநானூற்றில் வெண்ணிக்குயத்தியார் என்ற புலவர் கரிகால்வளவனின் பெருமை குறிப்பிடும்போது,

"நளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி
வளிதொழில் ஆண்ட உரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ" புறம் 66

என்று குறிப்பிடுகின்றார் இப்பாடலுக்கு உரையெழுதிய பழைய உரையாசிரியர் "நீர் செறிந்த பெரிய கடலின் கண்ணே மரக் கலத்தை ஓட்டிப்போவதற்குக் காற்றின்றி நாவாய் ஓடாதாக ஆண்டு வளிச் செல்வனை அழைத்து ஏவல்கொண்ட வலியோன் மரபில் உள்ளானே" என்று எழுதியுள்ளார். இந்த நிகழ்ச்சியைக் கலிங் கத்துப்பரணியில்,

"புலியெனக் கொடியி லிந்திரனை வைத்த வலவனும்
புணரி யொன்றிவிடை யொன்றுபுக விட்டவனும்
வலியி னிற்குருதி யுன்கென அளித்த வலவனும்
வாதராசனை வலிந்து பணி கொண்டவளவனும்"

கலிங் பரணி 193

என்று காணலாம். 'இந்த வாதராசனைப் பணிகொண்ட' வேந்த னுக்குப்பிறகு தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன் குறிக்கப் பெறுகின்றான். இவன் புறா், பத்துப்பாட்டு, சிலம்பு, மணிமேகலை, பழமொழி, மூவருலா முதலிய நூல்களில் குறிக்கப்பெறுவதைக் காணலாம்.

இதனால் கம்பர் சிபிவழிவந்த இராமனைச் சோழ மரபினன் என்றும், திராவிடன் என்றும், அரசமரபினன் என்றும் தெளிந்து, கூறியபின் இராமனைத் திராவிடருக்கு வேறானவன் என்று புறக் கணித்தது பேதைமையன்றோ?

கம்பர் தம் ராமாயணத்தில் இராமன் குலமுறை கிளத்தும் போதுகுறிப்பிட்ட சிலரைக்கூறி, சில சோழவேந்தர்களை விடுத்துள் ளார். காரணம் ஒவ்வொருவரும் ஒருவாறு தெய்வீக ஆற்றல் உடைய வர்கள் ஆதலால் அதுவே ஒரு தனித்த காவியமாகுமென்று அஞ்சி யேயாம். எனினும் குறிப்பிட்ட சிலர் வரலாற்றை அவர் கூறு கின்றார். இராசபாரம்பரியம் கூறப்புகுந்த செயங்கொண்டாரும் எல்லா அரசர் வரலாற்றையும் கூறவில்லை. கம்பர் கூறிய பலரோடு, அவர் கூறாத பலரையும் கூறி அவ்வேந்தர்களில் சிறந்தவனாகத் தூங்கு எயில் எறிந்த தொடித்தோட் செம்பியன் என்பவனைப் பரணியில் செயங்கொண்டார்,

"தேங்கு தூங்கு எயில் எறிந்த அவனும் திரள் மணிச்
சுடர் விமானமது வான்மீசை உயர்த்த அவனும்
தாங்கள் பாரதம் முடிப்பளவும் நின்று தருமன்
தன் கடற்படைதனக்கு உதவிசெய்த"

கலிங் பரணி இராச

என்ற பாட்டில் தூங்கு எயில் எறிந்த தொடித்தோட்செம்பியனைக் குறிப்பிட்டுள்ளார். இதனை ஒட்டக்கூத்த,

"தூங்கு எழில் ஏறிந்த சோழனும்"

விக்கிரம உலா 26

என்றும்

"தூங்கு எயில் எறிந்த சுடர் வாளோன்"

விக்கிரம உலா 17

என்றும்

"தூங்கு புரிசை துணித்தகோன்"

இராசராசன் உலா 36

என்றும் கூறுவது காணலாம்.

இதனைப் பழமொழி ஆசிரியரும்,

"வீங்கு தோட்செம்பியன் சீற்றம விறல் விசும்பில்
தூங்கு எயிலும் தொலைத்தலால்" பழ எ9

என்று கூறுதற்குக் காரணம் அவருக்கு முன்வாழ்ந்த சாத்தனார்.

"தூங்கு எயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்"

மணி 1:4

என்று கூறியதாலேயாம்.

சாத்தனார் இவ்வாறு கூறக்காரணம், இலங்கோவடிகள்,

"வெயில் விளங்கு மணிப்பூண் விண்ணவர் வியப்ப
எயில் மூன்றெறிந்த இகல்வேல் கொன்றவன்"

சிலம்பு நீர்ப்படை 27:164-165

என்றும்,

"தூங்கு எயில் மூன்றெறிந்த சோழன்காண் அம்மானை"

சிலம்பு 29. அம்மானை 17

என்று கூறியதாலேயாம்.

இளங்கோவடிகள் இவ்வாறு தூங்கு எயில் எறிந்த செம்பியனைச் சோழ மரவினன் என்று கூறியதற்குக்காரணம், புறநானூற்றில் மாறோக்கத்து ந'பசலையார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப்பாடியபோது சிபி மரபினன் என்றதோடு நில்லாமல்,

"ஒன்னார் உட்கும் துன்னரும் கடுந்திறல்
தூங்கெயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்
அடுதன் நின் புகழும் அன்றே" புறம் 39

என்று கூறியதாலேயாம். இவ்வரலாற்றினைச் சிறுபாணாற்றுப் படையில் நத்தத்தனார் என்ற :புலவர்.

"ஓங்கு எயிற்கதவம் உருமுச்சுவல் சொரியும்
தூங்கு எயில் எறிந்த தொடி விளங்கு தடக்கை
நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்"

சிறு பாண்: 80:82

என்றும், கூறுகின்றார்.

"திறல் விளங்கு அவுணர் தூங்கு எயில் எறிந்த
விறல்மிகு முரசின் வெல்போர்ச் செழியன்"

என்றும் கூறுகின்றார்.

இவ்வாறு சங்கச் சான்றோர்கள் கூறிய முறையினைப் பின்பற்றித்தான் கம்பர் பாடியுள்ளார் என்பதை ஐயமறத் தெளிந்து கொண்டால் இராமன் சோழகுல முதல்வனாய தனித்திராவிடன் என்பது தெளிவாகும்.

கலிங்கத்துப்பரணி போன்ற நூல்களில் மாந்தாதா முதலிய அரசர்கள் சோழர்களின் முன்னோர் என்பதை

"ஒருதுறைப்புனல் சினப்புலியும் மானும் உடனே
உண்ண வைத்த உரவோன் உலகில் வைத்த அருளும்
பொருதுறைத் தலைபுகுந்து முசுகுந்தன் இமையோர்
புரமடங்கலும் அரண் செய்து புரந்த புகழும்"

-கலிங்.பரணி : 189

என்ற பாட்டில் புலியும் மானும் உடன் ஒருதுறையில் நீருண்ணச் செய்த மாந்தாதா என்ற சோழ வேந்தனைக் குறிப்பிட்டுள்ளார். இவனைப்பற்றிக் கம்பர்,

"கருதலரும்பெருங்குணத்தோர் இவர் முதலோர் கணக்கிறந்தோர்
திரிபுவனம் முழுதாண்டுச் சுடாநேமி செலநின்றோர்
பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையின் நீருண்ண உலகாண்டோன் உளனொருவன்"

-கம்ப.பால. குலமுறை: 11:725

என்று கூறுகின்றார். இக்கருத்தினை மூவருலாவும் வற்புறுத்துகிறது.

இந்த மாந்தாதா சோழகுல முதல்வன் என்பதை இராமன் பெருமையோடு கூறிக்கொள்வதை, அயோமுகியினின்றும் மீண்ட இலக்குவனைக் கண்டு பேசும்போது,

—8

" மாந்தா முதல் மன்னவர் தம்வழியில்
வேந்து ஆகை துறந்தபின் மெய்யுறவோர்
தாந்தா மொழியத் தமியேனுடனே
போந்தா யெனை விட்டனை போயினையோ "

- ஆரணிய அயோமுகி , 73:3714

என்று கூறுகின்றார்.

கம்பர் முசுகுந்தன் என்ற சோழனைப்பற்றிக் கூறி அவன் மரபினன் இராமன் என்பதனை,

" மறைமன்னு மணிமுயும் ஆரமும் வாளொடு மின்னப்
பொறை மன்னு வானவரும் தானவரும் பொரும் ஒருநாள்
விறன் மன்னர் தொழுகழலாய் இவர் குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன ஒருதனியே திரிந்த மராபதி காத்தோன் "

-பால குலமுறை : 6:726

என்று கூறியதைக் கலிங்கத்துப்பரணியில் சயங்கொண்டார்,

" பொருதுறைத் தலைபுகுந்து முசுகுந்தன் இமையோர்
புரமடங்கலும் அரண் செய்து புரந்த புகழும் "

கலிங்கத்து : 189

என்று கூறுவதாலும் அறியலாம்

இம் முசுகுந்தனைப்பற்றிச் சிலப்பதிகாரமும் பேசுகின்றது. இவன் சூரியகுலத்து அரசன். காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து அரசாண்டவன். இவன் அவுணர் கொடுமைனின்றும் இந்திரன் நகரைக் காக்கத் துணையாகச் சென்றான். அப்பொழுது அவுணர்கள் முசுகுந்தனுக்குத் தோற்றுப் பின்னர் முசுகுந்தன் மனம் இருளும்படி அம்பொன்று தொடுத்தனர். அதனைப் பூதம் ஒன்று தடுத்தது அப்பூதத்தை இந்திரன் முசுகுந்தன் பொருட்டுக் காவிரிப்பூம் பட்டினத்திற்கு அனுப்பினான். அவனோடு போந்த பூதம் முசுகுந்தன் தரும் பலியுண்டு வாழ்ந்த செய்தியை.

" கடுவிசை அவுணர் கணங்கொண் டண்டிக்
கொடுவரி ஊக்கத்துக் கோநகர் காத்த
தொடுகழல் மன்னர்க்குத் தொலைந்தனராகி
நெஞ்சிருள் கூர நிகர்த்து மேல் விட்ட
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்
திருந்துவே லண்ணற்குத் தேவனேவ
இருந்து பலியுண்ணும் இடனும் "

-சிலம்பு கடலாடு : 6-19

என்பதால் அறியலாம்.

இவ்வாறு இளங்கோவடிகள் கூறிய முசுகுந்தச்சோழனை இராமனுக்கு முன்னோன் என்று கம்பர் கூறுவதால் இராமன் சோழன் என்பது தெளிவு.

இராமனுடைய முன்னோர்களாய சோழமன்னர்கள் ஆண்டு வந்த காவிரிப்பூம்பட்டினமும் மிகப் பழைமையான வரலாற்றை யுடையது காவிரிப்பூம்பட்டினத்தின் பழைமையும், இராமனுடைய முன்னோர்களின் பழைமையும் ஒந்து நோக்குவதற்குரியன. இவ் விரண்டு காலங்களின் தொன்மையும் வரலாற்றுக் காலத்திற்கு எத்தனையோ காலம் முற்பட்டது எனலாம்.

### மணிமேகலை கூறும் காவிரிப்பூம்பட்டின வரலாறு-காந்தமன்

காந்தமன் என்பவனும் ஒரு சூரியகுலத்து அரசன். இவனும் சோழ மரபினனே. தன் நாடு நீர் பெற்று வளமுற்று வாழவேண்டும் மென்று அகத்தியனை வேண்ட அவன் தன் கரகத்தினைக் கவிழ்த்து அதனின்றும் ஆகாயகங்கை என்னும் காவிரியைத் தோற்றுவித்தான். சோழ நாட்டை வளநாடாக்க அக்காவிரியைப் போக்கியபோது சம்பாபதி என்னும் தவமூதாட்டி காவிரியை வரவேற்றாள். இவள் ஒரு காலத்து அரக்கர்களால் சோழ நாட்டுக்குத் தீங்கு நிகழாதவாறு காப்பதற்காக நோன்பு மேற்கொண்டிருந்தவள். அகத்திய முனிவன் காவிரியிடம் சம்பாபதியைக்காட்டி வணங்கப் பணிக்க அவள் வணங்கியபோது சம்பாபதி காவிரிப்பூம்பட்டினத்தின்பழைமையைக் கூறுகின்றாள். "தெய்வலோகம் ஆறினும் உள்ள தெய்வ பிண்டங் களையும், பிரமலோகம் இருபதிலுள்ள இருபதுவகைப் பிரம பிண்டங் களையும் பிரமன் படைத்த அந்நாளிலிருந்து சம்பாபதி எனும் என் பெயர் இவ்வூர்க்கு வழங்கிற்று இனி இவ்வூர் நின் பெயர் தாங்கி வழங்குவதாக" என்று காவிரியிடம் கூற அன்று தொடங்கிக் காவிரிப்பூம்பட்டினம் என்ற பெயரில் வழங்கலாயிற்று. இதனை மணிமேகலையில் காணலாம்.

"தெய்வக் கருவுந் திசை முகக்கருவும்
செம்மலர் முதியோன் செய்த வந்நாள்
என் பெயர்ப்படுத்த விவ்விரும்பெயர் மூதூர்
நின்பெயர்ப் படுத்தேன் நீவா ழிய வென"

மணிமேகலை.பதிகம்: 28-33

## கழுகரசன் சம்பாதியும் காவிரிப்பூம்பட்டினமும்

கழுகாசன் சம்பாதியின் வரலாறு இராமாயணத்தில் விரித்துரைக்கப்பெறுகின்றது. சம்பாதி, சடாயு என்ற இருவரும் அருணனின் மைந்தர்கள். இவர்கள் அண்டங்கள் இரண்டும் உயிர்த்து இவ்வுலகம் தோன்றும் முன்பே தோன்றியவர்கள்.

"........ அண்டம் இரண்டும் முந்து உயிர்த்து
இடு அ(ந்)நாள் வந்து இருவோமும் உளோம்"

கிட்கிந்தா. சம்பாதி-36 : 4790

சம்பாதியும் சடாயுவும் கற்பங்கள் பல கண்டவர்கள் என்பர் கம்பர்.

"சிற்பம் கொள் பகல் எனக் கடிது சென்று நீர்
கற்பங்கள் எனைப்பல கண்டுள்ளான்தனை"

ஆரணிய சடாயுகாண்-8

இவருள் சடாயு என்பவன் தயரதனின் உயிர்த்தோழனாவான்.

"அருணன்தன் புதல்வன்யான் அவன்படரும்
உலகு எல்லாம் படர்வேன் ஆழி
இருள்மொய்ம்பு கெடத்துரந்த தயரதற்கு இன்
உயிர்த் துணைவன் இமையோரோடும்
வருணங்கள் விரிகின்ற காலத்தே
வந்து உதித்தேன் கழுகின் மன்னன்
தருணங்கொள் பேர்ஒளியீர் சம்பாதி
பின்பிறந்த சடாயு என்றான்"

ஆரணிய சடாயு காண்: 39 : 2810

சடாயு, சம்பாதி என்ற இருவரும் தம் தந்தையான அருணனைக் காணும் பொருட்டு விண்மேலெழுந்து சென்றபோது சூரியன் வெப்பத்தில் சடாயுவின் சிறகு தீயக்கண்ட சம்பாதி தன் சிறையின் நிழலில் அவனை அழைத்துச் சென்றான். அவன் சிறகும் தீய்ந்ததால் இருவரும் கீழே விழுந்தனர். அவர்கள் சிறகு முளைப்பதற்குரிய வரமொன்றைக் கதிர்ச்செல்வன் வழங்கினான் அஃதாவது இராமன் சீதையைத் தேடிச் செல்கையில் குரங்குத்தலைவர்கள் இராமநாமம் கூறும்போது அச்சிறகு வளரும் என்று கூறினான். அது மெய்யாயிற்று என்று சம்பாதி கூறுகின்றான். அது,

"எல்லீரும் அவ்இராம நாமமே
சொல்லீர் என்சிறை தோன்றும்"

கிட்: சம்பாதி-48 : 4802

என்பதாகும்.

இச்சம்பாதியே, இராவணனால் மறைத்து வைக்கப்பெற்ற சீதை இருக்கும் இடத்தை இராமனுக்குத் தெரிவித்தவன்.

"பாகுஒன்று குதலையாளைப் பாதக அரக்கன் பற்றிப்
போகின்ற பொழுது கண்டேன் புக்கனன் இலங்கை புக்கு
வேகின்ற உள்ளத்தாளை வெஞ்சிறை யகத்து வைத்தான்
ஏகுமின் காண்டிர் ஆங்கே இருந்தனள் இறைவி இன்னும்"

கிட்: சம்பாதிப்: 59

இச்சம்பாதியைப்பற்றி மணிமேகலை குறிப்பிடுகின்றது மணிமேகலை சுதமதியோடு பூக்கொய்யச்சென்ற உவவனத்தைப் பற்றிக் கூறும்போது காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள சில வனங்களைக் குறிப்பிடுகின்றார். ஆண்டுச் சம்பாதி இருந்தவனம் என்ற ஒன்று இருந்ததைச் சம்பாதியின் வரலாற்றோடு இணைத்து,

"வெங்கதிர் வெம்மையின் விரிசிறை இழந்த
சம்பாதி இருந்த சம்பாதி வனமும்"

மணிமேகலை-மலர்வனம் புக்க: 53-54

என்று பேசுகிறார்.

இச்சம்பாதி காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகில் உள்ள புள்ளிருக்கு வேளூர் இறைவனை ஒரு யோசனை தூரத்திலிருந்து பூக்கொணர்ந்து பூசித்தான் என்று தேவாரம் கூறுகின்றது.

"வாசநலஞ் செய்திமையோர் நாடோறும் மலர்தூவ
ஈசனெம் பெருமானார் இனிதாக உறையுமிடம்
யோசனை போய்ப்பூக்கொணர்ந்தங் கொருநாளும் ஒழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே"

சம்பந்தர் தேவாரம்: புள்ளிருக்குவேளூர்: 4

இராமன் முன்னோனாய மனு, சோழமரபினன் என்பதை மணிமேகலை கூறும்.

உதயகுமரன் மணிமேகலை மீது காதல்கொண்டு அவளை அடையமுயல்வது அறிந்த அவள் காயசண்டிகையின் உருவில் இருப்ப, அதனையும் அறிந்த உதயகுமரன் உலகஅறவியில் அவளைத் தேடிவர, காயசண்டிகை கணவன் ஆண்டுப்போந்து மணிமேகலையைத் தன் மனைவி என்று வடிவால் பிழைபட உணர்ந்துபேச, அவள் அவனை அறியாள்போல் பேசியதோடு உதயகுமரனிடம் உற்றாள்போல் உரையாடக்கண்டு, அவள் அவன்பால் மனம் திரும்பியதாகக் கருதி அவனை வாள்கொண்டு கொன்றுவிட்டுத் தன்னகம் போய் விடுகின்றான்.

இச்செய்தியை அறிந்த அரசன் விஞ்சையன் காமவயப் பட்ட தன் மகனைத் தனக்கு வேறாக அவன் கொன்றது முறை என்றும், மனுவழியில் கொடுஞ்செயல் புரியும் ஒருவன் பிறந்தான் என்ற சொல் பிற அரசர் செவியகம்புகுவதற்குள் அவனை ஈமத் தேற்றி எரிக்குமாறும் கூறுகின்றான்

"மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தம்செவி உறுவதன் முன்னம்
ஈங்கிவன் தன்னையும் ஈமத் தேற்றி

மணிமேகலை. சிறைசெயிகாதை. 210 14

இப்பாடலில் குறிக்கப்பெறும் மனுநீதிச்சோழன் மரபில் வந்தவனே இராமன்என்பது விளங்கும்.

கார்த்த வீரியன் என்பானை ஒழிக்க வேண்டித் திருமால் எடுத்தது பரசுராமாவதாரம். இப்பரசுராமனால் கொல்லப்பெற்ற கார்த்தவீரியன் இராவணனை வென்றவன். கம்பராமாயணத்தில் பரசுராமப் படலம் என்று ஒரு படலம் இவன் வரலாறு கூறுகின்றது. உத்தர காண்டத்தில் கார்த்த வீரியனால் கட்டுண்ட படலம் என்று கார்த்த வீரியன் வரலாறும் அவனிடம் இராவணன் தோற்றதும் பற்றி விரித்துக் கூறுகின்றது.

திருமாலாய பரசுராமன் கார்த்த வீரியனைச் செருக்கடக்கிய பின்னும், செருக்குற்றுப் பரம்பொருளாய இராமனால் ஒடுக்கப் பெறுவதைக் காணலாம்.

இப்பரசுராமன். தன் தந்தை ஜமதக்கினி முனிவரைக் கார்த்த வீரியன் மக்கள் கொன்றனர் என்பதற்காக, கார்த்த வீரியனைக் கொன்றதோடல்லாமல் இருபத்தொரு வழிமுறை அரசமரபினரைக் (க்ஷத்திரியர்களை) கொன்று திரிந்தான். அவன் காவிரிப் பூம்பட்டினம் புகுந்து ஆண்டு ஆட்சி செய்த காந்தமனையும் அவன் கொல்வான் என்பதால் அந்நகரைக்காக்குந் தெய்வமாய சம்பாதி பரசுராமன் கண்ணிற்படாது மறைந்து வாழுமாறு ஆணை யிட அவன் அரசேற்கும் உரிமையற்ற கணிகை மகன் சுகந்தன் என்பானை அமர்த்தினால் அவனைப் பரசுராமன் கொல்லான் என்று அமர்த்தி, அகத்தியன் அருள்பெற்று மீளும் வரையில் அவனைக்காக்குமாறு பணித்து அகன்றான் என்ற ஒரு வரலாற்றை, 'மணிமேகலை' கூறுகின்றது.

" மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்
தன்முன் றோன்றல் தகா தொளி நீ யெனக்
கன்னி யேவலிற் காந்த மன்னவன்
இந்நகர் காப்போர் யாரென நினை இ
நாவலந் தண்பொழில் நண்ணூர் நடுக்குறக்
காவற் கணிகை தனக்காங் காதலன்
இகழ்ந்தோர்க் காயினு மெஞ்சுக லில்லோன்
சுகந்த ஞமெனக் காதலிற் கூஉய்
அரசாளுரிமை நின்பா லின்மை யிற்
பரசு ராமனின் பால்வந் தணு கான் "

(மணிமேகலை சிறைசெய்காதை : 25-34)

இங்குத் தயரதனைப் போன்றே காவிரிப்பூம்பட்டினத்தை ஆண்ட காந்தமனும் பரசுராமனைக்கண்டு அஞ்சினான் என்பதைக் காண்கிறோம். தயரதன் காலத்தில் பரசுராமனின் அவதாரம் முடிவடைந்தது. எனவே இக்காந்தமன் தயரதனுக்கு முற்பட்ட சத்திரியகுலத்தைச் சார்ந்தவனென்பது போதரும். எனவே இம் மன்னன் வழிவந்த இராமனும் சோழ மரபில் வந்த திராவிடனே என்பது உறுதியாகும்

## சோழ அரசர் வழிமுறை — கல்வெட்டுக்கள் வழி

### கன்னியாகுமரிக்கல்வெட்டு — வீரராசேந்திரதேவன்

1. விசுவாதிநாதன், 2. பிரமன், 3. மரீசி, 4. காசிபன், 5. விசுவாசுவன், 6. மனு, 7. இட்சுவாகு, 8. விருட்சிசுவன், 9. காகுத்தன், (புறஞ்செயன்) 10. பிறாது, 11. குவலஸ்வன், 12. மாந்தத்ரி, 13. முசுகுந்தன், 14. அரிச்சந்திரன், 15. சகரன், 16. பகீரதன், 17. ரிதுபர்னன், 18. திலீபன், 19. இராம இலக்குவபரதசத்ருக்கன், 20. சோழன், 21. இராஜகேசரி, 22. பரகேசரி, 23. மிருத்துஜித், 24. வீரசேனா: 25. சித்ரா, 26. புட்பகேது, 27. கேதுமாலா, 28. சாநுத்ராஜ், 29. பஞ்சவன், 30, இன்றிதா, 31. மனோரதன், 32 கரிகாலன், 33. பெருநற்கிள்ளி, 34. வல்லபன், 35. ஜெகதேகமல்லன், 36. வியாலபயங்கரன், 37. விசயாலயன். 38. ஆதித்யன், 39. பராந்தகன், 40. அரிந்தமன், 41. பராந்தகன், 42. இராஜேந்திரன், இராசாதிராசன், இராஜேந்திரதேவன், வீரராஜேந்திரன்.

அன்பில்செப்பேடு—சுந்தரசோழன் 4ம் ஆண்டு

[1]. விட்டுனு, 2. பிரம்மா, 3. மரீசி, 4 காசிபன், 5. சூரியன், 6 .மகா வீரன், 7. றாத்ரஜித், 8. சந்திரஜித், 9 உசீநரன், 10. சிபி, 11 சோழன், 12 சென்னிகிள்ளி, 13 கரிகாலன், 14. கோச்செங்கணான், 15. நல்லாதிகோன், 16. வல்லபன், 17. சகாந்தன், 18. விசயாலயன், 19. இராசகேசரி, 20. வீரசோழன், 21. அரஞ்சிகன், 22. சுந்தரசோழன்.

திருவாலங்காடு—இராஜேந்திரசோழன்

1. பெருநற்கிள்ளி, 2. கரிகாலன், 3. கோச்செங்கணான், 4. விசயாலயன். 5. ஆதித்யன், 6. பராந்தகன், (1.இராசாத்தியன், 2. கண்டராத்தியன், 3. அரிந்தமன், மதுராந்தகன், பராந்தகன்... ஆதித்யன், இராசராசன் இராஜேந்திரன்

இங்ஙனம் கல் வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் சோழ அரசர்கள் தங்கள் முன்னோர்களை வரிசைப்படுத்திக் கூறும் வழக்கமுண்மையை அறியலாம். இந்த வீரராஜேந்திரன் கொடுத்த கல்வெட்டில் திருமால் தொடங்கிய சோழ பாரம்பரியத்தையும் அதில் இராம இலக்குவர்கள் குறித்திருப்பதையும் காணும்போது, இராமன் சோழமரபில் வந்த தமிழனே என்பதைத் தெளிவாக அறியலாம்.

## சோழ மரபில் வந்த இராமன் வடபுலத்தன் ஆவதேன்?

மனித குலத்தின் முதல்வனான மனு தமிழகத்துப்புகாரை அடுத்த திருவாரூரைத் தனக்குத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவன். அவன் ஆண்ட செய்தியை இளங்கோவடிகள்,

"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி யுகுநீர் நெஞ்சு சுடத்தான் தன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்"

- சிலம்பு வழக்குரை 53-55

என்று பாடுகின்றார்.

இம்மனு ஆவிற்கு முறை செய்த அரிய செயலைப் பாராட்டித் தமிழகத்திலுள்ள பலபுலவர்கள் புகழ்ந்துள்ளனர்.

சேக்கிழாரும் திருவாரூர் சிறப்புக் கூறுமிடத்து,

"கொற்ற ஆழி குவலயம் சூழ்ந்திடச்
சுற்றுமன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றம் நீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்ற நீதியும் தன் பெயராக்கினன்."

பெரியபுராணம் திருநகரச்சிறப்பு 15

என்று கூறுகின்றார்.

மனுச்சோழன் திருவாரூரைத் தனக்குத் தலைநகராகக் கொண்டு ஆண்டான் என்னில் திருவாரூர் எவ்வளவு பழமை யானது என்பதை அறியலாம். அப்பர்,

"புகையெட்டும் போக்கெட்டும் புலன்களெட்டும்
பூதலங்கள் அவை எட்டும் பொழில்கள் எட்டும்
கலையெட்டும் காப்பெட்டும் காட்சியெட்டும்
கழற்சேவடியடைந்தார் களைகண் எட்டும்
நகையெட்டும் நாளெட்டும் நன்மை எட்டும்
நலஞ்சிறந்தார் மனத்தகத்து மலர்கள் எட்டும்
திசை எட்டும் தெரிப்பதற்கு முன்னே பின்னே
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளோ"

திருவாரூர்த்தாண்டகம் 9 : 6591

இப்பாடல் கொண்டு திருவாரூர்ப் பழமை உணரலாம். இவ்வாறு தமிழகப்புலவர் பெருமக்களால் போற்றப்பட்ட மனு மனித குலத்து முதல்வன் என்பதைப் பாரதம், பாகவதம், வான்மீகம் போன்ற நூல்களில் தெளிவாகக் காணலாம். வான்மீகி முனிவர் இதுபற்றிக் கூறுவதைப் பின்வரும் பகுதிகளில் காணலாம்.

"பிரமா என்பவர் என்றும் உள்ளவர். அவர் புலன்களுக் கெட்டாத பரமனிடத்தினின்றும் உண்டானவர். அவரிடத்தினின்றும் மரீசி உண்டானார். அம்மரீசியின் பிள்ளை காசிபர். இக்காசி பரிடத்தினின்றும் சூரியன் உண்டானார். இச்சூரியனின்றும் மனு என்பவர் தோன்றினார். இம்மனு என்பவரே மானிடக் கொடி களுக்குத் தந்தையாவார். இம்மனுவின் மகன் இக்குவாகு என்று பரம்பரை தொடர்ந்து வருகின்றது. இக்குவாகுவைப்பற்றிப் பாகவத புராணம்,

—9

“ சொல்லும் அம்மனு மூன்றும் மிடுங்காலேச் சுடர் விரி
மூக்கினின்றுதித்த
நல்லெழில் இக்குவாகு என்றுரைப்போன் நவை
அறவுரைத்த மைந்தர்கள்தாம்
செல்லுறழ் தடக்கை விகுக்கியோடு அருஞ்சீர் தேர்நிமி
தண்டகன் முதலாம்
எல்லேயில் திறலார் நூற்றுவர் என்பவர் இயம்புமன்னோர்களின்
விகுக்கி ”

என்று கூறித் தொடர்ந்து இராமன் முதலியோரையும் அவனைத் தொடர்ந்தோரையும் பற்றிக் கூறுகின்றது.

இந்த இக்குவாகு என்பவன் நெடுங்காலம் தவம் பேணி பிரமன் வழிபட்ட திருமாலை அயோத்திக்குக் கொண்டு வந்தவன். இதனைக் கம்பர்,

“பிணி அரங்க வினே அகல பெருங்காலம் தவம் பேணி
மணி அரங்கு நெடுமுடியாய்! மலர் அயனே வழிபட்ட
பணி அரங்கப் பெரும் பாயற் பரஞ்சுடரை யாம் காண
அணி அரங்கம் தந்தானே அறியாதார் அறியாதார்”.

(பால குலமுறை: 2)

என்று கூறுகின்றார். இந்த இக்குவாகுவே அயோத்திக்கு முதல் மன்னன் என்றும், இவனுக்கு முன்னிருந்த மன்னர்களெல்லாம் தென்னாட்டைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர் என்றும் வான்மீக இராமாயணத்தால் அறியமுடிகின்றது.

வான்மீக இராமாயணம் அயோத்தியாகாண்டம் 70 ஆவது சருக்கம் உஆவது சுலோகத்தில்,

“அயோத்தி அந்த இக்குவாகு மன்னனை முதல் மன்னனாக அறியும். ஸ்ரீமான் என மூன்று உலகத்திலும் மேம்பாடுற்றவராகிய குஷி என்பவர் இக்குவாகுவின் புதல்வர்.” என்று கூறுகின்றார். இக்குவாகு மன்னனை அயோத்தி முதல் மன்னனாக அறியும் என்பதால் அம்மன்னன் அயோத்திக்குக் குடிபுகுந்தது உணரலாம். குடிபுகுந்தான் என்றால் எங்கிருந்து குடிபுகுந்தான் என்பது தெரிய வேண்டுமன்றோ?

தென்னகத்துத் திருவாரூரில் மனு ஆண்டது மேலே மெய்ப்பிக்கப்பெற்றதால் அவன் வழிவந்த இக்குவாகு தென்னகத்திலி

ருந்து வடபுலத்திற்குக் குடியேறினான் என்று உறுதியாகக் கூறி விடலார். அக்காலத்தில் வடபுலந் தென்புலப் பாகுபாடில்லை, கண்கண்ட நாடெல்லாம் சோழருடையவாயின.

இவ்வாறு வடபுலத்து அரசாண்ட சோழ அரசர்களின் மரபில் குஷி என்பவர் வந்து விகுஷி என்பார் பிறந்து அவருக்கு அனரண்யன் என்பவர் பிறந்து அயோத்தியை அரசாண்ட போது இராவணன் திசைவெற்றிமேற்கொண்டான். இவன் இவ்வனரண்யனைமுறையின்றி வென்று பரிகசித்தபோது அவன் சாபமிட்டதாகத் தமிழ் உத்தரகாண்டம் கூறும்.

"காலத்தினை ஞாலத்தவர் எவரே கடப்பவர்தாம்
ஆலக்கொடு மனத்தோய் அவமதித்தாய் எனையதனல்
கோலத்தசரத ராமன் என் குலத்தோன் கொடுங்கணையால்
தாலக்குலைபோல் நின்தலை தரைவீழ்கெனச் சபித்தான்".

(இராமா.உத்தர.திக்விசயப்-41,33

இந்த இக்குவாகு வேந்தனுக்கு மக்கள் நூற்றுவர் இருந்தனர். அவருள் தண்டகன் என்ற ஒருவன் பண்பு அற்றவன். நிலவுலகம் முழுமையும் தன் ஆட்சிக்கு உட்படுத்தி ஆண்ட இக்குவாகு மன்னன் அவனுக்கு விந்திய மலைக்கும் சைவல மலைச்கும் இடையிலுள்ள நிலத்தை அவன் ஆட்சிக்கு உரியதாகக்கொண்டு ஆளுமாறு பணித்தான். அவன் மதுமந்தம் என்ற பட்டிணத்தை அமைத்து அரசாண்டு வருகையில் சுக்கிரனுடைய இருக்கை புகுந்து அவன் மகள் அரசை என்பாளைக் கற்பழிக்க, அதனை உணர்ந்த சுக்கிரன் சினந்து, "ஏழுநாட்களில் தண்டகனும் அவன் குடும்பமும் நாடு நகரம் முதலியவற்றோடு எந்த உயிர்ப்பொருளும் இல்லாது மண்மாரியால் அழிந்து பாழாகக் கடவது" என்று சாபமிட அவ்வாறே அவை அழிந்துபட்ட ஒருவரலாறு புராணங்களில் கூறப்படுகின்றது. இதனைக் கம்பரும் கூறுகின்றார்.

இக்குவாகுவினுடைய மற்றைய பிள்ளைகள் இந்நில எல்லையைத் தமக்கு உரியனவாகக் கொண்டு, பல இடங்களிலிருந்து கொண்டு தொடர்ந்து ஆண்டனர். பின்னர் அவன் பேரமுறையினனான காகுத்தன் அயோத்தியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். இவன் பரம்பரையில் வந்தவன் தான் இராமன். அதனால்தான் கம்பர் இராமனைக் காகுத்தன் மரபில் வந்தவன் என்பதற்காகக் காகுத்தன் என்றே அழைப்பதைக் காணலாம்.

---

* அபிதான கோசம். (The Tamil Classical Dictionary) பக். 186.

" அனகமா நெறிபடர் அடிகள் நும்அலால்
நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன்
சனகன் மாமகள் பெயர் சனகி காகுத்தன்
பனைவியான் என்றனள் மறுஇல் கற்பினள் "

(ஆரணிய:சடாயு உயிர்நீத் 39)

இந்தக்காகுத்த வேந்தன் இந்திரனை விடை ஏறாகக்கொண்டு தானவர்களை வென்று அவ்விந்திரனுக்கு வானுலகைத் தந்த செய்தியைக் குலமுறை கிளத்துப்படலத்தில் விசுவாமித்திர முனிவர் சனகருக்கு,

" தான் தனக்கு வெலற்கு அரிய தானவரைத் தலைதுமித்து என்
வான்தரக்கிற்றிகொல் என்று குறை இரப்ப வரம்கொடுத்து
ஆங்கு
ஏன்று எடுத்த சிலையினனாய் இகல்புரிந்த இவர் குலத்து ஓர்
தோன்றலைப் பண்டு இந்திரன்காண் விடைஏறாய்ச்
சுமந்தானும் "

(பால: குலமுறை கி. ப. 3) 723

என்று கூறுவது கொண்டு அறியலாம்.

இந்நிகழ்ச்சியைக் கம்பர், இராவணன் மந்திரம் இருந்தபோது தசரதன் இன்ன பரம்பரையினன், அவன் மக்கள் இப்பொழுது பகைத்து வந்திருக்கின்றனர் என்று வீடணன், வழி உணர்த்தும் போது,

"மிடல் படைத்து ஒருவனாய் அமரர்கோன் விடையதாய்
வெரிநின் மேலாய்
உடல்படைத்து அவுணராயினரெலாம் மடியவாள்
உருவினனும்
அடல்படைத்து அவனியைப் பெருவளம் தருகவென்று
அருளினனும்
கடல்படைத் தவரொடுங் கங்கை தந்தவன் வழிக் கடவுள்
மன்னன் "

-யுத்த வீடணன்-83 : 6280

என்று கூறுகின்றார்.

இச்சோழ பரம்பரை வடபுலம் சென்றதால் தென்திசை வாளா கிடந்துவிடவில்லை. அம்மரபினர் தொடர்ந்து இங்கிருந்து அரசோச்சியுள்ளனர். அவருள் காந்தமன் என்ற சோழன் பரசுராமன் காலத்திருந்த செய்தியை மணிமேகலை கூறுகிறது. அம் மரபில் வந்த

கரிகாலனை நாரதர் கண்டு கூறிய வரலாறு கலிங்கத்துப்பரணி கூறுகின்றது. அதனால் சோழர்கட்கு இருபுலமும் உரியதென்று உணரலாம். இக்காகுத்த வேந்தனுக்குப் பிறகு வந்த மாந்தாதாவைக் கம்பர்,

"மாந்தா முதல் மன்னவர்தம் வழியில்
வேந்து கைதுறந்தபின் மெய்உறவோர்
தாம் தாம் ஒழியத் தமியேனுடனே
போந்தாய் எனைவிட்டனை போயினையோ"

ஆரணிய காண். அயோமுகிப்படலம் 73 : 3714

என்று கூறுகின்றார். இம்மாந்தாதாவைப்பற்றிக் கலிங்கத்துப்பரணி,

"ஒருதுறைப்புனல் சினம்புலியும் மானுமுடனே
உண்ணவைத்த உரவோன் உலகில் வைத்த அருளும்

என்று கூறி அவன் மகன் முசுகுந்தனை,

"பொருதுறைத்தலைப் புகுந்து முசுகுந்தன் இமையோர்
புரமடங்கலும் அரண்செய்து புரந்த புகழும்" 189

என்று கூறுகின்றது.

இம்முசுகுந்த மன்னன் இந்திரனுக்கு உதவி நட்புக்கொண்டு, அது காரணமாகப் புகாரில் இந்திரவிழா எடுத்த நிகழ்ச்சி சிலம்பு கூறுவதால், இம்மன்னன் புகாரில் இருந்து அரசாண்ட செய்தி தெரியவருகின்றது. இவற்றால் மனுச்சோழ பரம்பரை தென்னகத்திலிருந்து வடபுலம் புகுந்து தென்னகத்திற்கே வந்தது விளங்கும்.

இவனுக்குப்பிறகு கடல் கடைந்து அமுதளித்த பிருது வாட்சன், அவனுக்குப்பிறகு சிபி போன்றவர்கள் ஆண்டனர்.

## இராமன் தாய்மொழி யாது ?

திருமால் தமிழ்க்கடவுள். திருமால் வழி வந்த மனு, சிபி, முதலியோர் வழிவந்த கரிகாலன் உள்ளிட்டார் தமிழ்வேந்தர்கள். இவர்களுக்கு உரிய மொழி தமிழல்லாமல் வேறு எதுவாக இருக்க முடியும் ?

வடமொழியைத் தேவபாடை என்றே அழைப்பர். வடமொழி தேவபாடையானால் மக்கட்குரிய மொழி தமிழேயாகும்.

"மக்கள் தேவர் நரகர் உயர்திணை"

என்பது இலக்கணம்.

"தேவர், நரகர் என்ற இருவரும் தெய்வப்பிறப்பினர். அவ்விருவரும் வரத்தாலும் செயலாலும் வேறுவேறானவரேயொழிய அவர்களுள் மற்ற செயல்களில் மாறுபாடில்லை. பிரமன் வழி வந்தவர்களில் தேவரும் உண்டு; அரக்கரும் உண்டு; மக்களும் உண்டு. எனினும் தேவர்களும், அரக்கர்களும், மக்களின் வேறுபாடு உடையவர்கள் மக்கள் குறைந்த வயதும், மண்ணுலகத்திற்கு உரிமையும் உடையவராவர். தெய்வத்தரத்திலுள்ள தேவர்களும் அரக்கர்களும் தேவபாடையாய வடமொழிக்குரியவர்களாக, மக்கள் பிறப்பினராயுள்ள மக்கள் தமிழ் மொழிக்குரியவர் ஆயினர்.

இராமனைப் பொறுத்தவரையில் மனுவழிவந்த மரபினனாதலின் மக்கள் மொழிக்குரிய தமிழுக்குரியவனே. இதனைக் கம்பர்,

"நன்சொற்கள் தந்து ஆண்டு எனைநாளும் வளர்த்த தாதை
தன்சொற்கடந்து எற்கு அரசு ஆள்வது தக்கதன்றால்
என்சொல் கடந்தால் உனக்கு யாதுஊது ஊனம் என்றால்
தென்சொல் கடந்தான் வடசொல் கலைக்கு எல்லைதேர்வான்"

அயோ. 14

என்று கூறுகின்றார். இங்கு இராமன் தென்சொல் கடந்தான் என்று இறந்த காலத்தில் கூறி, வடசொற்கலைக்கு எல்லை தேர்வான் என்று எதிர்காலத்தால் கூறியது நோக்கத்தக்கது. இராமன் தன் தாய்மொழியாகிய தமிழைக் "குலவிச்சை கல்லாமல் பாகம் பெறும்" என்றாங்குக் கற்றுத் துறைபோயவன் என்பதால் இறந்த காலத்தில் குறித்த கம்பர் இராமன் தனக்கு வேற்று மொழியாய வடமொழியைப் பயின்று அதனால் உணர்ந்தப்பெறும் கலைகள் ஒவ்வொன்றின் எல்லையை ஆராய்ந்துகொண்டு இருக்கின்றான் என்று கூறுவதால் அறியலாம்.

கம்பர் இராமன் தமிழன் என்ற துணிவு கொண்டிலரேல் இவ்வாறு பேசியிருக்க முடியாது. ஒருவன் தாய்மொழியில் துறை போதலும், பிறமொழியில் வல்லுநன் ஆதலும்தான் இயற்கை. ஒரோவழி இவ்விதியில் மாறுபடுவதும் உண்டு.

இவ்வாறு கம்பர் கூறிய இக்கூற்றை மெய்ப்பிக்கும் முறையில் இராமன் பேசியது தமிழ்தான் என்பதை வான்மீக முனிவரும் அறிவிக்கத் தவறவில்லை.

வான்மீகி முனிவர், சுந்தரகாண்டத்தில், அனுமன் சீதாபிராட்டியாருடன் இன்னமொழியில் உரையாடுவதென்று நன்கு

தனக்குள் ஆராய்ந்தான் என்றும், 'இருபிறப்பாளரொப்ப ஸம்ஸ்கிருத மொழியில் உரைதந்தால் தன்னை இராவணனாகக் கருதிச் சீதை அச்சமுறுவாளென்றும், அவளஞ்சாது செவி கொடுத்துத் தூதுரை கேட்க இணங்கும் பொருட்டு மக்கள் மொழியே பேசவேண்டு மென்று துணிவு கொண்டனனென்றும், இங்ஙனம் துணிந்ததன் பயனாகத் தூதுக்குரிய எல்லாவற்றையும் மதுரமான மொழியில் வைத்துக் கேட்பிப்பல் என்று புகுந்தான்' என்றும் கூறியிருத்தல் காணலாம்.

இங்கு இன்ன மொழியில் பேசுவது என்பதே அனுமன் தனக்குள் செய்த ஆராய்ச்சியாம் என்பது தெளிவு. "வடமொழியில் பேசின் சிறிது பொழுதுக்கு முன் வடமொழியே பேசிய இராவணன் வேற்றுருக்கொண்டு வந்து பேசுகின்றான் எனத் தன்னை நினைத்துச் சீதை அஞ்சுவாள் என்று கொண்டு மக்கள் மொழியே பேசவேண்டு மென்று தன்னுள் முடிவு செய்து மதுரமான மொழியை (பாஷையை) எடுத்துக்கொண்டான்" என்று வான்மீகியார் வெளியிட்டுள்ளார்.

இத்துணையும் கூறியவாற்றால் வான்மீக முனிவர் ஈண்டு மக்கள் மொழியாகக் கொண்ட இனிமை வாக்கு (மதுராங்கிரம்) தமிழ் என்னும் இனிய மொழியேயாம் என்று துணியப்படும். நன்கு பேசுமிடத்தெல்லாம் இம்முனிவர் மதுரம் என்ற சொல்லை வழங்கல் மிகுந்துள்ளதேனும் அவ்விடத்தையெல்லாம் போலாது இவ்விடத்தில் இன்ன பாஷையில் பேசுவதென்று துணிந்து அம் மதுர மொழியில் தூது சொல்லப்புகுந்தான் என்றே கொள்ளக்கிடக்கின்றது காணலாம். அவர்,

"பேரறிவாளனாகிய அனுமன் தன்னுள்ளே பலவகையாகச் சிந்தித்து விதேக புத்திரிக்கு மதுரவாக்கியத்தைக் கேட்பிக்கத் தொடங்கினான்."

என்று விளங்க உரைத்ததுங் காண்க. இது மதுர வாக்கியம் மானுஷ வாக்கியம் எனும் பொருள் நிறைந்தது என்பதும் முன் சர்க்கத்தில் (29) கூறியதே யாதல் தெளிக. இடத்திற்கேற்ற பொருள் பொருத்தமே உரைகாரர் வேண்டுவதென்பது பல்லோர்க்கும் உடன்பாடாம். இக்கருத்திற்கிணங்கவே தமிழ் நிலத்து வளர்ந்த பாண்டியர் தம் தலைநகருக்கு மதுரை எனப் பெயரிட்டனர் என்று உய்த்து உணரலாகும்.

---

* சுந்தரகாண்டம். சர்க்கம். 30. சுலோ: 43

* வான்மீகி சர்க்கம் 30 சுலோ: 18 19 கோகில சந்தேசம் பார்க்க

இவ்விளக்கத்தைத் தமிழ் வரலாறு என்ற நூலில் தமிழென்னும் பெயர் என்ற கட்டுரையில் பாஷாகவிசேகரர், மகாவித்வான், அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர் ரா. இராகவையங்கார் அவர்கள் எழுதியுள்ளார்.

இவ்விடத்தில் அனுமன் வடமொழிப் பயிற்சி பெற்றிருந்தது போலவே சீதையும் இராமனைப் போல வேத சாத்திரங்களைக் கற்கு முறையில் வடமொழியும் அறிந்திருந்தாள் என்பதாகும். வடமொழி தெரிந்திருந்ததால் சீதையோ இராமனோ வடமொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர் என்பதாகாது. இராமன், சீதை, அனுமன் முதலியோர் தமிழைத் தாய்மொழியாக உடையவர்கள் என்பதை மேற்காட்டிய காரணங்களைக் கொண்டு தெளியலாம்.

அனுமன், வாலி, சுக்கிரீவன் முதலியோர் இராமனுக்கு முன்னர் காஞ்சிபுரத்தையும் அது தழுவிய இடங்களையும் தமக்குரியனவாகக்கொண்டு வாழ்ந்து வரம் பெற்று ஆண்டு வந்த செய்தியைக் காஞ்சிபுராணம் போன்ற புராணங்கள் தெளிவாக்குகின்றன. இவர்கள் மக்கள் மொழியாய தமிழிற்குரியவராய் இருந்து தேவ பாடையாய வடமொழியையுங் கற்றுத் துறைபோயிருந்தனர் என்ற அளவில் கொள்ளலாமேயன்றி, இவர்கள் தேவபாடைக்கே உரியவர் என்று கொள்ளின் அவர்கள் இந்நில உலகிற்கு உரியவராகார்; மனித மொழி என்பது வான்மீகர் கூற்றுப்படி தமிழாகலான்.

இங்கு அனுமன் தமிழ் அறிந்திருந்தான்; வடமொழியும் அறிந்திருந்தான் என்றால் அவன் சூரியனிடத்தில் கற்றறிந்து ஞானம் உணர்ந்தவனாதலின் அறிந்திருந்தான்.

முதல் மனிதனாய மனுவின் எழுபாரிலும் வழங்கிய மொழி தமிழே. வடமொழி இம்மண்ணிலகிற்குரியதன்று. மக்களுக்கும் உரியதன்று. அது தேவபாடையாதலால் தேவர்களும் தேவர்களோடு ஒப்புமையும் மிக்க தொடர்பும் உடைய முனிவர்கள் போன்றவர்கட்கு அம்மொழி தொடர்புடையதாக இருக்கிறதேயன்றி வழக்கில் மண்ணில் மக்கள் வழங்கிய மொழி தமிழே.

அன்றியும் இராமாயணத்தைப் போலவே பாரதத்திலும் தேவ பாடையாகிய வடமொழிக்கு வேறாக மானுடபாடையாகிய தமிழில், சிபி மன்னனிடம் அவன் கொடை வளத்தைத் தேறுதற்கு புறாவும், பருந்துமாக வந்த அக்கினியும் இந்திரனும் பேசியதாக (200 வது பர்வம் 200...201 ல்) வியாசபாரதத்தில் காணலாம் அங்கு வியாசர்,

"இந்த ஜந்துக்கள் சுத்தமான மனுஷ்ய பாஷையால் பேசுவது என்ன ஆச்சர்யம்" என்று சிபி பேசி வியந்ததாக உள்ள இக்குறிப்பைக் கொண்டு சிபியின் தாய்மொழி தேவபாடைக்கு மாறாய மனிதமொழியாகிய தமிழ் என்று தெளியலாம்.

பறவைகள் தமக்குரிய மொழியில் பேசியிருக்கலாம் அல்லது தேவர்களாகிய அவர்கள் தம் தேவபாடையில் பேசியிருக்கலாம். ஆனால்அவர்கள் அவ்வாறு பேசாமல் சிபியின் மனங்கொள்ளுமாறு அவனறிந்த அவன் தாய்மொழியில் பேசியது அவனை அவற்றின் சொற்களில் பற்று வைக்கவும் செவி சாய்க்கவும் செய்தற்கென்பது நோக்கத்தக்கது. அனுமன் சீதையின் தாய்மொழியாகிய தமிழில் பேசினால் எவ்வாறு அவளுக்கு மகிழ்ச்சியும் நம்பிக்கையும் பிறக்கு மென்று கருதிப் பேசி வந்த செயலை முடித்தானோ அவ்வாறே இப்பறவைகளும் தம் செயலை முடித்துள்ளன.

அதனால்தான் அயன்குலத்து அரக்கர்களும், வேத ஒழுக்கங்களில் சிறந்த பூதேவராய மேலோரும் பேசும் தேவபாடையில் சீதையிடம் பேசின் அரக்கரென்றோ, வேறு மொழிக்குரிய மாயை வல்லவன் என்றோ ஐயுறா வண்ணம், சீதைக்கும் தனக்கும் உரிய மொழியில் பேசின் பேசுபவன் உண்மையில் தன்மொழிக்குரிய தன்னவனா அன்றிப் பிறமொழிக்குரியவனாய் இருந்து தன்மொழியைப் பயின்று பேசுகின்றவனா என்று கண்டுகொண்டு ஐயுற்று அஞ்சாதிருக்க வேண்டுமென்றே அனுமன் தமிழில் பேசினான் என்கின்றார் வான்மீகி.

இராமன் வடமொழிக்குரியவன் என்றும் அவனிடம் அனுமன் பழகிய குறுகிய காலத்தில் வடமொழி பயின்று கொண்டிருக்கக் கூடுமென்றும் மு. இராகவையங்கார் அவர்கள் கருதுகின்றார்கள். குறுகிய காலத்தில் வடமொழி கற்றுத் தூதுபோய் உளநிலையும் சூழ்நிலையும் அறிந்து பேசுதல் சாலாது. அவ்வாறு அனுமன் கடவுட் கூறுடையவன் ஆதலின் சாலும் என்றால், அவன் இராம இலக்குவனிடம் பேசிய போது அவர்கள் வான்மீகியின் கூற்றுப் படி,

"அதன் மேல் அந்த அனுமார் இந்த வீரர்களாகிய இராம இலட்சுமணரையும் வினயமாய்க்கிட்டி சாத்திரமுறைப்படி தண்டனிட்டுப் புகழ்ந்தார். நம்பக்கூடியதாய் இருக்கிறதும் மிகமனோக்கியமுமான சொற்கொண்டு முகமன் சொல் சொன்னர்" என்று கிட்கிந்தா காண்டம் மூன்றாவது சர்க்கத்தில் இரண்டாவது சுலோகத்தில், பேசுவது பொருந்தாது.

அடுத்து மூன்றாம் சர்க்கம் 112 . 113 இல் இலக்குவன் அனுமன் பேச்சைக்கேட்டு இராமனிடத்தில்,

"ரிக்வேதத்தில் பயிற்சி இல்லாத ஒருவருக்கு இப்படிப் பேசுவது முடியாது, யசுர் வேதத்தில் பயிற்சி இல்லாத ஒருவருக்கு இப்படிப் பேசுவது முடியாது. சாமவேதத்தில் பயிற்சியில்லாத ஒருவருக்கு இப்படி முடியாது, வியாகரணம் எல்லாம் இவரால் பலமுறை நிச்சயமாய்க் கற்றறியப்பட்டிருக்கின்றன. பல சால்கூறிய இவரால் ஒன்றும் பிழைபடச் சொல்லப்படவில்லை" என்று கூறுவதைக் காணலாம்.

முன்னர் "கற்றமை" என்று கூறப்பெறுவதால் அனுமன் வேதம் முதலியவற்றை முன்னமே கற்றமை போதரும்.

அதனால் இராமன் பேசிய மொழி இனிமை என்னும் பொருள்படும் தமிழ் மொழியே.

அதனால் அனுமன் கல்வி கற்று அறிவுபெற்றுத் தத்துவ ஞானம் பெற்றவன் என்பது உண்மை. அனுமன் தாய்மொழி தமிழ் என்பதும் அவன் வடமொழியை வருந்திச் சூரியனிடம் கற்றான் என்பதும் சாம்பவானால் கூறப்படுகிறது.

"பார் உலகெங்கும் பேரிருள் சீக்கும் பகலோன்முன்
தேர்முன் நடந்தே ஆரியநூலும் தெரிவுற்றீர்"

கம்ப. கிட்கி. மயேந்திரப் படலம்-14

இவ்வாறு சாம்பவான் தெளிவாக ஆரியநூலும் என்று உம்மையால் வேறுபடுத்திக் கூறியிருப்பவும் திரு. இராகவையங்கார் அவர்கள் கண்ணில் இவ்வரிகள் மறைந்தமையால் அவ்வாறு கூறுகின்றார் போலும் என்று கருதவேண்டியுள்ளது. இராமன் தென்சொற் கடந்து வடசொற்கு எல்லை தேர்ந்தது போல இவ்வனுமனும் கதிரவனிடம் சென்று ஆரிய நூலும் தெரிந்திருந்தான். இராம இலக்குவரிடம் பழகிய குறுகிய காலத்தில் கற்றான் என்றால் அமையாது. இவனை "நூல் பெருங்கடல் நுணங்கு கேள்வியான்" என்பர் கம்பர்.

## இராமன் தாய்மொழி யாது?

எந்நாட்டவருக்கும் இறைவனான தென்னாடுடைய சிவபிரான் தலைச்சங்ககாலத்திருந்து தனக்கும் முன்னைப் பழம் பொருளாயுள்ள தமிழை ஆராய்ந்த செய்தியைப் புலனழுக்கற்று இறைவனோடு இரண்டறக்கலந்த மாணிக்கவாசக அடிகள்,

---

* கம்ப. சுந்த, ஊர் தேடு 204

"சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்பலத்தும், என்சிந்தையுள்ளும்
உறைவான் உயர் மதிற் கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்"

என்று குறிப்பிடுகின்றார் இவ்வாறு சிவபிரான் தமிழ்ச்சங்கத்துத் தலைவனாயிருந்து தமிழராய்ந்த செய்தி இறையனார் களவியலுரை, இளம்பூரண அடிகளின் தொல்காப்பிய உரைப்பாயிரம், சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் உரை, கலித்தொகை போன்ற இடங்களில் குறிக்கப்பெற்றிருப்பது நோக்கத்தக்கது.

இத்தமிழ்ச்சங்கத்துச் சிவபிரான் மாணக்கராயிருந்த அகத்திய முனிவர், முதற்சங்கம் கடலால் அழிந்தபோது, இரண்டாம் சங்கத்தில் தமிழ் முழுதுமறிந்த தன்மையராய் இருந்ததால் அச்சிவபிரான் வளர்ந்த தமிழைத் தாமும் தொடர்ந்து வளர்த்த செய்தியைக் கம்பர்,

"உழக்குமறை நாலினும் உயர்ந்து உலகமோதும்
வழக்கினும் மதிக்கவியினும் மரபின் நாடி
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழல்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ்தந்தான்"

கம்ப. ஆரணி. அகத் 41

என்று குறிப்பிடுகின்றார். இவ்வரலாறு, "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி" என்ற காஞ்சிபுராண வரலாற்றோடு மாறுபடுவதைக் காண்க.

அகத்திய முனிவன் சிவபிரான் திருமணத்திற்குச் சென்றபோது வடபுலம் தாழ்ந்து தென்புலம் உயர்ந்தது கண்ட சிவபிரான் தமிழ்மொழியை அகத்தியருக்கும் வடமொழியைப் பாணினிக்கும் தந்தருளினார் என்றும் அவர் அதுகொண்டு தென்புலம் போந்து தமிழ் தந்தார் என்றும் கொள்வது ஏலாது.

சிவபெருமான் திருமணம் கொள்ளுமுன் தமிழாராய்ந்த செய்தியே தமிழ்ச்சங்கச் செய்தியாகும்.

சிவபிரான் உமையை மணந்தபின் முருகன் பிறந்த பின் தென்னாட்டில் தமிழாராய்ந்தார் என்றால் அது பொருந்துவதாறில்லை.

திரிபுரம் எரித்த விரிசடைக்கடவுளும், குன்றமெறிந்த முருக வேளும் நிதியின் கிழவனும் தென்மதுரையில் இருந்து தமிழாராய்ந்தது உண்மையாயின், கந்தபுராணக்கதை பொய்யாகும். கந்த புராணக் கதை மெய்யாயின் சங்க வரலாறு பொய்யாகும். இக்கந்த புராணக் கதையை அடிப்படையாகக்கொண்டு பாடியதுதான் காஞ்சிப்

புராணச்செய்யுள் சிவபிரான் தென்னகத்தில் இருந்து தமிழ் வளர்த்த செய்தியை உடன்பட்ட கம்பர் அகத்தியரைக் "தமிழ் எனும் அளப்பரும் சலதி தந்தான்" என்கின்றாரேயன்றிக் கந்தபுராண நிகழ்ச்சியையும், காஞ்சிப்புராண நிகழ்ச்சியையும் வைத்துக்கொண்டு பேசவில்லை. காரணம், கந்த புராணத்து முருகன் பிறப்பு வரலாறும், பரிபாடல் முருகன் பிறப்பு வரலாறும் பெரிய மாறுபாடு உடையனவாகும். இதனால் இங்கு "நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்" என்று கம்பர் திருமாலையும் அகத்தியனையும் சிலேடை முறையில் ஒப்பாகக் கூறுவதைக் காணலாம்.

## கம்பரும் ஆரியரும்

ஆரியன் என்ற சொல் சங்க காலந்தொடங்கி இன்று காறும் பலதிறப்பட்ட பொருளில் பயன்பட்டு வந்துள்ளது. இச்சொல்லின் அடிப்படையில் ஆரியத்திரிபு, ஆரியர் கூத்து, ஆரிய நாடு, ஆரியப்படலர், ஆரியபூமி, ஆரியபடன், ஆரியபட்டன், ஆரிய புத்திரன், ஆரியப்புலவர், ஆரியப்பாவை, ஆரியப்பிராமணர், ஆரியப்பூ, ஆரியமொழி, ஆரியம், ஆரியரூபன், ஆரியர், ஆரியவராடி, ஆரியவாசியம், ஆரியவேளர், ஆரியன், ஆரியாங்கனை, ஆரியவர்த்தம், ஆரியை, ஆரியதநயன் என்று இத்தனைச் சொற்கள் வழக்காற்றில் வந்துள்ளன; இவை ஆரிய என்ற அடிப்படையில் மக்களை, பண்ணை, மருந்தை, மொழியை, நாட்டை, ஒழுக்கத்தைக் குறிப்பவையாக உள்ளன.

ஆரியன், ஆரியம் என்ற இரண்டு சொற்களில் ஆரியன் என்பது அதிவிடயம், அறிவுடையோன், ஐயன், குரு, சூரியன், நொம்பன், புலவன், மிலேச்சன், வைத்தியன், பிராமணன் என்ற பொருள்களிலும் ஆரியம் என்ற சொல் அழகு, இமயமலைக்கும் பொதியமலைக்கும் நடுத்தேசம், செல்வம், பண்டம், வடமொழி, தெய்வீகத்தன்மை, ஒழுக்கம் என்ற பொருள்களிலும் வழங்குவனவாகத் தமிழ்ச்சங்க அகரவரிசை கூறுகிறது.

குறுந்தொகையில் ஆரியர் என்ற சொல்லை,

"........................ ஆரியர்
கயிறுடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற்றொலிக்கும்" குறுந் பாடல்: 7

என்று பெருர்பதுமனார் கையாளுகிறார். இதற்கு விளக்கம் தந்த உ.வே.சாமிநாதஐயர் அவர்கள் ஆரியர்-ஆரிய நாட்டினுள், ஒரு வகைக் கூத்தர் என்று எழுதியுள்ளார். ஆனால் இது ஒரு வகைக் கூத்தையே குறிக்கும்.

பதிற்றுப்பத்து 11ஆம் பாடலில்,

"ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங்குமரியோ டாயிடை" என்றும்

பதிற்றுப்பத்து இரண்டாம் பத்தின் பதிகத்தில்,

"பேரிசை மரபின் ஆரியர் வணக்கி
நயனில் வன்சொல் யவனர் பிணித்து"

என்றும் வருகின்றது. இவ்வாறு ஆரியர் என்ற சொல் சங்க காலத்தில் வடபுலத்தாரையும், அப்புல வேந்தர்களையும் குறித்திருக்கின்றது.

பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டு ஆரிய வரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவுறுத்துவான் பாடப்பெற்றது என்று ஓர் அடிக்குறிப்பு கூறுகின்றது.

அதன்பின் வடவர் தென்னகம் வந்து குடியேறி வடமொழி முதலியவற்றை வளர்த்த ஞான்று அது பரவித் தென்னகத்தில் வளரத் தலைப்பட்டது. அந்த மொழியிலுள்ள சிறப்பினை ஏற்றுக் கொண்ட தொல்காப்பியர் சில சொற்கள், செய்யுள் ஈட்டுதற்குத் தமிழில் இடம்பெறலாம் என ஒரு வரையறை தந்தனர். இதனால் தான் தொல்காப்பியர், "வடவேங்கடம் தென்குமரி" என்று வட எல்லையை வடவேங்கடம் வரையிலும் தமிழ்கூறும் நல்லுலகமாகக் குறித்தார்.

புறநானூறு, பதிற்றுப்பத்து போன்ற நூல்களில் வடபெருங்கல் எல்லையாக குமரி ஈறாக உள்ள நாடுகள் அனைத்திலும் ஒரு மொழி வைத்து உலகாண்டதாகப் பேரரசர் பலர் பேசப்பெறுகின்றனர். இவர்கள் இந்த ஆரிய நாகரிகம் தோன்றி வளர்ந்த காலத்திற்குப் பின் அரசாண்ட வேந்தர்கள் ஆவர்.

புறநானூற்றில் இடம் பெற்ற பாடல்கள் இடைச்சங்கப் பாடல்கள். இடைச்சங்கத்திலிருந்த குறுமுனி இமயமலையில் நடந்த சிவபிரான் திருமணத்திற்குச் சென்றதும், அவர் இராமன் காலத்தளவு இருந்ததும் போன்ற நிகழ்ச்சிகள் வேதகால நிகழ்ச்சி

கள் அல்ல காரணம் சிவபிரான் திருமணத்திற்குச் சென்ற வர்கள் அகத்திய முனிவர் போன்ற பெருமக்களும், தேவர்களும், மற்றையோரும் அல்லாமல் பிறவேந்தர்கள் இல்லை தெய்வத் தன்மை பொருந்திய பாண்டியர்கள், சோழர்கள் போன்றவர்தாம் அத்திருமணத்திற்குச் சென்றிருந்தவரன்றிச் சாதாரண மக்கள் இல்லை என்பதால் அத்திருமணம் வேதகால நாகரிகத்திற்கு எத்தனையோகாலம் முன் நிகழ்ந்தது என்று ஊகிக்க இடமுண்டு.

வேதம் இறைவனால் செய்யப்பெற்றது என்று பொதுவாகக் கூறப்பட்டாலும் இன்றுள்ள வேதம் பல காலத்தில் பல முனிவர் களும், பல வேந்தர்களும், மகளிரும் கூட செய்து சேர்த்ததாகும். வேதத்தில் சில இராமாயண காலத்திற்கும், பாரதகாலத்திற்கும் உறுதியாகப் பிற்பட்டதாதல் வேண்டும். காரணம்,

" இராமாயணம், மகாபாரதம் இவற்றில் வழங்கப்பட்ட வசிட்டர், விசுவாமித்திரர், அகத்தியர், இக்குவாகு, இராமன், வேரன், யயாதி, கண்வர், பாராசரர், பரதன் இவர்களின் பெயர்கள் ஈண்டுக் காணப்படுகின்றன ". என்பதால் அறியலாம் *

இதற்கு ஒப்பச் சிவபிரான் பாணினிக்கு வடமொழியை வகுத்தருளினார் என்ற ஒரு கதை காஞ்சிப்புராணத்தில் கூறப் பெறுகின்றது. பாணினி தன் இலக்கண நூலில் மேற்கோளாகக் காட்டும் பல உதாரணச்சொற்கள் பாரதக்கதையில் பல உறுப்பினர் கள் பெயராக இருக்கின்றன

"பாணினி முனிவர் தம் இலக்கண நூலில் மகாபாரத காலத்துப் பெருமக்களாகிய குந்தி, யுதிஷ்டிரன், வாசுதேவன், அருச்சுனன், துரோணன் முதலியோர் பெயர்களை எடுத்தோதுவ தால் அம்முனிவர் அப்பாரத காலத்துக்கும் பிற்பட்டவர் என்பது தேற்றமாம் " **

இதனால் வடமொழி இலக்கண வரம்புடையதாகவும், செப்ப முடையதாகவும் ஆவதற்குப் பாணினி காரணமாவார் என்று அறியலாம். இந்தப்பாரத காலத்திற்குப் பின்புதான் வியாசர்

---

* ( டாக்டர் சுப்பிரமணிய சாத்திரியார் வடமொழி வரலாறு-பக்கம் 19 )

** ( ஆராய்ச்சித்தொகுதி-பக் 95)

பாரதம் இயற்றியிருக்கமுடியும். இவ்வியாசரும் வேதங்கள் சில வற்றைச் செய்து சேர்த்ததோடு தமக்கு முன்னிருந்த சில வேதங் களை வகுத்து அமைத்ததால்தான் இவருக்கு வேதவியாசர் என்று பெயர் வழங்கிற்று.

இந்த வேதகாலத்திற்கு எத்தனையோ யுகத்திற்கு முன் வாழ்ந்த இராமனை, இலக்குவனை தயரதனை, ஆரியன் என்று குறிக்கும் இடம் எங்கணும் கம்பர் வடபுலத்தான் என்ற பொருளில் சுட்டாது மேலோன், ஒழுக்கமுடையவன், தலைவன் என்ற பொருளில்தான் வழங்கியுள்ளார். தைலமாட்டுப்படலத்தில்,

"ஆரியன் இளவலை நோக்கி ஐய நீ
சீரிய வல்லன செப்பலை என்றபின்"

கம்ப. அயோ, தைலமாட்டு

என்று கூறுகின்றார். இங்கு இராமனைப் பெரியோன் மேலோன் என்ற பொருளில் கையாண்டுள்ளமை காணலாம். இங்கு ஆரியன் என்பதற்கு வடபுலத்தான் என்று பொருள் கொண்டால் 'இளவலை' என்ற சொல்லிற்குத் தென்னாட்டான் என்று பொருள்கொள்ள வேண்டும். அண்ணனும் தம்பியும் பேசுமிடத்தில் கம்பர் அண்ணன் இராமனை மேலோன், ஒழுக்கமுடையவன் என்ற பொருளில் கை யாண்டதால் இளவல் என்ற சொல்லிற்கு ஆரியன் என்ற சொல் மாறுபாடற்று அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

ஆரியன் என்ற சொல்லால் ஒழுக்கமுடையவர்களையும் அவ் வொழுக்கமில்லோரைப் பூரியர் என்ற சொல்லாலும் குறித்துள்ளனர்.

"வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு"

என்ற குறளில் திருவள்ளுவர் பூரியர் என்போர் இழிந்தவர் என்று பேசுகின்றார்.

கம்பர் இவ்விரண்டு சொற்களையும் வனம்புகு படலத்தில் வரும்,

"பூரியர் புணர்மாதர் பொதுமனமென மன்னும்
ஈரமும் உளதுஇல் என்று அறிவு அரும்இளவேனில்
ஆரியன் வரலோடும் அமுதுஅளவிய சீதக்
கார்உறுகுறி வானம் காட்டியது அவண்எங்கும்"
கம்ப ஆயோத் வனம் 1

பாட்டில் கையாளுகின்றார்.

இங்குப் பூரியர் தென்னாட்டவர். ஆரியர் வடநாட்டவர் எனப்பொருள் கொள்ள இயலாது. பூரியர் ஒழுக்கக் கேடுடையவர் என்ற பொருளிலும், ஆரியன் என்பது மேலோன், ஒழுக்கமுடையவன் என்ற பொருளிலும் வந்துள்ளது நோக்கத்தக்கது.

ஆரிய என்ற சொல்லை வடபுல என்ற பொருளில் பயன் படுத்தாது மேலான ஒழுக்கமுடைய, தலையாய என்ற பொருளில் பயன்படுத்திச் சூர்ப்பணகைப் படலத்தில் கம்பர் பாடுகின்றார்.

சூர்ப்பணகை இராமனோடு உறவு கொள்ள வந்தபோது இராமன் அவளை ஐயுற்று அவளிடம் பல வினாக்களை வினவிய போது,

"வீரனஃதுரைத்தலோடும் மெய்யிலாள் விமல யானச்
சீரியர் அல்லார் மாட்டுச் சேர்கிலென் தேவர் பாலும்
ஆரிய முனிவர் பாலும் அடைந்தனன் இறைவ ஈண்டு ஓர்
காரியம் உண்மை நின்னைக் காணிய வந்தேன் என்ருள்"
கம்ப ஆரணியசூர்ப் பணகை 43

இப்பாட்டில் சூர்ப்பணகை பேச்சில் கம்பர் ஆரிய என்ற சொல்லை முனிவர்கட்கு அடைமொழியாகப் பயன்படுத்திச் சிறந்த முனிவர்கள் என்ற பொருளில் குறிப்பிடலைக் காணலாம். அன்றேல் ஆரிய என்ற அச்சொல்லை விளியாக்கினும் வடநாட்டவனே என்று கொள்வதில் பொருளில்லை இங்கு அவள் தம்மவரைச் சீரியர் அல்லர் என்று கூறி இராமனைச் சீரியன் என்ற பொருளில் ஆரியன் என்று குறிப்பதாகக் கம்பர் காட்டுகின்றார்.

அனுமப்படலத்தில் இலக்குவன் அனுமனிடத்தில் தங்களைத் தசரதன் மக்கள் என்று அறிமுகம் செய்யும்போது,

"சூரியன் மரபில் தோன்றிச் சுடர்நெடு நேமியாண்ட
ஆரியன் அமரர்க்காக அசுரரை ஆவியுண்ட
வீரியன் . . . . . . . . . . ."
கம்ப கிட்கி அனுமப் 20

என்று தசரதனை ஆரியன் என்று குறிக்கின்றார். இங்கும் தயரதன் வீரன், மேலோன், ஒழுக்கமுடையவன், தலைவன் என்ற பொருளில் சுட்டப்பட்டது காணலாம். இங்கு வடநாட்டான் என்றால் பொருள் இயையாமை காண்க. உலகெல்லாம் ஆண்டவன், உலகன்றி அதில் ஒரு திசைக்குமட்டும் உரியவனாகான்.

வாலிவதைப்படலத்தில், இராமன் தன்னை மறைந்திருந்து கொன்றதை வாலி இகழ்ந்து பேசும்போது கம்பர்,

"காரியன்ற நிறத்த களங்கமொன்று
ஊரியன்ற மதிக்குள தாமெனச்
சூரியன் மரபுக்கு மொர் தொன்மறு
ஆரியன் பிறந்து ஆக்கினை யாமரோ" கம்ப: கிட்கி வாலி 96

என்று ஆரியன் என்ற சொல்லை வாலி வாயால் பயன்படுத்துகின்றார். இங்கு வாலி ஆரியன் என்ற சொல்லை உயர்ந்தோன் தலைவன் என்ற பொருளில் பயன்படுத்துவதைக் காணலாம். இங்கு ஆரியன் என்பதற்கு வடநாட்டான் என்ற பொருள் பொருந்தாமை உணரலாம். சூரிய மரபில் வந்தவர்கள் க்ஷத்திரியர்களே யன்றி ஆரியர்கள் அல்லர். நாகபாசப்படலத்தில் கம்பர்,

"அரக்கன் மைந்தனை ஆரியன் அம்பினால்"

கம்ப. நாகபா, பட: 139

என்று பயன்படுத்துகின்றார். இங்கு அரக்கன் என்று இந்திரசித்தைக் கீழோன் என்ற பொருளிலும் ஆரியன் என்று இலக்குவனை மேலோன் என்ற பொருளிலும் பயன்படுத்துவதைக் காணலாம். இங்கு வடபுலத்தான் என்பது இயையாது.

இறுதியாகக் கும்பகர்ணன் வதைப்படலத்தில் கம்பர் ஆரியன் என்ற சொல்லைக் கும்பகர்ணன் வாய்மொழியால் இராவணனைத் தலைவன், மேலோன், ஆற்றலுடையவன் என்ற பொருளில்,

"இற்றை நாள் வரை முதல் யான் முன் செய்தன
குற்றமும் உளவெனில் பொறுத்தி கொற்றவ
அற்றதால் முகத்தினில் விழித்தல் ஆரிய
பெற்றனன் விடையெனப் பெயர்ந்து போயினான்"

கம்ப: (யுத்த கும்பகர்ணன் : 98)

என்று பயன்படுத்தியுள்ளது காணலாம். இங்கு இராவணன் ஆரியனாய வடபுலத்தானாகவும் கும்பகருணனை அவனின் வேறு பட்டானாகவும் கொள்ளவேண்டிவரும். அது அமையாது. இதனால் ஆரியர் என்ற சொல்லிற்குக் கம்பர் வடவர் என்ற பொருளை யாண்டும் கொள்ளாது தலைவன், ஒழுக்கமுடையவன், மேலோன் என்ற பொருளில் கையாண்டிருப்பதால் ஆரியன் என்ற சொல்லைக் கண்டு இராமனையும், அவனைச் சார்ந்தாரையும் வட நாட்டவர் என்று கொள்ளுதற்கில்லை.

சங்கப்பாடல்களில் குறித்த வடவர்கள் இராமாயண காலத் தவர் அல்லர். இராமாயண காலத்தில் இராமனுக்கு முன்னோரா யுள்ளார், அனைவரும் வடபுலம், தென்புலம் அல்லது மேற்பால், கீழ்பால் என்று இல்லாமல் பகைப்போர் எவராயினும் வென்றிருக் கின்றனர். இவர்கள் செய்தபோர் அசுரர்களோடு செய்த போராக இருக்கின்றனவே யன்றி மனிதரைத்தான் நிகழ்ந்ததாகக் காணோம்

சங்ககாலத்துப்போர் வடக்கோ, தெற்கோ, குணக்கோ, குடக்கோ நிகழ்ந்தவை எல்லாம் தேவர்களோடும், அசுரர்களோடும் நிகழ்ந்தனவாக இல்லை.

இதுகாறும் கூறியவாற்றால் கம்பர், இராமன்காலத்து நிகழ்ச்சி யாகக் காவியம் பாடியதால் ஆரியன் என்ற சொல்லிற்குச் சங்கப் புலவர்களும், அது தொடர்ந்து வரலாற்று ஆசிரியர்களும் கொண்ட பொருளில் பயன்படுத்தாமல் உயர்ந்தவர், தலைவர், ஒழுக்க முடையவர் என்ற பொருளில் பயன்படுத்தியுள்ளமை தெரிந்து கொள்ளலாம்.

அதனால் கம்பருக்குத் தலைவன் மேலோன் என்ற பொருளில் இராமனும் ஆரியனே, இராவணனும் ஆரியனே. வடபுலத்தான், தென்புலத்தான் என்ற கருத்து கம்பராமாயணத்தில் இல்லை என்பது தெளிவு.

இராமன் வாழ்ந்த காலமும், இராவணன் வாழ்ந்த காலமும் இன்றைய வரலாறு கூறும் ஆரியர் என்ற ஒருவர் தோன்றாத காலம். இராமன் வரலாறும் வேதகால நாகரிகத்திற்கு முன்னைய நிகழ்ச்சியாதலின் இராமனையும் புலஞ்சுட்டி ஆரியன் என்று இனப்பெயரில் அழைப்பது பேதைமை. இராவணன் பிரமகுலத்த வனாதலால் ஆரியன் என்ற சொல்லை அவனுக்கமைக்க இட முண்டு.

சூர்ப்பணகை இராமனைக் காமுற்று மணக்க வேண்டிய போது இராமன் தன்னைச் சத்திரியன் என்று கூறி அவள் பிரம குலத்துப்பாவையாதலால் மணங்கொள்ளும் தடையுண்மையைக் கூறும்போது,

" அந்தணர் பாவைநீ யான் அரசரில் வந்தேன் "

கம்ப.ஆரண். சூர்ப்பணகை-49,2980

இதுகொண்டு நோக்கினால் இராமன் பிரமகுலத்தன் அல்லன் என்பதும் அவன் சத்திரியன் என்பதும் போதரும்.

பரசுராமன் இராமனை எதிர்ப்பட்டுப் போருக்கழைத்தபோது இராமன், பரசுராமன் பிராமணகுலத்தவன் என்பதால், அவனைக் கொல்லல் சத்திரிய குலத்தவனுக்கு முறையன்று என்பதைப் பேசும்போது இரு குல வேறுபாட்டைக் காட்டக் காணலாம்.

" பூதலத் தரசையெல்லாம் பொன்று வித்தனை யென்றாலும்
வேதவித்தாய மேலோன் மைந்தன்நீ விரதம்பூண்டாய்
ஆதலின் கொல்லல் ஆகாது அம்பிது பிழைப்பதன்றால்
யாது இதற்கு இலக்கம் ஆவது? இயம்புதிவிரைவின் "
என்றான்

கம்ப. பால. பரசுராம. 36.1298

அதோடு பரசுராமன் பிராமணகுலத்தவனாய் இருந்தும் சத்திரிய குலத்து அரசர்களை வேரறுத்த செய்தியாலும் அறியலாம்.

" மூவெழுமுறைமை பாரில் முடியுடை வேந்தையெல்லாம்
மேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட்டு அன்னார்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை, முறையின், எந்தைக்கு,
ஆவன கடன்கள் நேர்ந்தேன் அருஞ்சினம் அடக்கிப் போந்தேன்'.

கம். பால, பரசுரா – 33.1295

நிகும்பலையில் யாகம் செய்யச் சென்றதை வீடணன் அறிந்து கூறி அவன் வேள்வியைச் சிதைத்துப் போர் செய்த ஞான்று இந்திரசித்து வீடணனை இகழ்ந்து பேசும்போது வீடணன் பார்ப்பனகுலத்தான் என்று பேசுவதைக் காணலாம்.

"பனி மலர்த்தவிசின் மேலோன் பார்ப்பனக்குலத்துக் கெல்லாம்
தனிமுதல் தலைவனாக உன்னைவந்து அமரர் தாழ்வார்
மனிதருக்கு அடிமையாய் நீ இராவணன் செல்வம் ஆள்வாய்
இனியுனக் கென்னோ மானம் எங்களோடு அடங்கிற்றன்றே

கம்ப யுத். நிகும்பலை - 167.9100

இதுகொண்டு பார்த்தாலும் வீடணன் இராவணன் இந்திரசித்து முதலியோர் டார்ப்பனகுலத்தர் என்பதும் இராமன் முதலியோர் அரசர் குலத்தர் என்பதும் தெளிவாகும்.

இதுகாறும் திருமால் காலக் கணிப்பற்ற கடவுள் என்றும், அவர் இந்த நாட்டு மக்களால் வழிபடப்பெற்றவர் என்றும் அவ ரோடு தொடர்புடைய இராமாவதாரக்கதை அவர் மரபில் வந்த மனு, சிபி, இக்குவாகு, மாந்தாதா, முசுகுந்தன் போன்றோர் வழி வந்த இராமன் வரலாறு என்றும், அத்தகைய வரலாற்றைப் பிற மொழியாளர் கேள்வியறிவாலும் தம் கற்பனையாலும் பிழைபட செய்து விட்டார் என்றும் அதனைத் தெளிந்த கம்பரைச் சோழ மரபினர் ஊக்குவிக்க இராமன் வரலாற்றினைப் புராணங்களையும், தமிழில் உள்ள பிற இராமாயணங்களையும் தேவாரம், பிரபந்தம் முதலிய நூல்களையும் துணை கொண்டு ஆராய்ந்து தெளிவான வரலாறாகச் செய்யவேண்டும் என்பதற்காகச் செய்துள்ளதை கண்டோம். இனி அவர் கம்பராமாயணக்கதைக்கு, அடிப்படை உட்கூறுகள் கதை பொதி பொருள் போன்ற பல செய்திகளை வான்மீகரினின்றும் கொள்ளாமல் புராணங்களினின்றும் வேறு பல தமிழ் இலக்கியங்களினின்றும் கொண்டிருப்பதைக் காண்போம்.

---

# புராணங்கள் தரும் இராமாயணச் செய்திகள்

## 1. பத்மபுராணம்

“தசரதன் இராமனை யுவராஜாவாகச் செய்து சுகமாயிருந்தார். அதைக்கண்டு கைகேயிக்குப் பொறாமை உண்டாயிற்று. இராமனைக் காட்டிற்கனுப்பும் பொழுது தசரதர் வசிட்டரை அழைத்து இராமனுக்கு இனி நடக்கப்போகிற சுகபோகங்களைத் தெரிவிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தார். வசிட்டர் ஆலோசித்து “இராமன் வனத்திற்குச் சென்று ராக்ஷஸ வீரர்களைக் கொல்வார். பரமசிவனை அனேகவிதமாய்ப் பூஜிப்பார். சீதையை இராவணன் எடுத்துப்போவான். வானரசேனையுடன் சமுத்திரத்தைத் தாண்டி இராவணனைக் கொன்று அநேக ஆயிரம் வருஷங்கள் வரையில் ராஜ்யத்தை ஆளுவார். அநேக புத்திர ரத்தினங்களை அடைந்து எண்ணிறைந்த யாகயக்ஞங்களைச் செய்வார்” என்றார். அதற்குத் தசரதர், “இவ்விதமான கல்யாண குணங்களுடைய இராமனை மட்டும் பிரிந்திருப்பதிலும் மரணமடைவது நல்லது” என்றார்.*

பத்மபுராணத்தில் உள்ள “இராமனை யுவராஜாவாக ஆக்கித் தசரதன் மகிழ்ச்சியாக இருந்ததைக் கண்டு அழுக்காறு கொண்டாள் கைகேயி” என்ற செய்தி கம்பனிலும் வான்மீகத்திலும் இல்லை. இராமனுக்கு முடிசூட்டித் தசரதன் முடிதுறப்பதைக் கைகேயி கேட்டு கூனி சூழ்ச்சியால் மனம் திரிந்து, இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டும் என்று வரம் கேட்கிறாள். வான்மீகத்தில் இளவரசு பட்டமென்றும் அரசுபட்டம் என்றும் பேசப்பெற்றுள்ளது. வான்மீகர் இராமனுக்கு இளவரசு பட்டம் என்று கூறியதற்குக் காரணம் அரசன் இருக்கும்போது இளவரசு பட்டம் கட்டும் வழக்கு நோக்கியே.

அடுத்துக்காட்டிற்குப் போகுமாறு நேர்ந்தது பற்றி வசிட்டரை ஆலோசித்த போது அவர் வரும் பொருள் உரைப்பதாக இராமன் நிகழ்த்தவிருக்கும் பல செய்திகளைக் குறிப்பிடுகின்றார் என்று பத்மபுராணம் கூறுகின்றது. இச்செய்தி இரண்டு இராமாயணங்களிலும் இல்லை.

---

* பாதாள காண்டம் -112

ஆனால் கம்பராமாயணத்தில் தசரதன் தனக்கு மகப் பேறில்லையே! அரசு சந்ததி இல்லாது போய்விடுமே! என்று கவன்று மகவேள்வி செய்யக்கருதியபோது வசிட்டன் வைகுண்டத்தில் இந்திரனால் வேண்டப்பெற்றபோது திருமால் தசரதனுக்கு மகவாய்ப் பிறப்பதாகக் கூறியதை நினைத்தார். அதற்குத் தக்காரைக்கொண்டு வேள்வி இயற்ற வேண்டுமென்று மனத்தில் நினைத்து அவற்றைத் தசரதனிடம் கூறாமல் வேள்வி இயற்றுவதற்குரிய எல்லாவற்றையும் செய்தார் என்று பேசப்படுகின்றது.

கருட பகவான் ஒருவருக்கும் தெரியாமல் இராமனுக்கு விஷ்ணுவின் வில்லையும் மூன்று அஸ்திரங்களையும் கொடுத்து விட்டுப் போனார்.

தாடகையையும் சுபாகுவையும் கொல்லுவதற்கும் மாரீசனைச் சமுத்திரத்தில் தள்ளுவதற்கும் இவை கொடுக்கப்பட்டன, சாதாரண அஸ்திரங்களால் இக்காரியம் முடியாது.*

இது போன்ற செய்தி கம்பராமாயணத்தில் நேரடியாக இல்லை. இந்திரஜித்து எய்த நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குவனை விடுதலை செய்வதற்குக் கருடன் வந்ததாகப் பேச்சுண்டு.

“இத்தன்மை எய்தும் அளவின் கண்நின்ற இமையோர்கள்
அஞ்சி இதுபோய்
எத்தன்மை எய்தி முடியுங்கொல்? என்று குலைகின்ற
எல்லை இதன்வாய்
அத்தன்மை கண்டு, புடைநின்ற அண்ணல் கலுழன்
தன் அன்பின் மிகையால்
சித்தம் கலங்கும் இது தீர, மெல்ல இருளூடு வந்து
தெரிவான்”

கம்ப: யுத்த (நாகபாசப்படலம் 243

தாடகை சுபாகு ஆகியவர்களை வதைப்பதற்கு இராமனிடம் இருந்த அஸ்திரமே பயன்பட்டதாகக் கம்பர் கூறுகிறார். மாரீசனைக் கொல்வதற்கு முனிவர்கள் கொடுத்த அஸ்திரங்கள் பயன் பட்டிருக்கின்றன. ஆனால் வேள்வி காத்தபிறகு விசுவாமித்திர முனிவர் தான் வைத்திருந்த வில், அம்பு முதலியவற்றை இராமனுக்குக்கொடுத்துதவியதாகக் கம்பர் பாடுகின்றார். மேற்குறித்த

* இராமாயண தத்துவார்த்த தீபிகை பக். 62- சி ஆர்.எஸ்.

பத்மபுராணத்தில் வந்த கருடன் வரவுர் உண்டு. அர்ப்பு கொடுத்த செய்தியும் உண்டு. ஆனால் கருடன் வரவு வேறு காரியத்திற் காகவும் அஸ்திரம் முதலியன கொடுத்தது விசுவாமித்திரர் என்றும் காணப்படுகின்றது. பின்னர் பரசுராமரிடத்திருந்த வில்லை வாங்கிய தாகவும், அகத்தியர் வில் முதலியன தந்ததாகவும் கம்பர் பேசுகின்றார்.

" மன்னவர் வறுமை நோய்க்கு மருந்தனைய சடையன்
வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே அன்ன படைக்கலம்
அருளினனே ''

கம்ப (பால-வேள்வி 1)

"ஆய்ந்தேற உணரய்ய அயற்கேயும் அறிவரிய
காய்ந்தேவின் உலகனைத்தும் கடலோடும் மலையோடும்
தீய்ந்தேறச் சுடுகிற்கும் படைக்கலன்கள் செய்தவத்தால்
ஈய்ந்தேனும் மனம் உட்க, இவற்கு ஏவல் செய்குனவால்''

கம்ப பால. குலமுறை-30

"விழுமியது சொற்றனை இவ்வில்இது இவண் மேல்நாள்
முழு முதல்வன் வைத்துளது, மூவுலகம் யானும்,
வழிபட இருப்பது, இது தன்னை வடிவாளிக்
குழு, வழுஇல் புட்டிலொடு கோடி என நல்கி ''

கம்ப (ஆரண்ய அகத்தியப் படலம்-55)

இந்திரனுடைய புத்திரனான ஜயந்தனே காக்கை ரூபந் தரித்து வந்தானென்றும் அவ்விடத்தில் ஜானகியைக் கண்டு அவளுடைய அழகால் மயங்கித் தன் கூர்மையான நகங்களால் அவளுடைய ஸ்தனங்களைக் கிழித்தான் என்றும் பத்மபுராணம் கூறுகின்றது.

பத்மபுராணத்தில் கூறிய இக் காகாசுரனுடைய வரலாறு கம்பராமாயணத்தில் இலங்கையில் சீதையைக்கண்டு மகிழும் அனுமனுக்கு அடையாளம் கூறுவதாகச் சீதை வாக்காக வரு கின்றது. சயந்தன் காமுற்ற காக்கையாகவே வந்து சீதையின் மார்பினைக் கொத்த, அது கண்டு பொறாது அஞ்சிச சீதை வருந்தி யது கண்ட இராமன், அருகிருந்த புல்லை அம்பாக்கி அவன் கண்கள் இரண்டும் ஒழியுமாறு எய்ய, அவன் சரண் புகுந்து வேண்டியபோது அவன் கண்மணி ஒன்று ஒழிய ஒருமணி இரண்டு கண்களுக்கும் ஆகுமாறு செய்தான் என்று பேசப்பட்டுள்ளது.

"நாகம் ஒன்றிய நல்வரையின் தலை, மேல் நாள்
ஆகம் வந்து, எனை வள்உகிர்வாளின் அணைந்த
காகம் ஒன்றை முனிந்து அபல்கல் எழுபுல்லால்
வேகவெம்படை விட்டது மெல்ல விரிப்பாய்"

கம்ப ( சுந்தர 2 சூடாமணி-77 )

"எந்தை நின் சரணஞ் சரணென்ற விதனால்
முந்தையின் குறையும் பொறை தந்தன முந்துன்
சந்தமொன்று கொடித்திரள் கண்கள்தமக்கே
வந்தோர் கண்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய்"

கம்ப ( சுந்தர : சூடாமணி-683 )

"தேவர்கள் தங்களுடைய காரியத்தை நிறைவேற்ற மந்தரை என்ற அப்சரசை அனுப்பினார்கள் அவள் கேகய ராஜாவால் கைகேசிக்குத் தாதியாகக் கொடுக்கப்பட்டாள்."

பத்மபுராணத்தில் கூறிய இந்ச் செய்தி, பால காண்டத்தில் கம்பர், இராமன் முதலியோர் பிறந்தபோது இன்னின்னார் இன்னின்னாராய்ப் பிறந்தார் என்று குறிப்பிட்ட இடத்தில் வரவில்லை.

கம்பராமாயணத்தில் கூனி தேவர்களால் அனுப்பப்பட்ட ஒருத்தியாகக் காணோம். அடுத்து அவள் தேவர்கள் சூழ்ச்சியால் தங்கள் காரியம் நிறைவேற, இராமனுக்கு விரோதமான காரியம் செய்ய வந்தாள் என்ற குறிப்பில்லை. ஆனால் இராமன் இளையவனாக இருந்தபோது தன் கூன் முதுகில் உருண்டை வில்லால் அடித்தது நினைந்து வஞ்சம் தீர்த்துக்கொண்ட முறையில் செயற்பட்டாள் என்பர் கம்பர்.

"ரிச்யமுக பர்வதத்தில் ஒரு மரத்தடியில் சிம்மத்தின் தோலை விரித்து லட்சுமணன் மடியில் தலை வைத்துக்கொண்டு இராமன் படுத்திருக்கையில், ஒரு வானரம் பிரம்மச்சாரி வேடத்தில் வந்து பாடிக்கொண்டு பழங்களையும், பூக்களையும் பறித்து இராமன் மேல் விட்டெறிந்தது. மரத்தின் கிளையை முறித்து அவருக்கு விசிறிக் கொண்டிருப்பதைக் கண்ட இராமன் "இலட்சுமணா இந்தக் குரங்கு யார்?" என்று கேட்க, அவன் தெரியாது என்றபோது இராமன் அதனை அழைத்து "நீ யார்?" என்று கேட்டார்" என்று பேசப்பட்டுள்ளது. *

கம்பராமாயணத்தில் இராம இலக்குவர்கள் மரத்தடியில் சிம்மத்தின் தோலை விரித்துப் படுத்திருந்த குறிப்பில்லை. ஆனால்

* பாதாளகாண்டம் - 11

இருவரும் ரிச்யமுக பர்வதத்தை நோக்கி வருகின்றனர். அவர்களைத் தொலைவில் இருந்து கண்ட அனுமன், அந்தணர் உருவில் வந்த அவர்கள் தோற்றம் அவர்களுடைய மெய்ப்பாடு முதலியவற்றையும் அவர்கள் இருந்த சூழ்நிலையில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகளையும் கூர்ந்து நோக்கி அவர்கள் தருமத்தைக் காப்பவர்கள் என்று முடிவு கட்டுகின்றான்.

"காய்எரி கனலும் கற்கள், கள்ளுடை மலர்களே போல்,
தூயசெங் கமலப்பாதம் தோய்தொறும் குழைந்து தோன்றும்,
போயின திசைகள் தோறும், புல்லொடு மரனும் எல்லாம்
சாய்வுறும், தொழுவபோல்; இங்கு இவர்களோ தருமம்ஆவார்?"

கிட்கி : 3 அனுமம்-12

இக்கருத்து பத்மபுராணத்தில் கண்டது. அனுமன் இலக்குவர்களை மிகப் பெரியவர்களாக மதித்துப் பழங்களைப் பறித்து அவர்கள் பக்கத்துப் போட்டதோடு மரக்கிளையை ஒடித்து அவர்களுக்கு வெப்பமாற்றும் முறையில் விசிறிக் கொண்டிருந்தான் என்று பேசப்பெறுகிறது. கம்பனில் பழங்கள் கொண்டுவந்து தந்ததாகவோ விசிறியதாகவோ குறிப்பில்லை. ஆனால் இராம இலக்குவர்களை அனுமன் பெரியவர்களாக உணர்ந்த குறிப்பு இரண்டு இராமாயணங்களிலும் காணப்பெறுகின்றது.

சுக்ரீவனுக்காக அனுமன் இராமனிடம், "தாங்கள் வாலியைக் கொன்றால் நான் சமுத்திரத்தைத் தாண்டி லங்கையில் ராவணனால் சிறை வைக்கப்பட்ட சீதையைக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று பிரதிக்ஞை செய்தான்.

(பத்மபுராணம் பாதாளகாண்டம்-121)

இராமன் வாலியைக்கொன்று சுக்ரீவனுக்கு அரசளித்தால், கடலைத்தாண்டி சீதையைப் மீட்டுக் கொண்டுவந்து தருவதாகக் கூறுகிறான் அனுமன் இச்செய்தி வால்மீகி, கம்பர் ஆகிய இருவர் இராமாயணங்களிலும் நேரடியாகக் காணப்பெறவில்லை. என்றாலும் குறிப்பாக இராமன் வாலியை முன்னர்க்கொன்று சுக்ரீவனைக் கோமகனாக ஆக்க வேண்டும் என்று பேசப் பெற்றுள்ளது.

"கொடுந்தொழில் வாலியைக் கொன்று கோமகன்
கடுங்கதிரோன் மகனுக்கிக் கைவளர்
நெடும்படைக் கூட்டினுலன்றி நாடாரிது
அடும்படை அரக்கர்தம் இருக்கை ஆணபாய்"

(யுத்த : களம்காண்-29)

—12

அனுமனுக்குச் சீதையை எடுத்துச் செல்லும் ஆற்றல் உண்டு என்பதை அசோக வனத்துச் சீதையைக் கண்டு அவளிடம் அவன் பேசுபபோது,

> "இலங்கையோடும் ஏகுதிகொல்'' என்னினும், இடந்து என்
> வலம்கொள்ஒரு கைத்தலையில் வைத்து, எதிர்தடுப்பான்
> விலங்கினரை நூறிவரி வெஞ்சிலையி னோர்தம்
> பொலங்கொள் கழல் தாழ்குவென்; இது அன்னை
> பொருளன்றால்
>
> கம். சுந். கா: 610

என்று கூறுகின்றான்.

தாரை, "மகாராஜா நரநாராயணர்கள் பூ பாரத்தைத் தீர்ப்பதற்காகத் தசரத புத்திரர்களாய், இராம லட்சுமணர்கள் என்று அவதரித்துச் சுக்ரீவனுக்குச் சகாயமாய் வந்திருக்கின்றார்கள். தாங்கள் போகவேண்டாம்'' என்றாள். அதற்கு வாலி, "இராமன் தர்மாத்மா வென்று கேள்விப்பட்டிருக்கிறேன். மேலும் பலவானான என்னை விட்டுச் சுக்ரீவனைச் சேரமாட்டான். அப்படி என்னுடன் யுத்தம் செய்ய வந்தாலும் பின் வாங்கமாட்டேன்'' என்றான்.

சுக்கிரீவன் வாலியை இராமன் துணை கொண்டு போருக் கழைத்தபோது சுக்கிரீவனுடைய போர்க்குரலைக் கேட்டுச் சினந்து எழுகின்றான் வாலி. அவனைத்தடுக்கும் அவன் மனைவி தாரை பூ பாரம் தணிப்பதற்காக இராமன் பிறந்து வந்ததாகவும், அவன் சுக்கிரீவனுக்குத் துணையாய் உள்ளான் என்றும் தான் அறிந்த தாகக்கூறித் தடுக்கின்றாள். அது கேட்ட வாலி இராமனுடைய குல, குணச்சிறப்புகளைக் கூறி அவன் அங்ஙனம் செய்யான் என்று கூறுகின்றாள். அப்படி அவன் யுத்தம் செய்ய வந்தாலும் தன்னால் அவனை எதிர்க்க முடியும் என்றும் கூறுகின்றான். இச்செய்தி கம்பராமாயணத்தில் அப்படியே உள்ளது.

இராமன் வாலியைப் பாணத்தால் அடித்தவுடன், "இது என்ன அநியாயம்? நாங்கள் இருவரும் முஷ்டி யுத்தம் செய்கை யில் சம்பந்தம் இல்லாது நீ என்னைப் பாணத்தால் அடித்தது அதர்மம்'' என்றான்.

இக்கருத்து வான்மீகத்தில், "வேறொருவனோடே புரிந்து கொண்டிருந்தவனும் உம்மைச் சீண்டாதவனும் ஒரு பாவத்தையும் அறியாதவனுமான என்னை இப்பொழுது வதைக்கி றீர்'' என்று குறிப்பாகக் காணப்படுகிறது.

---

* (ஸர்க்கம் 17 பக் 155)

** பத்மபுராணம், பாதாளகாண்டம்-112

ஆனால் கம்பர் மேற்குறித்த பத்மபுராணக் கருத்தினை அப்படியே வாங்கிப் பேசியிருப்பது நோக்கத்தக்கது.

"இருவர் போர் எதிருங்காலை இருவரும் நல்லுற்றரே
ஒருவர் மேல் கருணை தோன்றி ஒருவர் மேல் ஒளித்து நின்று
வரிசிலை குழைய வாங்கி வாய்அம்பு மருமத்து எய்தல்
தருமமோ? பிறிதொன்றமோ தக்கிலது என்னும் பக்கம்"

கிட்கி : வாலிவதை-89

பத்மபுராணத்தில் வாலி இறந்த பின்பு தாரை இராமனோடு பேசுகின்ற ஒரு விரிவான பேச்சு இடம் பெற்றுள்ளது. இராமனோடு தாரை பேசுவதாக வான்மீகரும் கூறுகிறார். கம்பனில் தாரை இராமனைக் கண்டு நேராகப் பேசியதாகப் பேச்சில்லை. ஆனால் பத்மபுராணத்தில் தாரை கூறிய கூற்றாக வருகின்ற கருத்துக்கள் அங்கங்கே வாலியின் கூற்றாக வான்மீகத்திலும், கம்பராமாயணத்திலும் காணப்படுகின்றன.

இராமனிடம் தாரை "நீ ராஜ்யத்தை இழந்தாய் என்று இவனை ராஜ்யத்தையும் உயிரையும் இழக்கச் செய்யலாமா?" என்கின்றாள்.

இக்கருத்து வான்மீகத்திலோ, கம்பரிலோ நேரிடையாகக் காணப்படவில்லை

"என்னிடத்தில் ஆசை வைத்து என்னை அடைவதற்காக இவ்வாறு செய்திருந்தால் ஏகபத்தினி விரதன் என்ற பெயர் உனக்குத் தகுமா?" என்கின்றாள் தாரை.

இக்கூற்று கம்பனிலோ, வான்மீகத்திலோ இல்லை. ஏக பத்தினி விரதன் என்ற ஒரு கோட்பாடு இராமனுக்குக் கம்பராமாயணத்தில் அழுத்தமாகப் பேசப்பெற்றது போல வான்மீகத்தில் இல்லை.

'வந்து என்னைக் கரம்பற்றிய வைகல்வாய்,
இந்த, இப்பிறவிக்கு இரு மாதரைச்
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்"

சுந்தர : சூளாமணி-34

வான்மீகத்தில் இக்கருத்து மாறுபடுகின்றது. இராமனுக்குப் பல மனைவியர்கள் இருக்க குறிப்பு அயோத்தியா காண்டம், சுந்தரகாண்டம், உத்தரகாண்டம் என்ற மூன்று காண்டங்களிலும் காணப்படுகின்றது.

சுந்தரகாண்டத்தில் சீதை "நீ பிதுரு வாக்ய பரிபாலனம் செய்து வனவாசத்தை முடித்து அயோத்திக்குச் சென்று யாதொரு கவலையும் இல்லாமல் விசாலமான நேத்திரங்களையுடைய பெண்களுடன் ஆனந்தமாய் இருப்பீர்" என்கிருள்.

வான்மிகம் சுந்தரகாண்டம்

யுத்தகாண்டத்தில் இராமன் தர்ப்ப சயனத்தில் படுத்திருப்பதை வர்ணிக்கும்போது "உத்தமஸ்த்ரீகளின் புஜங்களால் அநேக விதமாகப் பூசப்பட்ட புஜங்கள்" என்று பேசப்பட்டுள்ளது. மனைவியைத் தவிர மற்றவர்களுக்கு சந்தனம் முதலிய மணக்குழம்புகள் பூசும் உரிமையில்லை.

உத்தரகாண்டத்தில் "என் தாய்களையும் குமாரர்களையும் ஸ்த்ரிகணங்களையும் பரதனையும் முன்னிட்டுக்கொண்டு போகச் சொல்" என்று சொல்லப்பட்டுள்ளது. ஸ்த்ரீகணங்கள் என்பதில் சீதையைத்தவிர வேறு மனைவியர் உண்டென்று அறிய முடிகிறது.

வான். உத் காண். அசுவமேத சர்க்கம்

வான்மீகத்தைப் பொறுத்த வரையில் ஏகபத்தினி விரதம் என்பதெல்லாம் ப்பிருகுவின் சாபத்தை ஏற்றுக்கொண்டதாலே ஆகும். அரசபோகத்திற்கு உரிமை உடைய மனைவியைத் தவிர மற்ற இன்ப சுகங்களுக்கு மனைவியர்களைக் கொள்வது ஏகபத்தினி விரதத்தைப் பாதிக்காதென்பது அவருடைய கொள்கை போலும்.

இங்கு வான்மீகர் கூறும் ஏகபத்தினி விரதம் என்ற சொல்லுக்குப் பொருளும், கம்பர் கூறும் ஏகபத்தினி விரதம் என்ற சொல்லுக்குப் பொருளும் வேறானவை. உண்மையிலேயே ஏகபத்தினி விரதம் என்பது கம்பராமாயணத்தில்தான் காணப்படுகிறது. அதற்குக் காரணம் கம்பர் இக்கருத்திற்கு மூலத்தைப் பத்ம புராணத்திலிருந்து கொண்டதாலாகும் என்று ஊகிக்கமுடிகிறது.

சுக்ரீவனுடைய சகாயத்தால் இராவணனைக் கொன்று சீதையை அடையலாமென்று இப்படிச் செய்தால் வாலி ஐம்பது பரார்த்தங்கள் அடங்கிய சேனைக்குத் தலைவர் சுக்ரீவன் ஏழு பரார்த்தங்கள் அடங்கிய சேனைக்கு அதிபதி. வாலியால் அடித்துத் துரத்தப்பட்டவன். வாலி நினைத்தவுடன் இராவணன் சீதையைக் கொண்டு வந்து நமஸ்காரம் செய்வான்.

பத்மபுராணம் கூறுகின்ற வண்ணம் வான்மீகரோ கம்பரோ சுக்ரீவனுக்குத்தனியாக ஏழு பாரார்த்தங்கள் அடங்கிய சேனைகள் இருந்ததாகக்கூறவில்லை. தாரை கூறியது போல இராமன் வாலியின் நட்பைக் கொண்டிருந்தால் இராவணனைக் கொன்று சீதையைக்

கொண்டுவந்து கொடுத்திருப்பான் என்ற கருத்து கம்பனிலும் வான்மீகத்திலும் வாலி கூற்றாக அமைந்துள்ளது. கம்பராமாயணத்தில் தாரை கூற்றாகவும் ஒரு குறிப்புண்டு. இராமன் கேட்டிருந்தால் கொடுக்க வல்லான் வாலி என்ற கருத்தில் கூறப்பட்டுள்ளது.

" வாயால் ஏயினன் எனில் வாழ்வெல்லாம்
ஈயாயோ அமிழ்தெல்லாம் ஈகுவாய் "

(கிட்கி. தாரை புலம்பு படலம்-12)

மெய்யறிவு தலைப்பட்ட வாலி கையற்றுப்பேசுகின்றபோது,

" மற்றிலேன் எனினும் மாய அரக்கனை வாலின் பற்றி
கொற்றவ நின்கண் தந்து குரக்கியல் தொழிலும் காட்டப்
பெற்றிலென் கடந்த சொல்லிப் பயனிலை "

கிட்கி வாலிவதை - 134

என்று பேசுகின்றான்.

இதுவரை தாரை கூற்றாக வந்தவற்றிற்கு இராமன் பதிலுரைக்கின்றான். " நான் அரசன். துஷ்டநிக்ரக சிட்டபரிபாலனம் செய்ய வேண்டுவது என் கடமை " என்றான்.

இக்கருத்தை வான்மீகி அப்படியே கூறுகின்றார். மேலும் " நாங்கள் சிறந்த எங்கள் தர்மத்தில் சலியாப் பற்றுடையவர்களாய் பரதனுடைய அங்கீகரித்தலை நினைத்தே தர்ம விதிப்படி அறநெறி தவறியவனைச் சிதைத்து வருகின்றோம் "

என்று பரதனுக்காகச் செய்வதாக இராமன் கூறுவதில் பொருளில்லை காரணம் இராமன் கைகேயியின் வரத்தின்படி அரசு துறந்து பதினான்கு ஆண்டுகளைக் காட்டில் கழிக்கும் பொருட்டு வந்தான். எனவே அரசு நெறி காக்க வாலியைக்கொன்றேன் எனும் கூற்றுப் பொருத்தமாக இல்லை.

கம்பராமாயணம், இராமன்தந்தையின் ஏவலை நிறைவேற்றவும் காட்டில் தவம் செய்து வாழவுமே வந்தான் என்னும். வந்தவிடத்தில் முனிவர்கள் அரக்கர்தம் கொடுமை கூறி அடைக்கலம் புகுந்தபோது வீரன் என்ற முறையில் அபயமளித்தான். அதுபோல் சுக்கிரீவன் அடைக்கலம் புகுந்த போது அவனையும் ஏற்று வாலியைக் கொல்கின்றான். யாவராயினும் எளியராக இருந்து வலியவரால் துன்புறுத்தப் பட்டால் எளியவருக்கு உதவுவது இராமனுடைய குறிக்கோள், ஆகையால்தான் அவன் சுக்கிரீவனுக்கு உதவினான்.

---

* இராமன் பத்மபுரா பாதாள காண்டம்.

** (ஸர்க்கம் 18 பக் 165. வான்மீகம்)

"ஆதலானும், அவன் எனக்கு ஆர் உயிர்க்
காதலான் எனலானும் நிற் கட்டனென்
ஏதிலாரும் எளியவர் என்றால், அவர்
தீது தீர்ப்பது என் சிந்தை கருத்து அரோ"

கிட்கி. வாலி வதை 111

பத்மபுராணத்தில் தாரை "வாலி தர்பியுடன் யுத்தம் செய்து கொண்டிருக்கையில் சுக்கிரீவன் இராஜ்யத்தையும் என்னையும் அபகரித்தான்" என்று கூறுகின்றாள்.

இந்த செய்திக்குக் கம்பராமாயணத்தில் எந்த விதமான குறிப்பும் இல்லாததோடு மட்டுமல்லாமல் இதற்கு நேர் மாறுபட்ட செய்தியே காணப்படுகிறது. தாரை, சுக்கிரீவன் முதலியவர்களால் வணங்குவதற்குரியவளாக இருக்கின்றாளேயன்றிச் சுக்கிரீவனுக்கு மனைவியாகும் உரிமை உடையவளாக விளங்கக் காணோம்.

வான்மீகத்தில் வாலி துந்துபியோடு போரிட்ட காலத்துச் சுக்கிரீவன் தாரையை அபகரித்தான் என்ற குறிப்பில்லை. ஆனால் வாலி இறந்தபிறகு, தாரை சுக்கிரீவனுக்கு மனைவியாகவும், காமக் கிழத்தியாகவும் விளங்கிய செய்தி அதில் வெளிப்படை.

கம்பர் இவ்வாறு மாறுபட்டிருப்பதற்குக் காரணம், தாரை பத்தினி எழுவருள் ஒருத்தியாகப் பேசப்பெறுவதால் அவளை இழிந்த ஒழுக்கம் உடையவளாகக் கூறியது பிழையென்று கருதிய தாலேயாம்.

"அறுபதினாயிரம் வருஷங்களுக்கு முன் சுக்கிரீவன் ராஜ்யத்தை அபகரித்தான். ஒரு வருஷம் கழித்து வாலி திரும்பி வந்து ராஜ்யத்தையும் சுக்கிரீவனுடைய பாரியையும் அவனிடத்திலிருந்து அபகரித்தான். அந்த தினத்தில் உன் பிதாவுக்கு பட்டாபிஷேகம் ஆயிற்று" என்றாள் தாரை.

இந்தக்குறிப்பு கம்பராமாயணத்தில் வேறு இடத்தில் வேறு வகையில் காணப்படுகிறது. தயரதன் அறுபதினாயிரம் ஆண்டுகள் அரசாட்சி செய்தான் என்று குறிப்பிடப்படுகின்றது.

வாலி கடல் கடைந்து அமுதளித்த பலருள் ஒருவனாதலின் அவன் அவ்வளவு பழங்காலத்தவன். அங்ஙனமே இராவணனும் முக்கோடி வாழ்நாள் உடையவன். திருமால் எடுத்த பரசுராம அவதாரம் இராமாவதாரத்திற்கு எவ்வளவோ காலம் முந்தியது. தசரதன் பரசுராமனுக்கு அஞ்சி ஆண்டுக்கு ஒரு மனைவியாக

அறுபதினாயிரம் பேரை மணந்தான் என்ற ஒரு செய்தியும் உண்டு. பரசுராமனால் கொல்லப்பெற்ற கார்த்தவீரியார்ச்சுனனிடம் இராவணன் தோற்றிருக்கிறான். இந்த இராவணனை வாலி வாலால் கட்டி வென்றிருக்கிறான். இவற்றையெல்லாம் பார்க்கின்றபொழுது பத்மபுராணத்தில் உள்ள அறுபதினாயிரம் ஆண்டு என்ற காலக் குறிப்பு கம்பருக்குத் துணை செய்தது என்பதை ஊகிக்க முடிகிறது.

இராமனால் அடிபட்ட வாலி "சுவாமி தாங்கள் சங்கு சக்கர காபாலியான தேவன் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். யோகிகள் தங்களையே தியானம் செய்கிறார்கள். தங்களுடைய கையால் மரணமடைந்தேன். மரணகாலத்தில் தங்களுடைய தரிசனம் கிடைத்தது. எனக்கு உத்தம கதியைக் கொடுக்க வேண்டும்" என்று பிரார்த்தித்து அவருடைய முக அரவிந்தத்தையே பார்த்துக்கொண்டு முக்தியடைந்து சொர்க்கத்தை அடைந்தான். *

இக்கருத்து கம்பராமாயணத்தில் தெளிவாகப் பேசப்பெற்றுள்ளது. இராமன் திருமாலென்று அனுமன் கூற்றாகக் காணப்படுகிறது. வாலியைக் கொல்வது பற்றிச் சுக்கிரீவன் அனுமன் முதலிய அமைச்சர்களோடு ஆராய்கிறபோது,

"சங்குசக்கரக் குறி உள, தடக்கையில் தாளில்
இங்கு இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை
செங்கண் விற்கரத்து இராமன் அத்திரு நெடுமாலே
இங்கு உதித்தனன் ஈண்டு அறம் நிறுத்துதற்கு இன்னும்

கிட்கி : நட்புக்கோட் 76

இராமன் பாணங்களால் சமுத்திரத்தை வற்றச்செய்தார். சமுத்திரராஜன் பிரார்த்தித்த பிறகு வருணாஸ்திரத்தால் அதை நிரப்பினார். *

பத்மபுராணத்தில் கூறப்படும் இச்செய்தி கம்பராமாயணத்தில் அப்படியே காணப்படுகிறது. சீதை இலங்கையில் இருக்கிறாள் என்பதை அறிந்த பின்னரே கடல் அடைத்துக் கடந்து செல்லக் கருதி வருணனை வழிவேண்டியபோது அவன் உடனே வராமையால் அவன் மீது அம்பு தொடுக்கிறான். அப்போது கடல் வற்றுகிறது.

"செறிவுறு செம்மைய, தீயை ஒம்புவ
நெறியுறு செலவின, தவத்தின் நீண்டன,

---

* பாதாள காண்டம் 354-55
பத்மபுராணம் உத். காண் 2 69

உறுசினம் உறப்பல உருவு கொண்டன
குறுமுனி எனக்கடல் குடித்த கூர்ங்கணை

யுத்த : கடல் சிறிய 42

இவ்வாறு கடல் வற்றிய பின்னர் வருணன் மேல் இராமன் பிரம்மாஸ்திரத்தைத் தொடுத்து அவனை ஓடி வந்து அடைக்கலம் புகச் செய்தான். அதன்பின்னர் இராமன் அடைக்கலம் தந்து சினம் அடங்கிய பின்னர் வருணனிடம் கடல் மீது அணைகட்ட அவன் அனுமதி வேண்டுகிறான். இங்கு பத்மபுராணத்தில் கூறிய வண்ணம் இராமன் மீண்டும் ஓர் அம்பால் கடலை நிரப்பினான் என்ற குறிப்பு இல்லையாயினும் தரையாகப்போன கடலின்மீது நடந்து செல்லவேண்டிய இராமன் நீருள்ள கடலில் அணை கட்டுவான் போல வேண்டுதலாலும் வருணன் தன் மீது இடுகின்ற கல்லை அணையாகத் தாங்கி நிற்பதாக வாக்குத் தருவதாலும் மீண்டும் கடல் நிரம்பப் பெற்றதை ஊகிக்க முடிகிறது.

"கல்லென வலித்து நிற்பன் கணக்கு இலா உயிர்கள் எல்லாம்
ஒல்லையின் உவந்து வீயும் இட்டது ஒழுகா வண்ணம்
எல்லையில் காலம் எல்லாம் ஏந்துவென் இனிதின் எந்தாய்?
செல்லுதி "சேது" என்று ஒன்று இயற்றி என் சிரத்தின் மேலாய்"

யுத்த கடல் சிறிய 21

வான்மீகத்தில் மீண்டும் அம்பு எய்து கடலை நீரால் நிரப்பியதாகக் குறிப்பில்லை.

"ஜாம்பவான், சுவாமி! லங்கை வானரர்களால் நாசமடையுமென்று நாரதர் எனக்குச் சொல்லியிருக்கிறார். சமுத்திரத்தைத் தாண்டுவோம்" என்றார் இராமன் சங்கரனைத் தியானித்து அவரிடத்தில் தன் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க மாதேவன் என் வில்லைச் சமுத்திரத்தில் போடுகிறேன். அதன் வழியாய் நீங்கள் எல்லோரும் லங்கைக்குச் செல்லுங்கள்" என்றார். அப்படியே அறுபது வெள்ளம் வானரர்களும் சமுத்திரத்தைத் தாண்டினார்கள்."

இதில் காணப்படுவனவற்றில் அறுபது வெள்ளம் வானரர்கள் என்ற குறிப்பு கம்பராமாயணத்தில் உண்டு. பிற செய்திகள் அங்கில்லை. ஜாம்பவானைப் பற்றிய குறிப்புண்டு. ஆனால் இச்செய்தியில்லை.

பத்மபுராணத்தில் "இராமன் விலையாய் வில்லை வளைத்து நாணேற்றி ஒரு பாணத்தைத் பூட்டிப் பிரயோகித்து, அந்த பிரதிமையை ஐந்து துண்டுகளாகப் பிளந்தார். அதைக்கண்ட அந்த

ராக்ஷஸர்கள், "பிரபோ எங்கள் குழந்தைகளைக் காப்பாற்ற வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். இராமனும் அம்படியே செய்கிறேன் என்று அனுக்கிரகித்தான்" என்றுள்ளது. இரண்டாவது தினத்தில் விபீஷணன் இராமனைச் சரணமடைந்தான் என்று கூறப்பட்டுள்ளது.

கம்பராமாயணத்தில் வீடணன் இராமன் கடலைக் கடப்பதற்கு முன்பே சரணடைந்தான் என்றுள்ளது. பத்மபுராணத்தில் கூறப்படும் பிற செய்திகள் கம்பரில் இல்லை.

"மஹாபலவானான இராவணனைக் கொல்வதற்கு இராமன் அநேக பிரயத்தனங்கள் செய்தும் முடியாமல் முடிவில் விபீஷணனுடைய முகத்தைப் பார்க்க அவன் செய்த ஜாடையை அறிந்து அவ்விடத்தில் பாணத்தை அடித்தார் என்று கூறும் பத்மபுராணச் செய்தி கம்பரில் இல்லை.

இராவணன் மரணமடைந்தான். பிறகு கும்பகர்ணன் ஒரு கதையைச் சுழற்றிக்கொண்டு வானரர்களைக் கோடிகோடியாய்க் கொன்று இராமனைத் தலையில் அடித்தான். அவர் அவனை அனேக பாணங்களால் கொன்றார் என்று பத்மபுராணம் கூறும்.

கம்பராமாயணத்தில் கும்பகருணன் கொல்லப்பட்ட பிறகே இராவணன் கொல்லப்பட்டான் என்று உள்ளது.

"ஸமுத்திரத்தைத் தாண்டிக் கரையில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்" என்ற பத்மபுராணப் பாதாளகாண்டத்துச் செய்தி கம்பராமாயணத்தில் இல்லை.

இராமன் "விபீஷணா! சந்திர சூரியர்களும் பூமியும் உள்ள வரையில் நீ இந்த ராஜ்யத்தை ஆண்டு பிறகு என் திருவடிகளை அடைவாய்" என்று இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்குக் குலதெய்வமான ஸ்ரீரங்கநாதனை அவருக்குக் கொடுத்தாரென்று பத்மபுராணத்தில் சொல்லப்படுகிறது.

இக்கருத்து அப்படியே கம்பரால் விபீடனுக்கு முடி சூட்டப் பெற்ற போது இராமன் கூற்றாக,

"ஆழியான் அவனை நோக்கி அருள் சுரந்து உவகைகூர்ந்தே
ஏழினோடு ஏழாய் நின்ற உலகும் என்பெயரும் எந்நாள்

வாழும்நாள், அன்று காறும், வான் எயிற்று, அரக்கர் வைகும்
தாழ்கடல் இலங்கைச்செல்வம் நின்னதே தந்தேன் என்றான் ''

கம்ப: யுத்த விபீடணன் அடைக்கலம் 139 6631

இக்கருத்து வால்மீகத்தில் இல்லை.

இக்ஷ்வாகு குலத்தரசர்களுக்குக் குலதெய்வமான ஸ்ரீரங்க நாதனை அவருக்குக் கொடுத்தாரென்று சொல்லப்படுகிற பத்மபுராணச் செய்தியை அப்படியே கம்பர் குலமுறை கிளத்துப் படலத்தில் பேசுவதைக் காணலாம்.

'' பிணி அரங்க, வினை அகலப், பெருங்காலம் தவம்பேணி
மணி அரங்கு நெடு முடியாய் மலர் அயனே வழிபட்ட
பணி அரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரையாம் காண
அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார் ''

கம்ப: பால. குலமுறை 4:722

## விஷ்ணுபுராணம்

இக்ஷ்வாகுவின் பேரனான புரஞ்ஜயன் அயோத்தியை ஆண்டபோது தேவாசுர யுத்தம் நடந்தது. தேவர்கள் விஷ்ணுவைச் சரணமடைய அவர் " அயோத்தியாபதியான புரஞ்ஜயனிடத்தில் என் சக்தியை வைத்து அவதரிக்கிறேன், நீங்கள் அவனுடைய உதவியை வேண்டுங்கள் '' என்றார். அவர்கள் அப்படிச் செய்ய பரஞ்ஜயன்; " இந்திரன் எனக்கு வாகனமாகட்டும் '' என்றான். தேவராஜன் ரிஷபமாய் அவனைத் தன் முசுப்பில் (ககுத்தத்தில்) சுமந்தான். அதனால் ககுஸ்தனென்ற பெயர் வந்தது.

இந்த வரலாற்றினைக் கம்பர் இராமனுடைய குல வரலாற்றினைக் கோசிக முனிவன் வழி ஜனகனிடம் கூறுகின்றபோது,

"தான்.தனக்கு வெலற்கு அரியதானவரைத் தலை துமித்து என்
வான் தாரகிற்றிகொல்? என்று குறை இரப்ப, வரம் கொடுத்தாங்கு
ஏன்று எடுத்த சிலையினனும் இகல் புரிந்த இவர் குலத்து ஓர்
தோன்றலைப் பண்டு, இந்திரன் காண், விடை ஏறாய்ச் சுமந்தானும் ''

கம்ப பால குலமுறை 5

என்று அப்படியே கூறுகின்றார்.

## கூர்மபுராணம்

"ராட்சாதிபதியான இராவணன் இராமனுடைய பாரியையை நினைத்தான். அவ்வெண்ணத்தை அந்த க்ஷணமே அறிந்த சீதை ஆசிரமத்தில் வசிக்கும் அக்கினியிடத்திற் சென்று எட்டு சுலோகங்களால் அவரைத் தோத்திரம் செய்து இராமனைத் தியானித்து நின்றாள். அப்பொழுது அக்கினிபகவான் அதிலிருந்து வெளிவந்து சீதையைப் போன்ற மாயா ரூபத்தைச் சிருட்டித்து ஆசிரமத்தில் வைத்துவிட்டு மறைந்தான். பின்பு அந்த மாயா ரூபத்தை லங்கையில் அக்னி பகவான் எரித்து நிஜ சீதையைக் கொண்டு வந்து கொடுத்தார். *

கூர்மபுராணத்தில் குறிப்பிடப்படுகின்ற இந்த மாயா சீதையைக் குறித்த செய்திகள் கம்பராமாயணத்தில் இல்லை. ஆனால் சீதை அக்னியில் இறங்கிய செய்தி கம்பராமாயணத்தில் உண்டு. சீதையின் கற்பைச் சோதிப்பதற்கு இராமன் இட்ட கட்டளைப் படி சீதை அக்னியில் குளித்து மீண்ட செய்தி உண்டு

"நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்
பாய்ந்தனள் பாய்தலும், பாவின் பஞ்சு எனத்
தீந்தது அவ்வெரி அவர் கற்பின் தீயினால்"

கம்ப யுத்த பிராட்டி திருவடிதொழுதுதபடலம் 72

"அழுந்தின நங்கையை அங்கையால் சுமந்து
எழுந்தனன் . . . . . . . அங்கி"

கம்ப: யுத்த பிராட்டி திருவடிதொழுதபடலம் 73

கூர்மபுராணத்தில் பரசுராமன் வில்லை வாங்கி இராமன் நாணேற்றி இலக்குகேட்டுப் பின் பரசுராமன் தான் ஈட்டிய தவங்கள் யாவும் தந்ததாகக் கூறும் பகுதி கம்பராமாயணத்தில் அப்படியே இடம் பெறுகிறது இராமன் திருமணம் முடித்து அயோத்தி புகும் வழியில் பரசுராமன் குறுக்கிட்டது தொடங்கி நடந்த செய்திகளைக் கம்பர் கூறுவர்.

"மணவினை முடிந்த பின்னர் மன்னர் கோன் மைந்தர் சூழப்
பணிவரும் பவளத்தாற்றுச் செந்நெலம் படைப்பை வேலி
துணிகெழு மிதிலை நீங்கி யகநகர்க்கேகு மெல்லைத்
துணிகதிர்ப் பரசுராம னிராமனை நோக்கிச் சொல்வான்"

---

* கூர்மபுராணம் உத்திரகாண்டம் 24-வது அத்

“பாற்றினஞ் சுழலஞ்சூலப் படையினேனளித்த வில்லை
யாற்றல் கொலுறுத்ததென் அணி மணி முறுவல் கோட்டி
யேற்றுதியிந்த வில்லென் றளித்தலுமிமைப் பினேற்றிக்
கூற்றுறழ் பகழிக்கென் கொலிலக்கு நீ கூறுகென்ருன்”

“ஈட்டிய தவங்கள் யாவு மெய்து கொன்றிடுதியென்னப்
பூட்டிய பகழி யொன்ருல் பொன்னகரப் புகவு மாற்றி
வாட்டிறலினையரோடு மன்னெடுஞ் சிலையிராமன்
சேட்டினம் பரிதி தாழு மணிமதிலேயோத்தி சேர்ந்தான்”

“பூதலத்து அரசை எல்லாம் பொன்றுவித்தனை என்ருலும்
வேதவித்து ஆய மேலோன் மைந்தன் நீ விரதம் பூண்டாய்
ஆதலின் கொல்லல் ஆகாது அம்பு இது பிழைப்பது அன்ருல்
யாது இதற்கு இலக்கம் ஆவது இயம்புதி விறைவின் என்ருன்
கம்ப: யுத்த 36 பரசுரா 138.4

“எய்த அம்பு இடை பழுது எய்திடாமல், என்
செய் தவம் யாவையும் சிதைக்கவே என,
கைஅவண் நெகிழ்தலும், கணையும் சென்று, அவன்
மைஅறு தவம் எலாம் வாரி மீண்டதே”
கம்ப: பால 39 பரசுராபு 1887

## இலிங்கபுராணம்

“கன்னியந் துழாய்க் கமலலோசனன் தயரதற்கு
நன்றுநன் மகனுகியே வந்தனன் உதித்து
முன்னை யந்தகாரத்தினுல் மூடப் பட்டுத்
தன்னைமாய னென்று அறிந்திடா துறைந்தவர் சார்ந்தே”
இலிங்க: பால. பரசுராம 36

என்று இலிங்கபுராணம் பேசும்,

இலிங்கபுராணம் கூறும் “பின்னை மாயனென்றறிந்திடாத” இராமனைக் குறித்த இக்கருத்து கம்பராமாயணத்தில் அப்படியே இடம்பெற்றுள்ளது.

இதனை இராமன் வருணன் மேல் சதுமுகன் படையை ஏவிய தும் அஞ்சி வெளிப்போந்த வருணன் இராமனைத் துதித்து அவன் திருவடியில் விழுந்து வணங்கி,

“அன்னை நீ, அத்தன் நீயே, அல்லவை எல்லாம் நீயே
பின்னும் நீ, முன்னும் நீயே, பேறும் நீ இழவும் நீயே

என்னை நீ இகழ்ந்தது என்றது எங்ஙனே? ஈசன் ஆய
உன்னை நீ உணராய் நாயேன் எங்ஙனம் உணர்வேன்,
உன்னை?''

கம்ப: யுத்த. வருணன் அடைக்கல 9:6789.

என்று கூறுவதால் உணரலாம்.

## ஸ்காந்த புராணம்

''விராதன் ஜானகியைப் பார்த்து, இவளே பராசக்தி. இவளே மோட்சத்திற்குக் காரணம். இவளுடைய தரிசனம் இன்று எனக்குப் பூர்வ புண்ணியவசத்தால் கிடைத்தது இவளை உபாசித்து முக்தியடைவேன்'' என்றும் ''மகாலட்சுமியின் தரிசனம் கிடைத்தவுடன் அகண்ட சைதன்ய ஸ்வரூபியான சீதையை எடுத்துப்போனான்'' என்று ஸ்கந்த புராணம் கூறும்.

இங்கு அவன் காமம் காரணமாக எடுத்துப் போகாமல் வீடு பேறு காரணமாக எடுத்துப்போனான் என்று பேசப்படுகிறது. இக் கருத்து கம்பரில் காணப்படுகிறது. ஆனால் சீதையை விராதன் எடுத்துச் செல்ல இராம இலக்குவர்கள் அவனைத் தடுக்க அவளை விடுத்து இராமனையும் இலக்வனையும் தூக்கிச் சென்றபோது அவர்கள் பாதம் பட்டு மெய்யுணர்வு தலைப்பட்டான் என்று பேசப்படுகிறது.

'துண்ட நின்ற தொன்மைதான்
வேண்ட நின்ற வேதநூல்
பூண்ட நின்ற பொலம் கொள் தாள்
தீண்ட இன்று தேறினேன்

கம்ப : விராதன் : வதைப்படலம் : 67

இராமனுடைய பாணம் ஏழு பர்வதங்களையும் ஏழு ஆச்சா மரங்களையும் ஏழு லோகங்களையும் அதிவேகமாய்த் துளைத்து அம்பரையில் புகுந்தது.

'ஸ்காந்தத்தில்' கூறிய வண்ணம் ஏழு மராமரத்தைத் துளைத்த இராமனுடைய அம்பு கம்பராமாயணத்தில் ஏழு மராமரங் களை உருவிக் கீழ்உலகம் ஏழும் உருவி அதற்குப்பின் ஏழு என்ற ஒன்று இலாமையால் மீண்டு வந்தது என்றும், ஏழு எனப்பட்ட ஏழு கடல்களும், ஏழு உலகங்களும், ஏழு குன்றங்களும், ஏழு ரிஷிகளும் ஏழு புரவிகளும், ஏழு மங்கையரும், தாங்களும் ஏழாக இருப்பதால்

---

* இராமபிரான் அவதரித்த அத்தியாயம் கூர்மபுராணம் 21 : 110 111 112

இராமபாணம் தங்களையும், ஏழு மரத்தையும் ஏழு உலகத்தையும் துளைத்தது போலத் துளைக்குமோ என்று அஞ்சி நடுங்கினர் என்பதைக் கம்பர்.

"ஏழு மராமரம் உருவி, கீழ் உலகம்-என்றிசைக்கும்
ஏழு ஊடு-புக்குருவி, பின் உடன் அடுத்தியன்ற
ஏழிலாமையால் மீண்டது அவ்விராகவன்-பகழி
ஏழு கண்டபின், உருவுமால், ஒழிவது இன்று இன்னும்"

ஏழு வேலையும் உலகம் மேல் உயர்ந்தன ஏழும்
ஏழு குறன்மும் இருடிகள் எழுவரும், புரவி
ஏழும் மங்கையர் எழுவரும். நடுங்கினர் என்ப
"ஏழு பெற்றதோ இக்கணைக்கு இலக்கம்?" என்று எண்ணி"

கம்ப. மாராமரப்படலம் 16-17

இதுபோன்ற கருத்து வான்மீகத்தில் காணப்பெறவில்லை. அங்கு, "பவானாகிய அவரால் பொற்கட்டுகள் உள்ள அந்தப் பாணமானது ஏழு ஆச்சாமரங்களைப் பிளந்துகொண்டு மலைத் தாழ்வாயில் பூமிக்குள் புகுந்துவிட்டது காண்" என்று பேசப் பெற்றுள்ளது

"மகாவேகமுற்ற அது புகுந்து ஒரு நொடிப் பொழுதில் பூமியைப் பிளந்துவிட்டு தட்சணமே வெளிவந்து முன்போலவே தனது அம்பறாத்தூணியை வந்தடைந்துவிட்டது"

வான்மீகம். கிஷ் காண் ஸர்க்கம் 1:117

"ஏழு ஆச்சாமரங்களும் சக்கரகாரமாய் ஒரு சர்ப்பத்தின் மேல் வளர்ந்திருந்தன. இராமன் அந்த ரகசியத்தை அறிந்து பக்கத்திலிருந்த லட்சுமணனுடைய பாதத்தில் தன் கட்டை விரலால் அழுத்தினான். லட்சுமணன் ஆதி சேடனாதலால் அவருடைய அம்சமான அந்த சர்ப்பமும் நேராக நின்றது. அதன் மேலிருந்த மரங்களும் ஒரே வரிசையாய்க் காணப்பட்டன."

கம்பராமாயணத்தில் மராமரங்கள் ஏழின் பெரிய வடிவத்தை வருணிக்கப்புகுந்த கம்பர் அவற்றின் அடிப்பகுதி குறித்துப் பேசும் போது அவற்றின் வேர்கள் ஆதிசேடன் தலைமுடிகளின் கீழும் புகுந்து போயுள்ளன என்று கூறுகிறார்.

"தெள்ளு நீரிடைக் கிடந்தபார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படம் குடைந்து கீழ்போகிய வேர"

கம்ப. மராமரப்படலம்: 10

என்று கூறிப்பிடுகின்றார். இங்கு ஆதிசேடன் மீது அம்மரங்கள் இருந்த செய்தி கிடைக்கிறது. "ஸ்கந்த"புராணத்தில் வட்டமாகக் கிடந்தபாம்பின் மீது முளைத்திருந்தன என்கிறார். இவை ஏழும் பூமியைத் தாங்குகின்ற அவருடைய பரந்துபட்ட தலையில் முளைத் திருந்தன எனக் கூறுகின்றார்.

காந்தத்தில், சக்கரகாரமாய் முளைத்திருந்த மரங்களை ஓர் அம்பில் துளைப்பதற்கு இயலாதிருந்ததைக் கண்டு இராமன் சற்று சிந்தித்து, அவை ஆதிசேடன் மீது முளைந்திருப்பதாக உணர்ந்து, ஆதிசேடன் கூறான இலக்குவன் தன் பக்கலில் நிற்பதைக் கண்டு, அவன் காலை மிதிப்ப அந்த ஆதிசேடன் நேராக நீண்டு கொடுக்க இராமன் அம்பு எய்தான் என்று ஒரு குறிப்பு இருக்கிறது.

கம்பராமாயணத்தில் மரங்கள் எப்படி முளைத்திருந்தன என்பதற்கும், இலக்குவன் காலை மிதித்தபிறகு அவை ஒரு நேர் கோட்டிற்கு வந்தன என்பதற்கும் உரிய குறிப்பில்லை. இராமனுடைய அத்திர ஆற்றல் எப்படி இருப்பினும் அவை அப்படியே இருக்க அவன் நினைத்த எண்ணம் மந்திர ஆற்றலால் எதுவும் செய்ய வல்லதாகலின் இலக்குவன் மிதித்தான் என்ற கூற்றிற்கும், மரங்கள் நேர் நின்றன என்ற கூற்றிற்கும் இடமில்லை. ஆனால் இலக்குவன் ஆதிசேடன் என்பதற்குரிய குறிப்புண்டு.

"வளையொடு திகிரியும், வடவை தீதற
விளைதரு கடுவுடை விரிகொள்பாயலும்
இளையவர்கள் என அடிபரவ ஏகி, நாம்,
வளை மதில் அயோத்தியில் வருதும் என்றனன்,

கம்ப. பாலகாண்டம். திரு அவதாரப்படலம் : 20

"கண்ணின் கடை தீ உக நெற்றியில் கற்றை நாற
விண்ணில் சுடரும் கெட மெய்யினில் நீர் வியர்ப்ப
உள் நிற்கும் உயிர்ப்பெனும் ஊதை பிறங்க நின்ற
அண்ணல் பெரியோன் தன் ஆதியின் மூர்த்தியொத்தான்"

கம்ப. நகர் நீங்கு படலம் 112

"அன்னவர்க்கிளவல் தன்னை அருமறைப் பரமென்றுதும்
நன்நிலை நின்று தீர்ந்து நவையறுபொருள் தோறும்
தொன்னிலை பிரிந்தான் என்னப் பலவகை நின்றநாயேன்
இன்னணை யென்ன யாரும் இயம்புவர் ஏதியாதோ"

கம்ப. ஒற்றுக்கேள்விப் படலம்-76

வான்மீகத்தில் ஆதிசேடன் மீது மரங்கள் முளைந்திருந்த குறிப்பில்லை. ஆனால் கம்பர் இலக்குவனை ஆதிசேடனின் கூறு என்று கூறத்தவறவில்லை.

பம்பையைப் பார்த்ததும் இராமனுக்கு விரகதாபம் வந்ததாகப் பல புராணங்களும் பல இராமாயணங்களும் சொல்ல 'ஸ்காந்தம்' மாறுபடும்.

காந்தத்தில், இராமன் தனக்கு விரகதாபம் உண்டு பண்ணிய வண்டு முதலிய ஜந்துக்களிடத்தில் கோபம் கொண்டார் என்றும், வண்டு ஞாழலைக்கண்டு வெறுப்படைய வேண்டுமென்றும், சக்கரவாகம் இரவில் இணையைப் பிரிந்திருக்க வேண்டுமென்றும், குயில் வேறு பறவையால் வளர்க்கப் பெறவேண்டும் என்றும் சந்தன மரத்தில் சர்ப்பங்கள் வசிக்க வேண்டுமென்றும் சபித்தார். *

கம்பராமாயணத்தில் இராமனுக்கு விரகதாபம் ஒன்று இருப்பதற்கு வாய்ப்பில்லை. காரணம் அவன் தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கும் தவம் மேற்கொண்டு புண்ணியத்துறைகள் ஆடி ஏழிரண்டு ஆண்டில் மீள்வதற்கு வந்தான். இந்தத்தவசிக்குச் சீதை உடனிருந்தாலும் விரகமிருத்தற்கு வாய்ப்பில்லை. இதனால் தான் கம்பர் சீதையும் இராமனும் தர்ப்பைப்புல் படுக்கையில் ஒன்றாகப் படுத்திருந்தனர் என்றும் (அஃதாவது தருப்பை தூய்மையான பொருள் *) அவர்களை இரவில் இமைகொட்டாது பார்த்து இலக்குவன் காத்தான் என்றும் பேசுகின்றார். இவ்வாறு மனைவியோடு உடனுறை காலத்துப் பிறவாத காமம் பம்பை நதியைப் பார்த்ததும் பிறந்தது என்று கூறுவது பொருந்தாது. இராமன் துன்புறுவதாகக் கம்பர் பாடுவதெல்லாம், இராவணன் வஞ்சித்துக் கொண்டான் என்ற சினத்தால் பிறந்த அவலமாகும். இவ்வாறு கம்பர் பாடக்காரணம் காந்தத்தில் இராமன் பம்பை நதிக்கரையில் இயற்கையாகக் காமுறுகின்ற வண்டு, பறவை முதலிய வற்றைக் கண்டு சபிப்பதுபோலக் கூறுங் குறிப்பிருப்பதும் ஒரு காரணமாகும்.

---

* உயிர் பிரிந்த பின் தருப்பை பரப்பி அதன் மீது உடல் கிடத்தும் வழக்கம் இன்றும் உண்டு. காரணம் அது தூயது என்ற கருத்தாலாகும். தென்புலத்தார்க்குக் கடன் கழிப்போர்கூட தருப்பை இட்டு அதன் மீது அமர்ந்து கடனாற்றலைக் காணலாம். புறநானூற்றில் குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும் அதனை ஆள் அன்று என்று கருதாது தருப்பையைப்பரப்பி அதன் மீது கிடத்தி வாளோச்சி ஏறுண்டாக்கிப் புதைத்தலோ, எரித்தலோ செய்யும் வழக்கமுடைமையைக் காணலாம். புறம். ௯௩

---

* (டிகா சிரோன்மணி)

# ஸ்ரீ மஹா பாரதம்

**ராமோபாக்யான பர்வம் 275ஆவது அத்யாயம்**
(ஸ்ரீ உ வே. டி. வி. ஸ்ரீநிவாஸாசார்யர் மொழிபெயர்ப்பு)

மார்க்கண்டேயர் யுதிஷ்டிரரைக் குறித்து ராமோபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கியதும், ராமர் முதலியவர்களுடைய அவதாரத்தையும், ராவணனுடைய உற்பத்தியையும் கூறுமுறையில் குபேரனுடைய உற்பத்தியும் — கூறுகின்றார்.

மார்க்கண்டேயர் "பரதஸ்ரேஷ்டனே, ராமரால் நிகரில்லாத துக்கம் அடையப்பட்டது. அவருடைய பார்யையான ஜானகியானவள், மிக்க பலசாலியும் கெட்ட எண்ணமுள்ளவனும் ராக்ஷசர்களுக்கு அரசனுமான ராவணனென்கிற ராக்ஷஸனால் மாயையைக் கைக்கொண்டு பலத்தினால் ஜடாயுவென்கிற கழுகைக் கொன்று ஆஸ்ரமத்திலிருந்து அபஹரிக்கப்பட்டாள். ராமர் சுக்கிரீவனுடைய பலத்தை அடுத்துக் கடலுக்கு அணைகட்டிக் கூர்மையுள்ள பாணங்களால் லங்கையை எரித்து அவளை மீட்டுக்கொண்டு வந்தார்" என்று சொன்னார்.

இவ்வாறு மார்க்கண்டேயர் யுதிஷ்டிரருக்கு இராமகாதையைச் சுருக்கமாகச் சொன்னதும் அவர் அதனை விரிவாக அறியவேண்டிப் பல கேள்விகளைக் கேட்க அவர் விரித்துரைக்கின்றார். *

இக்குவாகு குலத்தில் தயரதனுக்கு இராமன் முதலியோர் பிறந்ததையும், விதேக தேசத்து ஜனகனுக்குச் சீதை மகளாய் வாய்த்ததையும் கூறுகின்றார். பின்னர்த்தொடர்ந்து இராவணனுடைய பிறப்பைக் கூறும்போது, பிரம்மதேவர் ராவணனுக்கு நேரே பாட்டனார். அந்தப் பிரம்மதேவருக்குப் புலஸ்த்யரென்கிற அன்புள்ள புத்திரர் மனத்திலிருந்து உண்டானார். அவருக்குக் 'கோ' என்கிற பார்யையினிடத்தில் வைஸ்ரவணனென்கிற பிரபுவான புத்திரன் பிறந்தான். அவன் பிதாவை விட்டுவிட்டுப் பிரம்ம

---

* வான்மீகர் இராமாயணத்தொடக்கத்திலும் நாரதமுனிவர் இராமாயணத்தைச் சுருக்கிக்கூற அவர் விரித்துரைக்க வேண்டியதையும் பிரமனருளால் கதையறிந்து விரிவாக்கியதையும் காணலாம்.

தேவரான பிதாமஹரை அடைந்தான். அரசனே, பிதாவான புலஸ்தியர் வைஸ்ரவணன் மீதுண்டான கோபத்தால் தம் ஸ்வரூபத்தை யோகபலத்தால் விஸ்ரவஸென்கிற வேறு தேகமாகப் படைத்தார். அந்தப் புலஸ்தியருடைய சரீரத்தின் பாதியினால் வைஸ்ரவணன்மீதுண்டான கோபத்தைத் தீர்ப்பதற்காகக் கோபத்துடன் கூடின அந்த விஸ்ரவஸென்கிற பிராம்மணர் உண்டானார். பிரபுவான பிதாமஹரோ ப்ரீதியுள்ள மனத்துடன் வைஸ்ரவணனுக்கு அமரத்தன்மையையும் தனங்களுக்கு ஈஸ்வரனாக இருத்தலையும், லோகபாலனாக இருத்தலையும், ஈஸ்வரரோடு நட்பையும், நளகூபரனென்கிற புத்திரனையும், ராக்ஷஸர்களுடைய கணங்களோடு கூடிய லங்கை என்கிற ராஜதானியையும், நினைத்த வண்ணம் செல்லுகின்ற புஷ்பகமென்கிற விமானத்தையும், யக்ஷர்களுக்கு அதிபதியாக இருத்தலையும், அரசர்களுக்கு அரசனாக இருக்கும் பெரும்பதத்தையும் கொடுத்தார்.

கைகயி என்ற ஒருத்திக்கே இராவணன், கும்பகருணன், சூர்ப்பணகை, வீடணன் என்ற நால்வரும் பிறந்தார் என்று தமிழ் உத்தரகாண்டமும் வான்மீகமும் கூறும். ஆனால் பாரதம் புஷ்போத்கடை, இராகை, மாலினி என்ற மூவர்க்கும் நால்வர் பிறந்தார்கள் என்று கூறும்.

276 ஆவது அத்தியாயத்தில் இராவணன், கும்பகர்ணன் முதலியோருடைய பிறப்பைக் கூறும்போது அந்த ராஜராஜனான நரவாஹனன் லங்கையில் வாஸம் செய்தான். அவன் பிதாவுக்கு மூன்று ராக்ஷஸஸ்தீரிகளை வேலைக்காரிகளாகக் கொடுத்தான். பரத ஸ்ரேஷ்டனே! ஆடுவதிலும் பாடுவதிலும் வல்லவர்களான அவர்கள் எப்பொழுதும் மகாத்மாவான அந்த விஸ்ரவஸ்ரிஷியை ஸந்தோஷமடையச் செய்வதற்கு முயன்றார்கள். பிரஜைகளுக்கு அதிபதியே, அரசனே, அழகிய இடையுள்ளவர்களான புஷ்போத்கடையும், ராகையும், மாலினியும் அன்யோன்யமாக போட்டியோடு நன்மையை அடைவதில் விருப்பமுள்ளவர்களாக ரிஷிக்குப் பணிவிடை செய்துவந்தார்கள். மகாத்மாவும் பகவானுமான அந்த விஸ்ரவஸானவர் அவர்களிடம் ஸந்தோஷமடைந்து ஒவ்வொருத்திக்கும் அவளவள் விரும்பினவண்ணம் லோகபாலகர்களுக்கு ஒப்பான புத்திரர்களை வரன்களாகக் கொடுத்தார். புஷ்போத்கடையினிடம் ராக்ஷஸர்களுக்கு ஈஸ்வரர்களும் பூமியில் பலத்தாலொப்பவர்களுமான தசக்ரீவன், கும்பகர்ணன் என்கிற இரண்டு புத்திரர்கள் உண்டானார்கள். மாலினியானவள் விபீஷணனென்கிற ஒரு புத்திரனை ஈன்றாள். ராகையினிடத்தில் கரன் சூர்ப்பணகை

என்கிற ஒரு ஆணும், பெண்ணும் உண்டாயினர். இச்செய்தி வான்மீகத்திலும் தமிழ் உத்தரகாண்டத்திலும் மாறுபடுகிறது.

சுமாலி என்பான் தன் மகள் கைகயி என்பாளுக்கு விஸ்ரவசு என்ற முனிவன் வழி மகப்பேறு வாய்த்தால் அவர்கள் பேராற்றல் படைத்தவர்களாக இருப்பார்கள் என்று கருதி அவளை அவனிடம் போக்குகின்றான். கைகயிக்கு அம்முனிவன் வழி இராவணன், கும்பகர்ணன், சூர்ப்பணகை, வீடணன் என்ற நால்வரும் பிறந்த செய்தியை,

''இத்தத்துவங்கள் உரைத்தமுனி இரவிகுட பாற்றிசை வீழும்
அந்திப் பொழுதில் ஆங்கவளை அன்பான் இசைவின்படி அணையப்
பத்துத்தலையும் பத்திரட்டி தோளும் பாரெடுக்கும்
சத்திக்கிரியான் தசக்ரிவன் தான் வந்துதித்தான் தரைநடுங்க
(உத். . வரையெடுத்த படலம் 13)

''நறையார் குழலாள் தன் வயிற்றின் ஞாலமடங்க விழுங்கிடினும்
நிறையா வயிற்றின் நெடுவரைப்போல் நீண்ட உருவம்நிமிர்கையன்
பிறையார் எயிற்றுப் பிலவாயன் பெருத்தவிழியன் ஒருக்காலும்
குறையாது எழும் வெம்பசிபினெடும் கும்பகர்ணன் பிறந்தனனல் ''
(கம்ப. உத்த. வரைஎடு 14)

''பண்ணார் மொழியாளவள் வயிற்றில் பருத்த இடையும்
பருங்கழுத்தும்
விண்ணார் மேகத்து இடியென்ன வெடித்த குரலும்
உடையாளாய்க்
கண்ணார் புகையும் கனலும் எழக் கனன்று காலன்
கருக்குலையப்
பெண்ணாய்ப் பிறந்தாள் எனவந்து பிறந்தாள் பெரிய
சூர்ப்பணகை ''
(கம்ப. உத்த. வரைஎடு 15)

'' மன்னுதவத்துப் புலத்தியன் தன் மரபு விளங்க மறைவிளங்கத்
✓ தன்னேரில்லாத் தந்தைக்குத் தக்க மகவாய்ச் சண்டாளர்
அன்னோர் முன்னோர் அவருதித்த அந்த வயிறு சுத்த முற
மின்னேர் இடையாள் தன் வயிற்றில் விளங்கும்புகழ்
வீடணன் பிறந்தான் ''
(கம்ப. உத். வரைஎடு 16)

என்று தமிழ் உத்தரகாண்டம் கூறுகின்றது.

276 ஆவது அத்யாயத்தில் இராவணன் கும்பகர்ணன் வீடணன் முதலியோர் தவம் செய்து வரம் பெற்ற செய்தியைப் பிரம்மதேவர் தாமே அவர்களிடம் சென்று அவர்கள் அனைவருக்கும் வரங்கொடுப்பதாகத் தனித்தனி ஆசைகாட்டித் தவத்தினின்று தடுத்தார். பிரம்மா, "அருமையான புத்திரர்களே, உங்கள் விஷயத்தில் நான் ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன். திரும்புங்கள். வரங்களைக் கேளுங்கள் சாகாமலிருப்ப தொன்றைத் தவிர, எது எது இஷ்டமோ அதுஅது அப்படி அப்படியே உண்டாகட்டும். பெரிய பதத்தை அடையவேண்டுமென்கிற எண்ணத்தால் எந்த எந்தத் தலையானது அக்னியில் ஹோமம் செய்யப்பட்டதோ அந்த அந்தத் தலை முழுமையும் அப்படியே உன்னுடைய தேகத்தில் உன் னிஷ்டப்படி உண்டாகும். உன் தேகத்தில் விகாரமும் உண்டாகாது. நினைத்தவண்ணம் ரூபங்களைத் தரிப்பவனாய் யுத்தத்தில் சத்துருக்களை ஜெயிப்பாய். ஸம்சயமில்லை" என்று சொன்னார். இராவணன் "கந்தர்வர்கள், தேவர்கள், அசுரர்கள் யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், நாகர்கள், கின்னரர்கள், பூதங்கள் இவர்களிடத்திலிருந்து எனக்கு அவமானம் உண்டாகக்கூடாது" என்று வேண்டினான்.

பிரம்மதேவர், "உன்னால் சொல்லப்பட்ட கந்தர்வர்கள் முதலான இந்த வீரர்களனைவரிடத்தினின்றும் உனக்குப் பயம் இல்லை. மனிதனைத் தவிர மற்றவர்களிடத்தினின்று உனக்கு நன்மையுண்டாகும். என்னால் அது அவ்வாறு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது." என்று கூறினார்.

பாரதத்தில் குறிப்பிட்ட இந்த வரலாற்றிற்கும் வான்மீகம், தமிழ் உத்தரகாண்டம் இவற்றில் கூறிய செய்திக்கும் மாறுபாடுண்டு. பிரம்மன் "சாகாமல் இருப்பது ஒன்றைத்தவிர எதுஎது இஷ்டமோ அது அது அப்படி அப்படியே உண்டாகட்டும்" என்ற செய்தியும், நினைத்த வண்ணம் ரூபங்களைத் தரிப்பவன் ஆவாய்" என்ற செய்தியும் "மனிதனைத் தவிர மற்றவர்களிடத்தில் உனக்கு நன்மை உண்டாகும்" என்று கூறிய செய்தியும் அங்கில்லை.

வீடணன் வரம்பெற்ற செய்தியிலும் மாறுபாடு உண்டு. "விபீஷணனை அடைந்து "புத்ர, நீ வரத்தைக்கேள். ப்ரீதியுள்ளவனாக இருக்கிறேன்" என்று அடிக்கடி சொன்னார். விபீஷணன், "அதிகமான ஆபத்தை அடைந்திருந்தபோதிலும் என் புத்தியானது அதர்மத்தில் செல்லவேண்டாம், பகவானே, குருவின் உபதேசமில்லாமலே பிரம்மாஸ்திரமானது எனக்குத் தோற்றவேண்டும்" என்று கேட்டுக்கொண்டான். பிரம்மா, "சத்துருக்களை நாசம்

செய்பவனே, ராக்ஷஸ ஜாதியில் பிறந்திருந்தாலும் உன்னால் அதர்மத்தில் புத்தியானது வைக்கப்படவில்லையாதலால் உனக்கு மரணமில்லாமையைக் கொடுத்தேன்'' என்றார்.

வீடணன் உபதேசம் இல்லாமலே பிரம்மாத்திரமானது தனக்குத் தோன்றவேண்டும் என்ற செய்தியும், ''மரணமில்லாமையை உனக்குக் கொடுத்தேன்'' என்ற செய்தியும், தமிழ் உத்திர காண்டம், வான்மீகம் இவற்றில் இல்லை.

இராவணன் அந்த வைஸ்ரவணனுடைய புஷ்பக விமானத்தையும் பலாத்காரத்தால் கைப்பற்றிக்கொண்டான். அந்தக்குபேரன் அவனை நோக்கி, "இந்த விமானம் உன்னைச் சுமக்காது. எவன் உன்னை யுத்தத்தில் கொல்லுவானோ அவனையே இந்த விமானம் சுமக்கும். மேலும் குருவையும், என்னையும் அவமதித்ததனால் நீ விரைவாக நாசமடைவாய்'' என்று சபித்தான்.

இராவணன் கந்தமாதனத்தில் வாழ்ந்த குபேரனிடம் சென்று அவனுடைய புஷ்பகத்தை வலிந்து கவர்ந்தபோது "இந்தவிமானம் உன்னைச் சுமக்காது'' என்று சபித்த செய்தி தமிழ் உத்தர காண்டத்தில் மாறுபட்டுள்ளது.

அக்னி, ''மகா பலசாலியும் விஸ்ரவஸின் புத்திரனுமான தசக்ரீவன் முற்காலத்தில் பகவானாகத் தேவரீரால் வரதானத்தால் கொல்லத் தகாதவனாகச் செய்யப்பட்டான். மகாபலசாலியான அந்தத் தசக்ரீவன் எல்லாப் பிரஜைகளையும் பலவிதங்களால் துன்பம் செய்கிறான். பகவானான தேவரீர் எங்களை அவனிடமிருந்து காப்பாற்றவேண்டும். வேறு காப்பவன் இல்லையன்றோ? " என்று சொன்னான் பிரம்மா "அக்னியே, அந்த ராவணன் தேவர்களாலும் அஸுரர்களாலும் யுத்தத்தில் ஜயிக்கப்படுவதற்கு முடியாதவன். அந்த விஷயத்தில் நான் செய்யவேண்டியதைச் செய்துவிட்டேன். அந்தத்தசக்ரீவனுக்கு மரணம் நெருங்கி விட்டது. அதற்காக என்னுடைய தூண்டுதலால், நான்கு புஜங்களுள்ளவரும் பகைவரைக் கொல்பவர்களுள் சிறந்தவருமான அந்த விஷ்ணுவானவர் அவதரித்திருக்கிறார் அவர் அந்தக்காரியத்தைச் செய்வார்'' என்று கூறினார். பிறகு பிதாமஹர் அந்தத் தேவர்களுடைய முன்னிலையில் இந்திரனைப் பார்த்து, ''எல்லாத் தேவகணங்களோடும் நீ பூமியில் பிறப்பாயாக பெண்கரடிகளிடமும் எல்லாப் பெண்குரங்குகளிடமும் நினைத்தவண்ணம் உருவத்தை எடுப்பவர்களும் நல்ல பலத்துடன் கூடினவர்களும் வீரர்களுமான புத்திரர்களை விஷ்ணுவுக்கு ஸஹாயர்களாக உண்டுபண்ணுங்கள்'' என்று கட்டளையிட்டார். (277 ஆம் அத்தியாயம்)

இச்செய்தி கம்பரிலும் வான்மீகத்திலும் வேறுபட்டுள்ளது. பிரம்மனிடம் அக்னி அரக்கர் கொடுமை கூறி அதனைப் போக்குமாறு வேண்ட அவர், தம்முடைய தூண்டுதலால் விஷ்ணு அவதரிக்கப் போகிறார் என்றும் அதுபற்றித்தான் செய்யவேண்டியதைச் செய்துவிட்டதாகவும், இந்திரனை நோக்கித் தேவகணங்கள் எல்லாருமாகச் சென்று பெண் கரடிகளிடமும், பெண்குரங்குகளிடமும் புத்திரர்களை உண்டாக்கி விஷ்ணுவுக்குச் சகாயம் செய்யுமாறும் கூறிய இச்செய்தி மாறுபட்டுள்ளது.

கம்பர், பிரம்மன் முதலியோர் திருமாலிடம் சென்று முறையிட அவர் தாம் பிறந்து இடுக்கண் தீர்ப்பதாகவும்,

"வான் உளோர் அனைவரும் வானரங்களாய்
கானினும் வரையினும் கடிதடத்தினும்
சேனையோடு அவதரித்திடுமின் சென்று என
ஆனனம் மலர்ந்தனன் அருளின் ஆழியான்"

கம்ப பால திரு அவ 20

என்று எல்லோரும் பூமியில் பிறக்குமாறு பணித்ததாகவும் கூறுவர்.

பக்தர்களுக்கு வரன்களைக் கொடுக்கிற பிரம்மதேவர், அவர்களுடைய முன்னிலையில் துந்துபி என்கிற கந்தவர் ஸ்த்ரீயைப் பார்த்து நீ தேவ கார்யஸித்தியின் பொருட்டுப்போ' என்றுகட்டளையிட்டார். பிதாமஹருடைய சொல்லைக்கேட்டுப் பிறகு துந்துபி என்கிற கந்தர்வஸ்த்ரீயானவள் அப்பொழுது மானிடவுலகத்தில் மந்தரை என்கிற கூனியாகப் பிறந்தாள்

துந்துபி என்கிற கந்தர்வப்பெண் மந்தரை என்ற பெயரில் கூனியாகப்பிறந்து தேவகாரியத்தை முடிக்குமாறு பிரமன் அனுப்பிய செய்தி கம்பரிலும் வான்மீகத்திலும் இல்லை. ஆனால் கைகேயியின் தோழியாக இருந்த மந்தரை இராமன்பால் பகைமையுடையாள் போன்ற மனத்தாளாகிச் சூழ்ச்சி செய்ததாகக் கூறுவர்.

"இராமனுடைய பட்டாபிஷேகத்துக்காக எந்த ஸாமக்ரியைகள் உம்மால் சேகரிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகள் பரதனுடையதாக வேண்டும். இராமன் வனம் செல்லவேண்டும். இராமன் மரவுரியையும் மான்தோலையும் உடுத்துச் சடைதரித்துத் தாபஸவேஷம் பூண்டு பதினான்கு வருஷகாலம் தண்டகாரண்யத்தை அடைந்திருக்க வேண்டும்" என்று சொன்னாள். "பரதஸ்ரேஷ்டனே, அந்த அரசன் அப்ரியமானதும் பயங்கரமாகத் தோன்றியதுமான அந்த வரத்தைக் கேட்டுத் துக்கத்தால் பீடிக்கப்பட்ட

வனாக ஒன்றும் பேசாமலிருந்துவிட்டான். சிறந்த வீர்யமுள்ள இராமர் பிதாவினிடம் கைகேயி அவ்வாறு சொன்னதையறிந்து, 'தர்மாத்மாவான அரசர் சொல் தவறாதவராகட்டும்' என்றெண்ணி வனத்துக்குப் புறப்பட்டார்.

தசரதனிடம் கைகேயி இராமன் பட்டாபிஷேகத்திற்காகச் சேர்த்துவைத்த பொருள்களெல்லாம் தன் மகன் பரதன் பட்டாபிஷேகத்திற்கு ஆகவேண்டுமென்றும், இராமன் பதினான்கு ஆண்டுகட்குக் காடு செல்லவேண்டுமென்றும், வரம்வேண்ட, அது கேட்ட தயரதன் வருத்தம் மிகுதியால் வாய்வாளாதிருந்திட அச்செய்தியை அறிந்த இராமன் தானே காட்டிற்குச் சென்றதாகவும் கூறும் இச்செய்தி கம்பரிலும் வான்மீகத்திலும் மாறுபட்டுள்ளது.

கம்பர், பரதன் பாட்டன் வீட்டிற்குச் சென்றதாகவும் அப்போது வரம் பெற்றதாகவும் தசரதன் இராமனைப் பார்த்துக் கூறுவதற்கு வேறாக, கைகேயியே கூறி ஆணையிட்டாள் என்றும் தயரதன் இறந்தபிறகு, பரதனுக்குச் செய்தி அறிவிக்கப்பட்டது என்றும் கூறுவர்.

"நாரதரே, நீர் உர்முடைய ராஜ்யத்தை அடையக்கடவீர்" என்றும் சொன்னான். அந்த ராமர் அவனுடைய சொல்லைக் கேட்டு அதிக துக்கமுள்ளவராக ஸ்நானம் செய்து தேவனுக்கு ஸமானரான பிதாவுக்கு உத்திரக்கிரியை செய்தார். அப்பொழுது அந்த இராமர் பிதாவினிடம் வாத்ஸல்யமுள்ள பிராதாவான பரதனைப் பார்த்து "பகைவர்களை வாட்டுபவனே, என்னுடைய பாதுகைகள் ராஜ்யத்தை ஆளுகிறவைகளாகும்" என்று சொன்னார். அப்பொழுது பரதன் அந்த ராகவரை நமஸ்கரித்து, "இப்படியே ஆகட்டும்" என்று சொன்னான்.

பாதுகைகளைக் கேட்டுப் பெற்றான் என்பர் கம்பர். தானே கொடுத்தான் என்பர் வியாசர். கம்பர் கூறும் விராதன்வதை முதலிய செய்திகள் பாரதத்தில் இல்லை. ஆனால் சரபங்கர் ஆசிரமம் சென்ற செய்தி கூறப்பட்டுள்ளது.

'அந்த வஸித்துக் கொண்டிருக்கிற அந்த ராமருக்கு ஜனஸ்தானத்தில் வஸிக்கிற கரனோடு பெரிய வைரமானது சூர்ப்பணகையினால் உண்டுபண்ணப்பட்டது. தர்மத்தில் அதிக விருப்பமுள்ள ராகவர், தவசிகளைக் காப்பதற்காகப் பூமியில் பதினாலாயிரம் அரக்கர்களைக் கொன்றார். சிறந்த புத்தியுள்ளவரான ராகவர் மிகுந்த பலசாலிகளான தூஷணனையும் கரனையும் கொன்று மீண்டும் தபோவனங்களைச் ஸுகமுள்ளவையாகச் செய்தார்.'

கம்பரிலும் வான்மீகரிலும் விசுவாமித்திர முனிவன் பின்னே சென்று தாடகையை வதைத்துக் கரன் முதலியோர்களைக் கொன்ற செய்தி, பாரதத்தில் விசுவாமித்திர முனிவர் இல்லாது இராமனே சென்றதாக உள்ளது.

"மாரீசனை அடைவதற்காக உப்பு ஸமுத்திரத்திற்கு மேலே ஆகாயத்தில் எழும்பினான் அவன் த்ரிகூடத்தையும் காலபர்வத்தையும் தாண்டி, மகரங்களுக் கிருப்பிடமானதும் ஆழ்ந்த தண்ணீருள்ளதுமான மஹோததியைக்கண்டான். அவன் அதைத்தாண்டி அதற்கு அப்புறத்திலுள்ள மகாத்மாவான சூலபாணிக்குப்பிரியமான இருப்பிடமாயிருக்கிற கோகர்ணத்தைக் கவலையற்று அடைந்தான்."

இவ்வாறு இராவணன் பல இடங்களைக் கடந்து சென்ற செய்தி வான்மீகத்திலும் கம்பரிலும் இல்லை.

"மூடனே, நீ மனத்தினால் விரும்புகிற இந்த விருப்பம் கைகூடாது. நான் கத்தியை எடுத்துக்கொண்டு என்னை நானே மாய்த்துக்கொள்வேன். மலையின் சிகரத்திலிருந்தாவது விழுவேன், தீயிலாவது புகுவேன். பெண்புலியானது, ஆண் நரிக்குட்டியை அடைவதுபோல நான் பர்த்தாவான ராமரை விட்டு அதமனான உன்னை எவ்விதத்திலும் அடையமாட்டேன். *

இவ்வாறு சீதை கடிந்துரைத்த செய்தி கம்பரில் இல்லை. ஆனால் வான்மீகத்தில் உண்டு.

இராவணன் ஸந்யாஸி வேஷத்தால் மறைக்கப்பட்டவனும், புகழத்தக்கவளான அந்த ஜானகியை அபஹரிக்க எண்ணமுள்ளவனுமாகி அருகில் வந்தான். தர்மங்களை அறிந்தவளான அந்த ஜானகியானவள் வந்திருக்கிற அவனைப்பார்த்து அப்பொழுது பழங்களும் கிழங்குகளுமாகிய உணவுப்பொருள் முதலியவற்றால் அவனுக்கு ஆதித்தியம் செய்தாள். பிறகு காமியான ராக்ஷஸேந்திரன் அவை அனைத்தையும் அலக்ஷியம் செய்து தன்னுடையதான ராக்ஷச உருவத்தை எடுத்துக்கொண்டான்.

இங்கு இராவணன் சந்நியாசி வேடத்தில் சென்று பின் தன் அரக்க வடிவத்தைத்தானே எடுத்துக்கொண்ட செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது.

---

* 279-ஆவது அத்தியாயம்.

பயங்கரமான குரலால் வெருட்டிப் பிரக்ஞையை இழந்தவளான ஜானகியைத் தலைமயிர்களில் பிடித்தான். பிறகு ஆகாயமார்க்கத்தில் செல்வதற்கு ஆரம்பித்தான். இராவணன் சீதையைத் தலைமயிரைப் பிடித்துத் தூக்கிச் சென்றதாகக் கூறும் செய்தி கம்பரில் இல்லை. வான்மீகத்தில் உண்டு.

கழுகுகளுக்கு அரசனும், மகாவீரனும், ஸம்பாதிக்கு ஸகோதரனும்,அருணனுக்குக் குமாரனுமான ஜடாயுவானவன் தசரதனுக்கு நண்பனாக இருந்தான். அவன் அப்பொழுது ராவணனுடைய மடியை அடைந்திருப்பவளும் (தசரதனுடைய தோழமையால் தனக்கு)மருமகளுமான ஸீதையைக் கண்டான். பக்ஷிராஜன் கோபத்துடன் கூடியவனாக ராக்ஷஸேஸ்வரனான ராவணனை எதிர்த்து விரைவாகச் சென்றான். பிறகு கழுகுகளுக்கரசனான ஜடாயு, அந்த ராவணனைப் பார்த்து, "ராக்ஷஸ, மைதிலியை விடு, விடு. நான் உயிரோடிருக்கையில் நீ எப்படிச் ஸீதையை அபஹரிப்பாய்? மைதிலியை விடாமல் போவாயாகில் நீ உயிரோடு என்னிடமிருந்து விடுபடமாட்டாய்" என்று சொன்னான். இவ்வாறு சொல்லிவிட்டு சிறகுகளின் அடிகளாலும், மூக்கின் குத்துக்களாலும் பலமுறை காயப்படுத்தப்பட்ட அந்த ராக்ஷஸராஜனை நகங்களால் அதிகமாகக் கிழித்தான். ராமருக்கு ப்ரியத்தையும் ஹிதத்தையும் விரும்புகிற ஜடாயுவினால் அடிக்கப்படுகின்ற அந்த ராவணன், மலையானது அருவிகளைப் பெருக்குவதுபோல இரத்தத்தை அதிகமாகப் பெருக்கினான். அந்த ராவணன் கத்தியை எடுத்து அந்தப்பறவையினுடைய இரண்டு சிறகுகளையும் வெட்டினான்.

சடாயுவை இராமன் முன்னமே சந்தித்து உறவு கொண்டதாகக் கூறும் கம்பராமாயணச் செய்தி இங்கில்லை. அதற்கு வேறாக இராவணனால் தூக்கிச் செல்லப்பட்ட சீதை அழுகுரலைக் கேட்டுத் தனக்கும் தயரதனுக்கும் இருந்த உறவு முறை கூறித் தகைத்தாகக் கூறும் செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது.

அவள் ஒரு மலையின் சிகரத்தில் ஐந்து வானராதிபதிகளைக் கண்டாள். உதார குணமுள்ள மைதிலியானவள் அந்த இடத்தில் தனது திவ்யமான ஒரு பெரிய வஸ்திரத்தை எறிந்தாள்.

சீதை தன்னிடம் உள்ள அணிகலன்களைத் துணியில் முடிந்து கீழே போட்டதாகவும் அதனை எடுத்து வைத்திருந்த சுக்கீரிவன் அடையாளம் காட்ட இராமனிடம் கொடுத்ததாகவும் கூறுவர்

கம்பர். பாரத இராமாயணத்தில் சீதை 'வஸ்திரம்' எறிந்ததாக வியாசர் கூறுவர்.

கபந்தன் தற்செயலாகக் கையில் லக்ஷ்மணனைப் பிடித்தான்' பரத,பிறகு லக்ஷ்மணன் உடனே துயரமடைந்தான். அந்தக் கபந்தன், ராமரைப் பார்த்துக்கொண்டே லக்ஷ்மணனைத் தன் வாய் இருக்குமிடத்துக்கு இழுத்தான். லக்ஷ்மணன் துயரமடைந்தவனாக ராமரைப் பார்த்து, " என்னுடைய இந்த நிலைமையைப் பாரும். வைதேஹியைப் பிறன் கவர்ந்ததும், என்னுடைய இந்த விபத்தும், உமக்கு அரசாட்சியின்று நழுவுதலும், பிதாவின் மரணமும் எவ்விதம் பொறுக்கத்தக்கவை? வைதேஹியுடன் சேர்ந்து கோசலநாட்டை அடைந்து தகப்பன் பாட்டன்மார்களுடைய பிரஸித்தமான ராஜ்யத்தில் நீர் நிலைத்திருப்பதை நான் பார்க்கப் போகிறதில்லை."

கபந்தன் சீதையைக் கவர்ந்து சென்றதாகக் கம்பர் கூறுவர். இங்கு இலக்குவன் அவனால் கவர்ந்து செல்லப் பெற்றதாகவும் அவன் இராமனை நோக்கிப் பலவாறாகப் புலம்பியதாகவுமுள்ள செய்தி கம்பரில் இல்லை.

அரசரே, நான் விஸ்வாஸு என்கிற கந்தர்வன். பிரம்மன் சாபத்தால் ராக்ஷஸர்களால் அடையப்பட்ட பிறவியை அடைந்தேன். ஸீதையானவள், ராவணனால் கொண்டு போகப்பட்டு லங்கையில் வைக்கப்பட்டிருக்கிறாள். ஸுக்ரீவனை நீர் அடைவீராக. அவன் உமக்கு உதவியைச் செய்வான்.

கபந்தன் தன் சாப வடிவு நீங்கி உண்மை வடிவு பெற்றபின் இராமனை நோக்கிச்சீதை இருக்கும் இடத்தைச் சொல்லிச் சுக்ரீவன் இருக்குமிடத்தைக் கூறி விடைபெறுகின்றான். ஆனால் கம்பரில் கபந்தன் சாபவீடு பெற்றபின் சபரியின் நட்பைக் கொண்டு அவள் வழி இரலை மலையில் வாழும் சுக்கிரீவனோடு நட்பு கொண்டு சீதையைத் தேடிக் கொள்ளுமாறு கூறிப்போகின்றான்

கம்பரில் குறிக்கப்பெற்ற அயோமுகியின் வரலாறு, அவளை இலக்குவன் உறுப்பறை கொண்டது போன்ற செய்திகள் பாரத இராமாயணத்தில் இல்லை. சபரி நிகழ்ச்சியும் பாரதத்தில் இல்லை

வீரர்களான அவ்விருவரும் ஏராளமான கிழங்குகளும் பழந்தரும் மரங்களுமுள்ள ரிசியமூகத்தை அடைந்து மலையுச்சியில் தங்கியிருக்கிற ஐந்து வானரர்களையும் அப்பொழுது பார்த்தார்கள்.

கம்பராமாயணத்தில் இராம இலக்குவர்கள் அனுமன் சுக்கிரீவன் என்ற இரண்டுபேரை மட்டும் பார்த்து நட்புக்கொண்டதாகக்கூற, வியாசர் கூறும் இராமோபாக்கியானத்தில் ஐந்து வானரர்களைக் கண்டதாகப் பேசப்பெற்றுள்ளது.

நீ எல்லாப் பிராணிகளுடைய சப்தத்தையும் அறிந்தவள். புத்தியினால் ஆராய்ந்து பார். எனக்குத் தம்பியென்று சொல்லப்படுகிற இந்த ஸுக்ரீவன் எவனால் துணைவலியுள்ளவனாக வந்திருக்கிறானோ?" என்று வினவினால் சந்திரன் போன்ற ஒளி பொருந்தியவளும் அறிவுடையவளுமான தாரையானவள் ஒரு முகூர்த்த நேரம் ஆலோசித்துத் தன் கணவனைப் பார்த்து, "வானராதிபரே, எல்லாவற்றையும் கேட்பீராக. மனைவியை இழந்தவனும் மகாவீர்யமுள்ளவனும் தசரதனுடைய குமாரனும் வில்லாளியுமான இராமன், ஸுக்ரீவனோடு ஒத்த பகைவரையும் நண்பரையும் அடைந்திருக்கிறான் மகா பாகுபலமுள்ளவனும் பகைவர்களால் ஜயிக்கப்படாதவனும் மேதாவியும் ஸுமித்திரையின் புத்திரனும் இந்த இராமனுக்கு ப்ராதாவுமான லக்ஷ்மணன், இராமனுடைய கார்யத்தின் பயன் கைகூடும் பொருட்டு ஸன்னத்தனாக இருக்கிறான். மயிந்தனும் த்விதனும் வாயுபுத்திரனான ஹனுமானும் கரடிகளுக்கரசனான ஜாம்பவானும் ஸுக்ரீவனுக்கு மந்திரிகளாக இருக்கிறார்கள். இவர்களெல்லாரும் மகாத்மாக்கள், நல்லபுத்தியுள்ளவர்கள், மகாபலசாலிகள் ராமனுடைய வீர்யத்தை அறிந்திருப்பவர்கள். உம்மை அழிப்பதற்குச் ஸாமார்த்யமுள்ளவர்கள்" என்று உரைத்தாள்.

இங்கு தாரை பிராணிகளுடைய சப்தத்தை அறியும் வல்லமை பெற்றவள் என்ற செய்தியும், மயிந்தன் முதலிய நால்வரும் சுக்ரீவனுக்கு அமைச்சர்களாக இருக்கிறார்கள் என்ற செய்தியும் கம்பரில் இல்லை.

தாரை ஒற்றர் வழி சுக்கிரீவன் இராம இலக்குவர்களுடன் நட்புக்கொண்டு வாலியைக் கொல்ல வந்திருப்பதாக அறிந்து கூறினாள் என்பர் கம்பர்.

சுக்கிரீவனைத் தாரை விரும்பினாள் என்று வாலி கடிந்துரைத்ததாகக் கூறும் பாரதச்செய்தி வான்மீகத்தில் உண்டு; கம்பரில் இல்லை.

யுத்தத்தில் அவ்விருவருள்ளும் ஒருவிதமான வேற்றுமையும் காணப்படாமற் போனபொழுது ஹனுமான் சுக்கிரீவனுடைய கழுத்தில் மாலையைப் போட்டார். அப்பொழுது கழுத்தில் மாட்

டப்பட்டிடுக்கிற மாலையும் அந்த வீரன் மேகமாலையினால் சூழப் பட்டதும் மிக்க ஒளிபொருந்தியதுமான மலயமென்கிற பெரியமலை போல விளங்கினான்.

அனுமன் சுக்கிரீவனுக்கு மாலையிட்டு வாலியோடு பொரு தற்குப் போக்கிய செய்தி கம்பரில் சற்று மாறுபட்டுள்ளது.

வாலி கொல்லப்பட்ட பிறகு சுக்கிரீவன், கிஷ்கிந்தையையும் சந்திரனுக்கு சமமான முகமுள்ளவளும் கணவனை யிழந்தவளுமான அந்தத் தாரையையும் அடைந்தான். சிறந்த புத்தியுள்ள ராமரோ சுக்கிரீவனால் பூஜிக்கப்பட்டு மங்களகரமான மால்யவனென்கிற மலையின்மேல் நான்கு மாதகாலம் வாஸம் செய்தார்.

தாரையைச் சுக்கிரீவன் மனைவியாக்கிக்கொண்டான் என்ற செய்தி கம்பரில் நேர்மாறாகக் கூறப்பட்டுள்ளது அங்கு அவள் கைம்மைக்கோலம் பூண்டு வீரபத்தினியாக விளங்கினாள் என்று பேசப்பட்டுள்ளது.

அந்த ஸீதவையானவள், பர்த்தாவை நினைந்து உடம்பு மெலிந்தவளும் தவசி வேஷத்தைத் தரித்தவரும் உபவாஸத்தையும் தவத்தையும் மேற்கொண்டவளும் பழங்களாலும் கிழங்குகளாலும் ஆகாரம் செய்பவளுமாக முனிவர்களின் ஆஸ்ரமம் போன்ற அசோக வனத்தினத்தினருகில் துயரத்துடன் வாஸம் செய்தாள்.

ஸீதை பழம் கிழங்கு முதலியவற்றை உண்டு வாழ்ந்ததாகக் கூறப்பட்ட இச்செய்தி கம்பரில் இல்லை. அங்கு அவள் உண்ணாது, உறங்காது, அழுது, இருந்த இடம் பெயராது இருந்தாள் என்று பேசப்பட்டுள்ளது.

நளகூப சாபத்தால் நீ காப்பாற்றப்பட்டிருக்கிறாய். முற் காலத்தில் இந்தப் பாவியான இராவணன் ரம்பை என்கிற மாதைப் பலாத்கரித்து அனுபவித்ததனால் சபிக்கப்பட்டிருக்கிறானன்றோ ? இந்திரியங்களுக்கு வசப்பட்டவனான இராவணன் வசப்படாத பெண்ணை நெருங்குவதற்குச் சக்தியுள்ளவனாகான். உன்னுடைய பர்த்தா ஸுக்ரீவனால் பாதுகாக்கப் பட்டிருக்கிறானன்றோ ? இந்திரியங்களுக்கு வசப்பட்டவனாகான். உன்னுடைய பர்த்தா ஸுக்ரீவனால் பாதுகாக்கப்பட்டு விரைவாக வரப்போகிறார். லக்ஷ்மணனோடு கூடின புத்திமானான ராமர் உன்னை ஆபத்தி லிருந்து விடுவிப்பார்.

இங்கு திரிசடை சீதையிடம், இராவணன் நளகூப சாபம் பெற்றதால் அவளைத் தீண்டான் என்று கூறிய செய்தி கம்பரில்

இல்லை. கம்பரில் சீதை கனவு கண்டதாகவும் சில உற்பாதங்கள் தனக்கு நிகழ்ந்ததாகவும் திரிசடையிடம் கூற அவள் தான் கண்ட கனவு முதலியவற்றைக் கூறி இராவணன் அழிவும் இராமன் வரவும் நிகழும் என்று ஆறுதல் கூறியதாகக் கூறுவர்

நளகூபன் சாபத்தால் இராவணன் சீதையைத் தீண்டான் என்று திரிசடை கூறியதாக வரும் செய்தி வால்மீகி இராமாயணத்தில் மாறுபட்டுள்ளது. மகாபார்சு என்ற அரக்கன் சீதையை இராவணன் வலிந்து கொள்ளாமலிருப்பதற்குரிய காரணத்தை அவனிடம் கேட்ட பொழுது இராவணன் தனக்குப் பிரம்மன் சாபம் இருப்பதை அவனிடம் கூறியதாகக் கூறும் வான்மீகம்.

அந்த அரக்கனால் இவ்வாறு உரைக்கப்பட்டவளும் அழகிய முகமுள்ளவளுமான வைதேகியானவள் அப்புறம் திரும்பிக்கொண்டு, ஒரு துரும்பை நடுவில் போட்டு, அந்த ராக்ஷஸனை உத்தேசித்துப் பின்வருமாறு உரைக்கலானாள்.

சீதை துரும்பைக்கிள்ளிப்போட்டு இராவணனுக்கு வேறாக நோக்கிக்கூறினாள் என்ற செய்தி கம்பரில் இல்லை. கம்பர் இராவணனைச் சீதை துரும்பாக மதித்துப் பேசினாள் என்று உள்ளது.

"நீ இன்னமும் எமக்கு ஆகாரமாக இருக்கிற மனிதனான ராமனையே அனுசரிக்கிறாய் நான் என்ன செய்யக்கூடும்?" என்று சொன்னான்.

இராவணன் சீதையை நோக்கி மனிதர்கள் தனக்கு உண் பொருளாகும் இயல்பினர் என்று கூறியதாகக் கம்பரில் இல்லை

ராகவரே, அந்த வீடானது மயனென்கிற அஸுரனுடைய தாம். அப்பொழுது அந்த மாளிகையில் பிரபாவதி என்கிற தவப் பெண் தவம் புரிந்து கொண்டிருந்தாள். அவளால் கொடுக்கப்பட்ட போஜனங்களையும் பலவித பானங்களையும் சாப்பிட்டுப் பலத்தை அடைந்தவர்களாகிப் பிறகு, அவளால் காண்பிக்கப்பட்ட வழியினால் அந்த இடத்திலிருந்து வெளியே புறப்பட்டு உப்புக்கடலுக்குப் பக்கத்திலிருக்கிற ஸஹ்யபர்வதத்தையும் மலயபர்வதத்தையும் தர்த்துர மென்கிற பெரிய மலையையும் கண்டோம்.

அனுமன் சுயம்பிரபை என்பாளைக்கண்டு அவளுக்கு விடுதலை அளித்த செய்தி கம்பரில் உண்டு. ஆனால் இங்கு பிரபாவதி என்பவள் பேசப்பெறுகிறாள். அனுமன் இராமரிடம்

பிரபாவதியைப் பற்றியும் அவள் செய்த உபசாரங்களைப்பற்றியும் பேசுகின்ற பேச்சு கம்பரில் இல்லை. பிரபாவதியே பிரபை என்று கொண்டால் அச்செய்தியுண்டு.

வாய்ப்புகுந்து ஜலராக்ஷஸியைக்கொன்று நூறு யோசனை விஸ்தாரமுள்ள மகாசமுத்திரத்தைத் தாண்டினேன். அந்த லங்கையில் இராவணனுடைய அந்தப்புரத்தில் பதிவிரதையும் உபவாசத்தையும் தவத்தையும் இயற்கையாகக் கொண்டவளும் பர்த்தாவைப் பார்ப்பதில் அதிக ஆவலுள்ளவளும் ஜடையுள்ளவளும் அழுக்கினால் பூசப்பட்ட மேனியை யுடையவளும் மெலிந்திருப்பவளும் எளிமையுற்றவளும் இரக்கப்படத் தக்கவளுமான சீதையானவள் என்னால் பார்க்கப்பட்டாள்.

இங்கு அநுமன் கடலைத்தாவி ஜலராட்சசி ஒருத்தியைக் கொன்று பின் இலங்கை புகுந்து சீதையைக் கண்டு வந்ததாகக் கூறும் இந்நிகழ்ச்சிக்கு வேறாக அநுமன் கடலைத்தாவிச் செல்லும் போது மைந்நாகம் என்ற மலையில் தங்கி, அதன்பின் அரசை என்பாளை வென்று அங்கார தாரையைக் கொன்று, அதன் பின் இலங்கைமாதேவியைக் கண்டதாகக் கம்பர் கூறுவர்.

சீதையானவள், ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து, என்னைப் பார்த்து, "நான் அவிந்தயனுடைய வசனத்தினால் ஹநுமானென்று அறிவேன். மகாபாகுபலமுள்ளவனே அவிந்தியனென்கிற ராக்ஷஸன் ஞானவ்ருத்தர்களால் (யோக்கியனென்று) ஒப்புக்கொள்ளப்பட்டவன். அவன் உன்னைப் போன்ற மந்திரிகளால் சுக்ரீவன் சூழப்பட்டிருப்பதாகச் சொன்னான்" என்றாள்.

இவ்வாறு அவிந்தியன் என்ற அரக்கன் பெயர் கம்ப இராமாயணத்திலும் வான்மீகத்திலும் இல்லை.

பிறகு அவர்களோடு கூடி அந்த இடத்திலேயே நன்கு வீற்றிருக்கின்ற இராமனிடத்தில் அப்பொழுது சுக்ரீவனுடைய கட்டளையினால் வானரஸிரேஷ்டர்கள் வந்து சேர்ந்தார்கள். நல்ல காந்தியுள்ளவனும், வாலிக்கு மாமனுமான ஸுஷேணன் பலசாலிகளான ஆயிரம்கோடி வானரர்களால் சூழப்பட்டு இராமரை வந்தடைந்தான். மகாவீர்யமுள்ளவர்களான கஜன், கவயன் என்கிற வானரஸ்ரேஷ்டர்கள் தனித்தனி நூறு கோடி வானர்களால் சூழப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். மகாராஜனே, பயங்கரமான தோற்றமுள்ள கவாக்ஷனென்கிற கோவலாங்கலன் அறுபதி

* 284-வது அத்தியாயம்

னாயிரங்கோடி வானரசேனைகளை அழைத்துக்கொண்டு இராமரிடம் வருகின்றவனாகக் காணப்பட்டான். கந்தமாதனத்தில் வசிப்பவனும் பிரஸித்தனுமான கந்தமாதனன் வானரர்களுடைய நூறாயிரங்கோடி சேனைகளை அழைத்து வந்தான். மேதாவியும் அதிக பலசாலியுமான பனஸன் என்கிற வானரன் ஐம்பத்தி ஏழு ஆயிரம்கோடி வானரர்களை அழைத்து வந்தான். நல்ல தேஜஸுள்ளவனும் வானரர்களில் வயது சென்றவனும் மிக்க வல்லமையுள்ளவனுமான ததிமுகன் என்பவன் பயங்கரமான சௌர்யமுள்ள வானரர்களுடைய பெரும்படையை நடத்தி வந்தான். ஜாம்பவான், கருமை நிறமுள்ளவைகளும் முகத்தில் புண்ட்ரம் போன்ற அடையாளமுள்ளவைகளும பயங்கரமான செய்கையையுடையவைகளுமான நூறாயிரங்கோடி கரடிகளுடன் காணப்பட்டான்.

இவ்வாறு குரங்குத்தலைவர்களும் கரடித்தலைவர்களும் வந்த எண்ணிக்கை கம்பரில் மாறுபடுகிறது.

"நானே இக்கடலைக் கடக்கும் உபாயத்தை அறிதற்கு ஆராதிக்கப் போகிறேன். உண்ணாவிரதமுள்ளவனாகப் பிரதிசயனம் செய்வேன். அப்படிச் செய்வதனால் ஸமுத்திரராஜன் எனக்குத் தரிசனம் கொடுப்பான். அவன் வழியைக் காட்டிக் கொடாவிடில் தடையற்றவையும் நெருப்பையும் காற்றையும் மீறி ஜ்வலிக்கின்றவையுமான மஹாஸ்திரங்களால் நான் இந்த சமுத்திரத்தை எரிப்பேன்" என்று கூறினார்.

கம்பர், இராமன் வருணஜபம் செய்து பலநாள் வருணன் வாராமையினால் பிரம்மமாத்திரத்தைக் கடல் மீது செலுத்தினான் என்பர். இங்கு வராவிட்டால் அம்பு தொடுப்பேன் என்று பேசுவது வேறுபாடாகவுள்ளது.

பிறகு நதங்களுக்கும் நதிகளுக்கும் பர்த்தாவும், ஜலஜந்துகளுடைய கூட்டங்களால் சூழப்பட்டவனும், காந்தியுள்ளவனும், ஆனந்தமுள்ளவனுமான ஸாகரன், ராகவருக்கு ஸ்வப்பனத்தில் தன்னைக் காண்பித்தான். நூறுநூறாக ரத்தினங்களின் சுரங்கங்களால் நிரம்பிய ஸமுத்திர ராஜன், ராகவரை, "கௌஸல்யையை மாதாவாகக் கொண்டவனே," என்று அழைத்து "மதுரமான இந்த வசனத்தைக் கேள். புருஷோத்தமனே, சொல். இச்சமயத்தில் உனக்கு என்ன உதவி செய்யக் கடவேன்? இக்ஷ்வாகுவம்சத்தாரால் உண்டுபண்ணப்பட்டவன். ராம, தவறாத பராக்கிரமமுள்ளவனே, உனக்கு நான் ஞாதியாக இருக்கிறேன்" என்று சொன்னான். ஸமுத்திரனால் இவ்வண்ணமுரைக்கப்பட்ட ராமர், பிறகு, "நதங்களுக்கும் நதிகளுக்கும் பதியே, எந்த வழியில் சென்று,

குலத்தைக் கெடுத்த பாவியும் என்னுடைய மனைவியைக் கவர்ந்தவனும் ராக்ஷஸனுமான அத்தசக்ரீவனை உறவினர்களுடன் கொல்வேனோ அந்த வழியை என்னுடைய ஸைன்யத்திற்கு நீ கொடுக்க விரும்புகிறேன். இப்படி யாசிக்கின்ற எனக்கு நீ வழியைக் கொடாமற் போனால் திவ்யாஸ்திர மந்திரங்களால் அபிமந்திரணம் செய்யப்பட்ட அம்புகளால் உன்னை வறளச் செய்வேன்'' என்று சொன்னார். இவ்வாறு சொல்லுகின்ற இராமனுடைய வசனத்தை ஸமுத்திரராஜன் கேட்டு மனவருத்தமடைந்து கரங்களைக் குவித்து நின்றுகொண்டு ராமரைப் பார்த்து, "உனக்குத் தீங்கை நான் செய்ய விரும்பவில்லை, நான் உனக்குத் தடையைச் செய்கின்றவனுமல்லேன், ராம, என்னுடைய இந்த வசனத்தைக் கேள். கேட்டுச் செய்யத் தக்கதைச் செய் சேனை செல்லுவதற்கு உன்னுடைய கட்டளையினால் வழியைக் கொடுப்பேனாகில் மற்றவர்களும் வில்லின் பலத்தால் என்னை இவ்வாறு கட்டளையிடுவார்கள். ராகவா, இந்த வானர சேனையில் த்வஷ்டாவென்கிற விஸ்வகர்மாவிற் றப் புத்திரனும் நல்ல பலமுள்ளவனும் சில்பிகளால் ஒப்புக் கொள்ளப்பட்டவனுமான நளன் என்கிற வானரன் இருக்கிறான். அவன் கட்டையையோ, புல்லையோ, கல்லையோ எதை எதை என் மீது போடுவானோ அவை எல்லாவற்றையும் நான் தாங்கிக் கொண்டிருப்பேன். அது உனக்கு அணையாகும்'' என்று சொன்னான். இவ்வண்ணமுரைத்து அவன் மறைந்து போனான்.

இந்த வருணன் தோன்றியதும் அவனிடம் இராமன் அணை கட்ட இடம் தராவிடில் அவன் மீது அம்பு எய்வதாகக் கூறியதும் தன் மீது விஸ்வகர்மா நளன் புல்லைப்போட்டாலும் மிதக்கும் என்று கூறியதும் போன்ற செய்திகள் கம்பரில் இல்லை.

மிகுதியான உணவுப்பொருள்களும் தண்ணீருமுள்ளதும், பலவகைக்கிழங்கு, கனிகளுள்ளதுமான அந்த வனத்தில் சேனையை இறக்கிவைத்து யுத்தமுறைப்படி எல்லாப்பக்கங்களிலும் பாதுகாத்தார் ராவணன் லங்கையில் யுத்த சாஸ்திரப்படி யந்திர முதலியவற்றை அமைத்தான். திடமான மதில்களும் கோட்டை வாசல்களுமமைந்ததான லங்கையானது, இயற்கையாகவே ஜயிக்க முடியாததாகவே இருந்தது. ஆழ்ந்த ஜலமுள்ளவைகளும், பயங்கரமான மீன்களாலும், முதலைகளாலும் நிரம்பினவைகளும் கருங்காலி முனைகளால் நிறைக்கப்பட்டவைகளும் தாண்டமுடியாதவைகளுமான ஏழு அகழ்கள் இருந்தன. கதவுகளாலும் யந்திரங்களாலும்

பகைவர்களால் பிரவேசிக்க முடியாதவைகளும், மூத்திரம் முதலியவை விடுவதற்கு ஸாதனமான குழாய்களோடும் பகைவர்கள் மீது ஓங்கி எறியத்தக்க உருண்டைக் கற்களோடும் கூடியவைகளும், பாம்படைத்த குடங்களை வைத்திருக்கும் போர்வீரர்களுள்ளவைகளும், விஷப்பொடிகளுள்ளவைகளும், உலக்கைகளோடும் எரி கொள்ளிகளோடும், நாரசங்களோடும், தோமரங்களோடும், சக்தி களோடும், கோடாலிகளோடும் கூடியவைகளும் சதக்னிகளுள்ள வைகளும், தேன்மெழுகு பூசின முத்கராயுதங்களை யுடையவைகளும், காலாட்களால் நிறைந்தவைகளும் எண்ணிறந்த யானை களோடும் குதிரைகளோடும் கூடினவைகளுமான ஸ்தாவரகுல்மங்களும் ஜங்கம குல்மங்களும் பட்டணத்தில் கோட்டைவாசல்களெல்லாவற்றிலும் இருந்தன. பிறகு அங்கதன் லங்கையின் கோட்டைவாயிலினை அடைந்து ராவணனுக்குத் தெரிவிக்கப் பட்டுப் பயமில்லாமல் உள்ளே சென்றான்.

அங்கதன் இராமனால் இராவணனிடம் தூதாக அனுப்பப் பெற்றபோது அவன் கடந்து சென்ற கோட்டை வாயில், மதில்கள், அதிலுள்ள இயந்திரப்பொறிகள் முதலியவற்றைப் பற்றிய விரிவான செய்திகள் கம்பரில் இல்லை. அங்கதன் தூது சென்று பேசிய பேச்சில் கம்பர் கூறிய செய்திகள் பாரத இராமாயணத்தில் இல்லை.

வீடணன் இராவணனை விட்டுப் பிரிதற்குரிய காரணம் இங்குப்பேசப் பெறவில்லை. ரகுநந்தனர், பிறகு காற்றுப்போல வேகம் உள்ள வானரர்கள் அனைவரும் கூடிச்செய்த முயற்சியினால் லங்கையின் மதிலை இடிக்கச் செய்தார். லக்ஷ்மணன், விபீஷணனையும் ஜாம்பவானையும் முன்னிட்டுக்கொண்டு, அணுக முடியாததான நகரத்தின் தெற்கு வாயிலை இடித்தான்.

அங்கதன் தூது சென்ற பின்னர் இலக்குவன், வீடணன், சாம்பவான் முதலியோர் இலங்கையின் தெற்கு வாசலை இடித்த தாகக் கூறும் இச்செய்தி கம்பனில் இல்லை.

பிறகு எதிர்த்து வருகின்றவர்களும் கண்ணுக்குப் புலப்படாதவர்களும் கெட்ட எண்ணமுள்ளவர்களுமான அவர்களுடைய அந்தர்த்தமான சக்தியின் வதத்தை அறிந்தவனான விபீஷணன் செய்தான். அரசனே, காணப்படுகின்ற அவர்கள் எல்லோரும், பலசாலிகளும் நெடுந்தூரம் பாய்கின்றவர்களுமான வானரர்களால் அடிக்கப்பட்டு உயிர்போய்ப் பூமியில் விழுந்தார்கள்.

பிறகு, அதனைப் பொறாத ராவணன் ஸைன்யங்களுடன் கூடியவனாக யுத்தத்திற்குப் புறப்பட்டான்.

முதல்நாள் போர் இராவணனே செய்ததாகக் கூறுவர் கம்பர். பின்பு இரண்டாவது நாள் மாயவடிவு எடுக்கக்கூடிய பல அரக்கர்கள் போரில் இறந்தது கேட்டு இராவணன் தானே போருக்குப் புறப்பட்டு வந்ததாகக் கூறும் இந்நிகழ்ச்சிகள் கம்பரில் இல்லை.

பிறகு, அந்த இடத்தில் இராவணன் இராமனோடு எதிர்த்துப் போர் புரிந்தான். அப்படியே இலக்ஷ்மணனும் இந்திரஜித்தோடு போர்புரிந்தான். ஸுக்ரீவன் விரூபாக்ஷனோடும், நிகர்வடன் தாரனோடும், நளன் பௌண்ட்ரனோடும், படுசன் பனஸனோடும் அந்த இடத்தில் போர்புரிந்தார்கள். எவன் எவன் எவனை எவனை எதிர்த்து யுத்தம் செய்யத்தக்கவனென்று எண்ணினானோ அவன் அவன் அவனோடு அவனோடு எதிர்த்தான். யுத்த காலத்தில் ஒவ்வொருவனும் தன் தன் தோள் வலிமையையே துணையாகக் கொண்டு போர்புரிந்தான். அந்த யுத்தமானது, பயமுள்ளவர்களுக்குப் பலத்தை வளர்ப்பதாகவும் மயிர்க்கூச்சம் உண்டு பண்ணுகிறதாகவும் முற்காலத்தில் நடந்த தேவாஸுர யுத்தம்போலக் கோரமாக வளர்ந்தது. இராவணன், சக்திகள், சூலங்கள், கத்திகள் இவற்றின் மழைகளால் இராமரைத் துன்புறுத்தினான். உருக்கினாற் செய்தவைகளான அம்புகளால் இராவணனை இராமர் அடித்தார். அப்படியே இலக்ஷ்மணன் மர்மஸ்தானங்களைப் பிளக்கிற பாணங்களால் முயற்சியுள்ள இந்திரஜித்தை அடித்தான். இந்திரஜித்தும் அனேக பாணங்களால் இலக்ஷ்மணனைப் பிளந்தான். அஞ்சாத விபீஷணன் ப்ரஹஸ்தன் மீதும், ப்ரஹஸ்தன் விபீஷணன் மீதும் பறவைகளின் இறகுகள் கட்டப்பட்டவைகளும் கூர்மையுள்ளவைகளுமான அம்புகளைப் பொழிந்தார்கள். பலமுள்ள அந்த மகாஸ்திரங்களுக்குச் சராசரங்களுடன் கூடின மூவுலகங்களுக்கும் துன்பம் உண்டுபண்ணக்கூடிய எதிர்ப்பு நேர்ந்தது.

இங்கு இராம இலக்குவர்கள் சேர்ந்து இராவணனையும் இந்திரசித்துவையும் எதிர்த்துப்போர் செய்ததாகக் கூறப்படும் இச்செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது.

பிறகு ப்ரஹஸ்தன் விபீஷணனை விரைவாக எதிர்த்து வந்து யுத்தத்தில் கடுமையாகக் கர்ஜித்துக் கதாயுதத்தால் அடித்தான். பயங்கரமான வேகத்துடன் கூடின அந்தக் கதையினாலடிக்கப்பட்டவனும், புத்திமானும் மிக்க பாகுபலமுள்ளவனுமான அந்த

விபீஷணன் இமயமலைபோல் மிகவுறுதியாக இருந்து கொண்டு அசையாமலிருந்தான். பிறகு விபீஷணன் பெரியதும் நூறு மணிகளுடன் கூடியதுமான மகாசக்தியை எடுத்து அபிமந்திரித்து தலையைக் குறித்து எறிந்தான்.

வீடணன் போர்க்களத்தில் இமயமலைபோல் நின்று கடுமையாகப் போரிட்ட செய்தி கம்பரில் இல்லை. இந்திரசித்து போருக்கு வந்தபோது போரிட்டதாகக் கம்பர் கூறுவர்.

இராவணன் அந்த இராக்ஷஸர்களிடத்திலிருந்து யுத்தத்தில் ப்ரஹஸ்தனும் சிறந்த வில்லாளியான தூம்ராக்ஷனும் சேனைகளோடும் இராக்ஷஸர்களோடும் கொல்லப்பட்டதைக் கேட்டு,மிக நீண்ட பெருமூச்சைவிட்டுச் சிறந்த ஆசனத்திலிருந்து எழுந்து, "கும்பகர்ணனுடைய செய்கைகளுக்கு ஸமயம் வந்துவிட்டது" என்று சொன்னான். இவ்வண்ணம் உரைத்துப் படுத்திருப்பதிலும் அதிகமான உறக்கத்தையே வைபவமாகக் கொண்டவனுமான கும்பகர்ணனை மிக்க பெரிய சத்தத்துடன் கூடிய பற்பலவித வாத்தியங்களால் எழுப்பும்படிச் செய்தான் பிறகு, பயமடைந்தவனும் இராக்ஷஸ ராஜனுமான இராவணன் அதிக ப்ரயத்னத்தால் கும்பகர்ணனை விழிக்கச் செய்து, உறக்கத்தை விட்டவனும், கவலையற்றவனும் தன் நிலைமையிலிருப்பவனும் மகாபலசாலியுமான அந்தக்கும்பகர்ணனைப் பார்த்து " கும்பகர்ண, உனக்கு இப்படிப்பட்ட தூக்கம் இருந்தாலும் நீ மகாபயங்கரமாகவும் கொடியதாகவும் இருக்கிற இந்தக் காலத்தை அறியவில்லையாதலாலும், நீ பாக்கியசாலியாக இருக்கிறாய். இதோ இராமன் வானரர்களோடு கூட அணையினால் கடலைத்தாண்டி இங்கே நம் அனைவரையும் அவமதித்துப் பெரிய நாசத்தைச் செய்திருக்கிறான். ஜனகனுடைய புதல்வியும் ஸீதை என்கிற பெயருள்ளவளுமான இவனுடைய மனைவி என்னால் கவரப்பட்டாள் அவளை மீட்டுக்கொண்டு போவதற்காக அந்த இராமன் பெருங்கடலில் அணைகட்டி இங்கே வந்திருக்கிறான். அவனால் ப்ரஹஸ்தன் முதலான நம்முடைய பந்துஜனங்கள் பலர் கொல்லப்பட்டார்கள். பகைவர்களை அழிப்பவனே, உன்னைத் தவிர அவனைக்கொல்பவன் வேறு ஒருவனுமில்லை. பலசாலிகளுள் சிறந்தவனே, அப்படிப்பட்ட நீ இப்பொழுது கவசம் பூண்டு எதிர்த்துச் செல்" என்றான்.

இவ்வாறு பல அரசர்கள் அழிந்தது கேட்ட இராவணன் கும்பகர்ணனை அழைத்துப் போருக்குப் போகச் சொன்ன நிகழ்ச்சி கம்பரில் இருந்தாலும் தான் சீதையைக் கவர்ந்ததாகவும் அவளை மீட்க இராமன் போந்து பல அரக்கர்களைக் கொன்றதாகவும் அது

பற்றி இராமனை அடித்து வருமாறும் கூறப்பெறும் செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது.

சிறந்த வில்லாளியும் கல்லை ஆயுதமாகக் கொண்டவனுமான கும்பகர்ணன் பெரிய கல்லை ஓங்கிக்கொண்டு இலக்ஷ்மணனை எதிர்த்தோடினான். இலக்ஷ்மணன் வேகமாகத் தன்னை எதிர்த்து வருகின்ற அவனுடைய மேலே தூக்கப்பட்ட இருகைகளையும் முனை கூர்மையான இரண்டு க்ஷுரப்பரங்களால் வெட்டினான். அவன் நான்கு கைகளுள்ளவனாவான். கற்களை ஆயுதங்களாகக் கொண்ட அவனுடைய அந்த எல்லாப் புஜங்களையும் இலக்ஷ்மணன் அஸ்திரலாகவத்தைக் காண்பித்துக்கொண்டு க்ஷுரங்களால் அறுத்தான். அவன் பருத்த சரீரமுள்ளவனும் பல கால்களும் தலைகளும் கைகளுமுள்ளவனும் ஆனான். இலக்ஷ்மணன் மலைகளின் குவியலுக்கொப்ப அந்தக் கும்பகர்ணனை ப்ரம்மாஸ்திரத்தினால் பிளந்தான். மகாவீர்யமுள்ளவனான அந்தக் கும்பகர்ணன், யுத்தத்தில் திவ்யாஸ்திரத்தால் அடிக்கப்பட்டு, பேரிடி நெருப்பால் எரிக்கப்பட்ட மரம்போலக் கீழே விழுந்தான்.

இங்குக் கும்பகர்ணன் இலக்குவனால் கொல்லப்பட்டான் என்ற செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது. கும்பகர்ணனை எதிர்த்த இலக்குவன் ஒருபுறம் ஒதுங்கிப்போகச் சுக்ரீவனை எடுத்துச் சென்ற கும்பகர்ணனை இராமன் எதிர்த்துப் போரிட்டதாகக் கம்பர் கூறுவர். பல கால்களும் கைகளும் கும்பகர்ணனுக்கு இருந்ததாகக் கம்பர் கூறவில்லை. பெரிய வடிவத்தையே குறிப்பிட்டார்.

அந்த இந்திரஜித்தானவன், பிறகு, வரன் கொடுக்கப் பெற்ற பாணங்களால் அப்பொழுது ராமரையும் மகாபலசாலியான லக்ஷ்மணனையும் எல்லா அங்கங்களிலும் குறிவைத்து அடித்தான். சூரர்களான ராமலக்ஷ்மணர்களிருவரும் அப்பொழுது மாயையினால் மறைந்தவனும் கண்ணுக்குப் புலப்படாமலிருக்கிறவனுமான அந்த இந்திரஜித்திடம் பாணங்களால் போர்புரிந்தார்கள். அவன் புருஷ சிரேஷ்டர்களான அவர்களுடைய எல்லா அங்கங்களிலும் கோபத்தால் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அம்புகளை மீண்டும் பிரயோகித்தான். கண்ணுக்குப் புலப்படாதவனும் ஒழிவற்று அம்புகளைத் தொடுப்பவனுமான அந்த இந்திரஜித்தைத் தேடுகின்றவர்களாக வானரர்கள் பெரிய கற்களை எடுத்துக் கொண்டு ஆகாயத்தில் பிரவேசித்தார்கள். ராக்ஷஸனான அந்த இந்திரஜித்தானவன், கண்ணுக்குப் புலப்படாமலிருந்து கொண்டு, அந்த வானரர்களையும் ராமலக்ஷ்மணர்களையும் அம்புகளால் அடித்

தான். அந்த இந்திரஜித்தானவன், மாயையினால் மறைந்து கொண்டு (ராமலக்ஷ்மணர்களை) அதிகமாக அடித்தான். அம்பு களாலடிக்கப்பட்டவரும் வீரர்களும் பிராதாக்களுமான அந்த ராம லக்ஷ்மணர்கள் இருவரும் ஆகாயத்தினின்று ஸுர்ய சந்திரர்கள் விழுவதுபோலப் பூமியில் விழுந்தார்கள்.

இந்திரசித்து போர்க்களம் புகுந்தபோது அவனை இலக்குவன் எதிர்க்க, இந்திரசித்துவின் போர்க்கடுமை கண்ட இராமனும் அங்கு வர அவன் மாயை செய்து இருவரையும் அடித்துக் கீழே வீழ்த்தி னான் என்று கூறும் செய்தி கம்பரில் சற்று மாறுபட்டுள்ளது.

பிறகு (வேறோரிடத்தில்) வெற்றி பெற்று வந்த விபீஷணன் அந்த இடத்தை அடைந்து மிக்க மயக்கமடைவிக்கப்பட்டிருக்கிற அந்த வீரர்களைப் பிரஜ்ஞாஸ்திரத்தினால் நினைவை அடையும்படி செய்தான். ஸுக்ரீவன் திவ்ய மந்திரத்தால் அபிமந்திரணம் செய்யப்பட்ட விசல்யை என்கிற மஹௌஷதியினால் இவர்களை ஒருக்ஷண நேரத்தில் (உடம்பில்) பாணங்களில்லாதவர்களாகவும் செய்தான். அந்தப் புருஷஸ்ரேஷ்டர்கள் பிரஜ்ஞையை அடைந்த வர்களாகவும், சல்யங்களற்றவர்களாகவும், எழுந்திருந்தார்கள். இந்த மகாரதர்களிருவரும் நொடிப்பொழுதில் களைப்புத் தீர்ந்தவர் களுமானார்கள்.

பிறகு விபீஷணன் இக்ஷ்வாகு குல நந்தனரான இராமரைத் துன்பம் நீங்கினவராக அஞ்சலி பந்தம் செய்து கொண்டு, "பகைவரை அடக்குகிறவரே, குபேரனுடைய கட்டளையால் இந்த யக்ஷன் தீர்த்தத்தை எடுத்துக்கொண்டு கைலாஸத்திலிருந்து உம் மிடம் வந்திருக்கிறேன். பகைவர்களைத் தவிக்கச் செய்பவரே, மகாராஜரே, மறைந்திருக்கிற பிராணிகளைக் காண்பதற்காகக் குபேரன் உமக்கு இந்தத் தீர்த்தத்தைக் கொடுக்கிறான். இந்த தீர்த் தத்தால் கண்களை அலம்பிக்கொண்டால் தேவரீர் மறைந்திருக்கிற எல்லாப் பிராணிகளையும் பார்ப்பீர். எவனுக்கு இந்தத் தீர்த்தத் தத்தைக் கொடுப்பீரோ அவனும் பார்ப்பான்" என்று சொன்னான். இராமர் "அப்படியே ஆகட்டும்" என்று மந்திரங்களால் குண முண்டுபண்ணப்பட்ட அந்தத் தீர்த்தத்தை வாங்கிக் கண்களை அலம்பிக்கொண்டார். பெரியமனமுள்ள இலக்ஷ்மணனும் கண் களை அலம்பிக்கொண்டான். ஸுக்ரீவனும் ஜாம்பவானும் ஹனுமா னும், அங்கதனும், மைந்தனும், த்விவிதனும் நீலனும் மற்றும் பெரும் பலரான வானர ஸ்ரேஷ்டர்களும் கண்களை அலம்பிக்கொண்டார் கள். விபீஷணர் சொல்லியது சொல்லியபடியே நேர்ந்தது. யுதிஷ்டிர, அவர்களுடைய கண்கள் க்ஷணநேரத்தில் சாதாரணக்கண்களால்

பார்க்கக் கூடாத விஷயங்களைப் பார்க்கச் சக்தியுள்ளவைகளாயின.

இராம இலக்குவர்கள் இந்திரசித்தால் வீழ்ந்தபோது வீடணன் மந்திர சக்தியால் அவர்களுடைய மயக்கத்தைப் போக்கினான் என்றும் 'யக்ஷன் ஒருவன் கைலாயத்திலிருந்து தீர்த்தம் கொண்டு வந்திருக்கிறான், அதனால் கண்ணை அலம்பிக்கொண்டால் மாயை விலகிப் பார்க்கமுடியாத விஷயங்களைப் பார்க்கக்கூடும்' என்று சொல்லி அவ்வாறு செய்ததாகக் கூறும் பாரத இராமாயணச் செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது. அநுமன் மருந்துமலை கொண்டு வந்தான், அதனால் எல்லோரும் உயிர் பெற்றனர் என்று பேசுவர் கம்பர்.

வீரனான இலக்ஷ்மணன் இந்திரசித்தை அப்படி அடித்தான். அதைச் சொல்லுகிற என்னிடத்தினின்று கேட்பாயாக. ஒரு பாணத்தால் வில்லுடன் கூடின அவனுடைய ஒரு கையைத் தேகத்திலிருந்து கீழே விழும்படிச் செய்தான் இரண்டாவது பாணத்தால் மற்றொரு கையையும் கீழே விழும்படி செய்தான். தீட்டப்பட்ட நுனியுள்ளதும் பிரகாசிப்பதுமான மூன்றாவது பாணத்தால் நல்ல மூக்குள்ளதும் ஜ்வலிக்கின்ற குண்டலங்களணிந்ததுமான அவனுடைய தலையையும் கொய்தான். தோள் பூட்டுக்கள் அறுக்கப்பட்டவனும் தலையில்லா முண்டமாகக் காணப்படுகின்றவனுமான அவன் வேர் அறுக்கப்பட்ட மரம்போல பூமியில் விழுந்தான்.

பாரத இராமாயணத்தில் இலக்குவனால் இந்திரஜித் கொல்லப் பெற்ற செய்தி பேசப்பெற்றுளதேயன்றி இந்திரஜித் நிகும்பிலையில் யாகம் செய்த நிகழ்ச்சி பேசப்பெறவில்லை.

அசோகவனத்திலிருப்பவரும் இராமனைப் பார்ப்பதில் மிகுந்த ஆவலுள்ளவருமான அந்த ஸீதையைக் குறித்துக் கெட்ட எண்ணமுள்ள இராவணன் கத்தியை எடுத்துக்கொண்டு வேகத்தோடு ஓடினான். கெட்ட புத்தியை உடையவனான அவனுடைய அந்தப் பாவ நிகழ்ச்சியைப் பார்த்து அவிந்தையன் மிக்க கோபமுள்ள அந்த இராவணனைத் தணியச் செய்த காரணத்தைக் கேள். அவிந்தியன், "இராவண, பிரகாசிக்கின்ற மகாராஜ்யத்திலிருக்கிற நீ ஸ்த்ரீயைக் கொல்லுவது தகாது."

இந்திரஜித் இறந்த பின்னர் சீதையைக் கொல்லுவான் கருதிச் சென்ற இராவணனை அவிந்தியன் என்ற அரக்கன் தடுத்ததாகக் கூறும் இச்செய்தி கம்பரில் மகோதரன் தடுத்ததாக உள்ளது.

இராவணன் மாயையை உண்டு பண்ணினான். பிறகு அம்புகளையும் சக்திகளையும் நிஷ்டிகளையும் கையிற்கொண்ட ராக்ஷஸர்கள் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் அவனுடைய தேகத்தினின்று வெளிப்பட்டவர்களாகக் காணப்பட்டார்கள். இராமர் அந்த இராக்ஷஸர்களனைவரையும் திவ்யாஸ்திரத்தால் கொன்றார்.

இராவணன் மாயை செய்து ஆயிரமாயிரம் அரக்கர்களைத் தன் தேகத்திலிருந்து உண்டாக்கினான் என்ற செய்தி கம்பரில் இல்லை. அதற்கு வேறாக அறுக்க அறுக்க இராவணனுடைய தலை முளைத்துப் பொருததாகக் கூறுவர் கம்பர்.

பிறகு இந்திரனுடைய ஸாரதியான மாதலியானவன் பச்சை நிறமுள்ள குதிரைகள் பூட்டப்பட்டதும் ஸூர்யன் போல ஜ்வலிக்கின்றதுமான இரதத்தோடு யுத்தத்தில் இராமரை வந்தணுகினான். மாதலி, பச்சை குதிரைகள் பூட்டப்பட்டதும் ஜயத்தைக் கொடுப்பதுமான இந்திரனுடைய இந்த உத்தம ரதமானது அவனுடைய கட்டளையினால் உமக்காக இங்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. காகுஸ்தரே, புருஷஸ்ரேஷ்டரே, இந்திரன் இந்த உத்தம இரதத்தினால் யுத்தத்தில் தைத்யர்களையும் நூற்றுவர், நூற்றுவராகக் கொன்றான். புருஷஸ்ரேஷ்டரே, ஸாரதியாகிய என்னால் நடத்தப்பட்டிருக்கிற இந்த இரதத்தினால்சீக்கிரம் இராவணனைக் கொல்லுவீராக. காலதாமதம் செய்யாதீர்" என்று சொன்னான்.

இந்திரனுடைய சாரதியான மாதலி என்பான் பச்சைக் குதிரைகள் பூட்டிய தேரைக் கொணர்ந்த செய்தி கம்பரில் இராமனுக்குப் பேசப்பெறவில்லை இந்திரசித்து பச்சைக்குதிரை பூண்ட தேரில் வந்தான் என்று கம்பர் கூறுவர். மாதலி இராவணனைச் சீக்கிரம் கொல்லுமாறு வேண்டியதாக வரும் இச்செய்தியும் ஆண்டு இல்லை. இலக்குவனிடம் சீக்கிரம் கொல்லுமாறு வீடணன் கூறியதாகக் கம்பர் கூறுவர்.

அந்த இராவணன் பிரம்மாஸ்திர தேஜஸினால் எல்லா உலகங்களினின்றும் நழுவிவிழும்படி செய்யப்பட்டான். அவனுடைய சரீர தாதுக்களும் மாம்ஸமும் இரத்தமும் பிரம்மாஸ்திரத்தினால் எரிக்கப்பட்டு நாசமடைந்தன. சாம்பல்கூடக் காணப்படவில்லை.

இராமன் இராவணன் மீது எய்த பிரம்மாஸ்திரம் அவனை எரித்து நாசம் செய்ததாகக் கூறப்பெறும் இச்செய்தி கம்பரில் மாறு

பட்டுள்ளது. அங்கு இராவணன் உடலில் எள் இருக்க இடமில்லாது துளைத்துக் கொன்றதாகப் பேசப்பட்டுள்ளது.

பிறகு நல்ல புத்திமானான அவிந்தியனென்கிற வயது முதிர்ந்த மந்திரியானவன் விபீஷணனுக்குப் பின்னேசெல்லுகிற ஸீதையை முன்னிட்டுக் கொண்டு வெளியில் புறப்பட்டான். மகாத்மாவும் தீனத்தன்மையை அடைந்திருப்பவருமான ரகுவீரரைப் பார்த்து, "மகாத்மாவே, நல்லொழுக்கமுள்ளவளும் பட்டமஹிஷியுமான ஜானகியைப் பெற்றுக்கொள்ளும்" என்று சொன்னான்.

அவிந்தியன் என்ற அரக்கன் சீதையை அழைத்து வந்து இராமனிடம் ஏற்றுக்கொள்ளுமாறு கூறிய இச்செய்தி கம்பரில் மாறுபட்டுள்ளது. அங்கு வீடணன் சீதையை அனுமன் துணையினால் அழைத்து வந்ததாகப் பேசப்பெற்றுள்ளது. சீதை வீடணன் வேண்டுகோளால் நீராடி ஒப்பனை செய்து கொண்டு இராமனைக் காண அழைத்து வரப்பெற்றாள் என்ற செய்தி வியாச ராமாயணத்தில் அழுக்கு மேனியும் சடையும் உள்ளவளாக வந்தாளென்று பேசப்பட்டுள்ளது.

பிறகு, புகழ்பெற்றவளும் மங்களகரியுமான வைதேஹியானவள் அவர்களுடைய மத்தியில் எழுந்திருந்து, அகன்ற மார்பையுடைய ராமரைப் பார்த்து, "ராஜபுத்திரரே, உம்மீது நான் கோபங் கொள்ளவில்லை. ஸ்த்ரீபுருஷர்களுடைய கதியானது என்னால் அறிவிக்கப்பட்டிருக்கிறதன்றோ? இந்த என் சொல்லையும் கேளும். எப்பொழுதும் சென்று கொண்டேயிருக்கிற வாயு பகவான் பிராணிகளுடைய தேகத்தினுள் ஸஞ்சரிக்கிறான். நான் பாவத்தைச் செய்திருப்பேனாகில் அவன் என்னுடைய பிராணனைப் போக்கட்டும் வீரரே. நான் உம்மைத்தவிர வேறு ஒருவனைக் கனவிலும் நினையாமையிலிருந்தது உண்மையானால் முன்பு தெய்வத்தால் கொடுக்கப்பட்ட நீரே எனக்குப்பதியாக இருக்கக்கடவீர்." என்று சொன்னாள். பிறகு ஆகாயத்தில் மங்களகரமானதும் மகாத்மாக்களான அந்த வானரர்களுக்கு அதிக ஆனந்தத்தை உண்டுபண்ணுகிறதும் புண்யமானதும் உலக நடைக்கு ஸாக்ஷியாகயிருப்பதுமான வாக்கானது தோன்றியது. வாயு, "ஓ, ஓ, ராகவ, நான் எப்பொழுதும் சென்று கொண்டிருக்கிற வாயுவாகிறேன். இஃது உண்மை. அரசனே, மைதிலி தோஷமற்றவள். பார்யையையுடன் சேர்ந்து கொள்வாயாக" என்றான். அக்னி, "ரகுநந்தன, நான் பிராணிகளுடைய சரீரத்தினுள் இருக்கிறேன். ராம, மைதிலியானவள் அணுவளவும் குற்றம் செய்தவளல்லள்" என்றான். வருணன், "ராகவனே,

---

* வியாசபாரதம் 292-ஆவது அத்தியாயம்

பிராணிகளுடைய தேகங்களில் ரஸங்கள் என்னால் உண்டுபண்ணப் பட்டிருக்கின்றனவன்றோ? நான் உன்னை நோக்கிச் சொல்லுகிறேன். மைதிலியை ஏற்றுக்கொள்" என்றான். யமன், "ராகவ, நான் தர்ம ஸ்வரூபியாக இருக்கிறேன். உலகங்களிலுள்ள ஜனங்களின் நல்லவையும் தீயவையுமான செய்கைகளுக்கு ஸாக்ஷியாகவுமிருக் கிறேன். பாவமில்லாத இந்த ஸீதையை ஏற்றுக்கொள்" என்றான்.

இங்கு இராவணனின் காப்பில் வாழ்ந்த சீதையை இராமன் ஏற்றுக்கொள்ள மறுத்தபோது வாயு, அக்னி, ஜலம், ஆகாசம், பூமி முதலியவர்கள் சீதை குற்ற மற்றவள் என்று கூறி இராமனை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிய இந்நிகழ்ச்சி கம்பரில் மாறுபட்டுள்ளது. இராமன் சீதையின் தூய்மைகாட்டத் தீயில் இறங்கி வருமாறு வேண்டத் தீக்கடவுள் அவள் தன் கற்பின் எரியால் தன்னைச் சுட்ட தாகக்கூறி அவளை வெளிக்கொணர்ந்து அளிக்கின்றான் என்று பேசப்படுகிறது.

விபீஷணனால் பின் தொடரப்பட்டவராகவும், ஸுக்ரீவனோடு சேர்ந்தவராகவும் அப்பொழுது புஷ்பகவிமானத்தால் வைதேஹிக்கு வனத்தைக் காண்பித்துக்கொண்டே கிஷ்கிந்தையை அடைந்து, காரியத்தை நிறைவேற்றியவனான அங்கதனை இளவரசனாகப் பட்டாபிஷேகம் செய்வித்தார்

இராமன், இராவண வதைக்குப் பிறகு புட்பகத்தில் இவர்ந்து கொண்டு கிஷ்கிந்தைக்கு வந்ததாகக் கூறும் செய்தி கம்பரில் இல்லை. வாலியைக் கொன்ற அன்றே இராமன் சுக்கிரிவனுக்குப் பட்டமும் அங்கதனுக்கு இளவரசுப் பட்டமும் சூட்டியதாகக் கம்பர் கூறுவார்.

இராமர் தேவர்களோடும் ரிஷிகளோடும் கூடிக் கோமதி நதியினருகில் நூறு அஸ்வமேதங்களைச் செய்தார் என்று பாரதத்தில் உள்ளது. பத்தாயிரம் ஆண்டுகள் ஆட்சிபுரிந்து கரைதெரிவிலாத போகக் களிப்பினுள் இருந்ததாகக் கூறுவர் கம்பர்.

வியாசர் பாரதத்தில் கூறிய இராமோபாக்கியானத்துச் செய்திகட்கும் வான்மீகர் இயற்றிய இராமாயணச் செய்திகட்கும் பலவேறுபாடுகளும் ஒப்புமைகளும் இருக்கக் கண்டோம். வான்மீகர்

கூறாத செய்திகளைப் பாரதத்திலும், கம்பரிலும் விளங்கக் காணு கின்றோம். மூன்று இராமாயணங்களிலும் பேசப்பட்ட இராமகாதை களிலும் இத்தகைய முரண்பாடுகளும் வேறுபாடுகளும் இருக்கக் காரணம், இவர்கள் பல மூலங்களிலிருந்து இராமயணச் செய்தி களைப் பெற்றதாலேயாகும். வான்மீக இராமாயணம் முதலாவதாக இருந்தால் இத்தகைய வேறுபாடுகள் நிகழ வாய்ப்பில்லை. அதனால் கம்பர் வான்மீகத்திலிருந்து கதையையும் நிகழ்ச்சியையும் கொண் டார் என்று கூறுவது பொருந்தாது. அவர் பலதிறப்பட்ட புராணங் களிலும், இதிகாசங்களிலும், இலக்கியங்களிலும் பேசப் பெற்றிருந்த இராமாயணத்தை ஏற்ற பெற்றி கொண்டு இராமகாதை இயற்றியுள்ளது தெளிவாகும்.

---

# இராமகாதை கூறும் பல்வேறு இராமாயணங்கள்

### ஆனந்த ராமாயணம் — மந்தரை

ஆனந்த ராமாயணத்தில் 'துந்துபி என்ற கந்தருவப்பெண் என் அவதார காரியத்தை நிறைவேற்ற மந்தரை என்ற ஸ்த்ரீயாகப் பிறந்து கம்சனுடைய வீட்டில் வாழ்ந்து என்னால் அனுக்கிரகம்பெற்று முக்தியடையட்டும்.' என்றுள்ளது. *

கம்பரின் பாலகாண்டத்தில் திருமால் முதலிய அனைவரும் இராவணவதத்திற்காகப் பிறந்த பிறப்பு விரிவாகப் பேசப்பெறுகின்றது. ஆனால் இந்தத் துந்துபி என்ற கந்தருவப் பெண் மந்தரையாகப் பிறந்து தேவகாரியத்தை முடிக்கத் துணை செய்த செய்தியைக் கம்பர் குறிப்பிடவில்லை. வான்மீகத்திலும் காணோம். இரு இராமாயணங்களிலும் மந்தரையால்தான் காரியம் நடைபெறுகிறது ஆனால் வியாச பாரதத்தில் இராமோபாக்கியானம் கூறுகின்ற இடத்தில் இது தெளிவாகப் பேசப் பட்டுள்ளது.

### பூர்வ வாசிட்ட இராமாயணம் — ஹனுமத் விஜய கதை

இந்திராணியின் புத்திரனான ஜயந்தன் காக்கையானான். ஏனெனில் முன்பு இந்திரன் அகல்யையிடத்தில் ஆசை வைத்துச் சமயம் நேராமல் ஒரு நாள் பாதி ராத்திரியில் கௌதமருடைய ஆசிரமத்துக்கருகில் போய்க் காக்கையைப் போல் கத்தினான். கௌதமர் பொழுது விடிந்ததென்றெண்ணி ஸ்நானம் செய்யக் கங்கைக்குப் போனார். அப்பொழுது அவள் தூங்கிக் கொண்டிருந்தாள். அதுகண்ட அவர், யாரோ நம்மை மோசம் செய்தானென்று கண்டு திரும்பி வருகையில் இந்திரன் பர்ணசாலையிலிருந்து காக்கை ரூபத்துடன் வெளியில் வந்து கொண்டிருந்தான். கௌதமர் ஞான திருஷ்டியால் நடந்ததை அறிந்து, இனி இதே உனக்கு ரூபமாகக் கடவது என்று சபித்தார். தேவர்கள் மிகவும் பிரார்த்திக்க, அந்த ரிஷி "இந்த ரூபம் இவனுடைய மகனைச் சாரும்" என்றார். சாப விமோசனம் எப்போதென்று தேவர்கள் வேண்டினார்கள். கௌதமர்,

---

* ஆனந்த ராமாயணம், கா. 2 : 223

ஸ்ரீராமனுடைய பாணம் இவனுடைய தேகத்தைத் தொட்டு இந்தச் சாபத்தை நீக்கும் என்றார். ஜயந்தன் அந்த சமயத்திற்காகப் பார்த்துக்கொண்டிருந்தான். ராமன் சீதையுடன் சித்திரகூடத்தி லிருக்கும் பொழுது அவருக்குக் கோபமூட்டினால் தன் மேல் பாணத்தைப் பிரயோகிப்பாரென்று சீதையை இச்சித்தான். ராமனுக்கு இது தெரிந்தே பிரம்மாஸ்திரத்தை அனுப்பி, அவனுடைய உயிரை வாங்காமல் கண்ணை மாத்திரம் கெடுத்தார். சாபம் நீங்கிற்று.

இங்கு இந்திரன் அகலிகையைத் துய்க்க வேண்டிக் கௌதம முனிவரை வஞ்சிக்கக் காக்கை வடிவெடுத்து வந்தான் என்று கூறப் படுகிறது. கம்பராமாயணத்தில் இந்திரன் காக்கை வடிவில் வந்து கூவியதாகப் பேச்சில்லை. இந்திரன் கௌதம முனிவன் இல்லாத சமயம் பார்த்துக் கௌதம முனிவன் வடிவில் வந்து அவளைத் தழுவினான். அதுகாலை முனிவன் வரக்கண்டு அஞ்சிய இந்திரன் பூனை வடிவம் எடுத்து வெளிப்போந்தான் என்றும், அப்பொழுது நடந்தது உணர்ந்த முனிவன் அவன் உடம்பெல்லாம் ஆயிரம் பெண் குறியாகக் கடவது என்று சபித்தான் என்றும் கம்பனில் பேசப் பட்டுள்ளது.

கம்பனில் சீதை இராமனோடு சித்திரகூடத்தில் இருக்கின்ற போது அவளை விரும்பிய இந்திரன் மகன் ஜயந்தன் என்பான் காக்கை வடிவெடுத்து அவள் மார்பில் கொத்த, அது போது சீதை நடுங்கக்கண்ட இராமன் அம்பு விடுத்து அதன் கண்ணில் ஒன்றை இலக்காக்கினான் என்று பேசப்பட்டுள்ளது.

பூர்வ வாசிட்டத்தில் சொன்ன வண்ணம் கௌதம முனிவர் காக்கையாக இருந்த இந்திரனுக்கு இட்ட சாபம் அவன் மகன் சயந்தனுக்கு வந்து அவன் காக்கையாகிக் கண்ணிழந்தான் என்ற பேச்சில்லை. அகலிகையிடம் பிழை செய்தவன் இந்திரனே. அதற் குரிய தண்டனையை அவன் பெற்றான். சீதையிடம் சயந்தன் செய்த பிழைக்கு இராமனிடம் அவன் தண்டனை பெற்றான்.

வான்மீகத்தில் சயந்தன் காக்கையாகிக் கண்ணிழந்த வரலாறு பேசப்பெற்றுள்ளது இந்திரன் இந்திரனாகவே வந்து அகலிகையைத் துய்க்கின்றான். ஆனால் அவன் பெற்ற தண்டனை அவனுடைய ஆண்குறி இற்று வீழக்கடவது என்பதாகும்.

**ஆனந்த ராமாயணம் – அனுமன் பிறப்பு**

அஞ்சனை. உத்தம புத்திரனை அடைய வேண்டிப் பரம சிவனைக் குறித்துக் கடுமையான தபஸைச் செய்து வந்தாள். ஏழாயிரம் வர்ஷங்கள் வரையில் மௌன விரதத்தை நடத்திக்

கோரமான விரதங்களை அனுஷ்டித்த பின்பு ருத்திரனுக்குக் கிருபை யுண்டாய் அஞ்சனைக்குப் பிரசன்னமானார். "பெண்ணே! உன் தபஸால் திருப்தி அடைந்தேன். உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்" என்றார். அவள் கண்களைத் திறந்து பார்த்து, விருஷ பாரூடராய், உமாஸமேதராய்த் தரிசனம் கொடுப்பது கண்டு, அவருடைய பாதங்களில் நமஸ்கரித்து, "ஸ்வாமி! வஜ்ரதேகத்தை யும் மனோவேகத்தையும், கூர்மையான புத்தியையும் பரம பக்தி யையும், தீர்க்காயுளையும் உடைய ஓர் உத்தம புத்திரன் வேண் டும்" என்று பிரார்த்தித்தாள். அதற்கு உமாபதி, "அஞ்சனே! நானே உனக்குப்புத்திரனாய்ப் பிறக்கிறேன். ராமமூர்த்திக்கு சிச்ருஷை செய்யவேண்டுமென்று எனக்கு வெகுகாலமாய் விருப்ப முண்டு. மேலும் தேவத்ரோகியான ராவணனை ஸம்ஹாரம் செய்யவேண்டும். சகல விஷயத்தையும் உத்தேசித்து, உன்னை மாதாவாய் அடைகிறேன். நீ இந்த மலையில் கையை நீட்டிக் கொண்டு நில். அதில் விழும் பதார்த்தத்தைப் புஜி" என்று அனுக்கிரகித்து மறைந்தார். அப்பொழுது தசரதர் கைகேயிக்குக் கொடுத்த பாயஸத்தை ஒரு பருந்து அபகரித்து அங்கே கொண்டு வந்து அஞ்சனையின் கையில் போட்டது. அதை உடனே அவள் புஜித்தாள். வாயு பகவான் அவளிடத்தில் ஆசை கொண்டு தன் அம்சத்தை அவளுடைய கர்ப்பத்தில் வைத்தார். இப்படிப் பரமசிவன், மஹாவிஷ்ணு, வாயு இம்மூவர்களின் அம்சத்தைக் கர்ப்பமாய்த் தரித்துப் பத்துமாதங்களுக்குப் பிறகு, சித்திரை மாதம் சுக்லபக்ஷம் பௌர்ணமாஸ்யை கூடின சனிவாரத்தில் ஆஞ்ஜநேய ரென்ற மஹா பக்தரைப் பெற்றாள்.

இவ்வரலாற்றில் கூறப்படுர் பல செய்திகள் கம்பரால் அனு மனுக்கு உரியனவாகப் பேசப்பட்டுள்ளன அனுமன் அஞ்சனைக்கு வாயுமகனாகப் பிறந்த செய்தியைக் கம்பர்,

"யான் காற்றின் வேந்தர்க்கு அஞ்சனை வயிற்றில் வந்தேன்
நாமமும் அனுமன் என்பேன்" கம்- அனுமப்படலம் 10

என்று கூறுகின்றார்.

அனுமன், சிவன், திருமால், வாயு போன்ற தெய்வங்களு டைய அம்சங்களைப் பெற்றுப் பேராற்றல் உடையவனாக இருந்தான் என்று ஆனந்த ராமாயணம் கூறும் செய்தி இங்குக் குறிப்பாகக் கூறப்பட்டுள்ளது.

"...................... யார்கொல் இச்சொல்லின் செல்வன்?
வில் ஆர் தோள் இளைய வீர - விரிஞ்சனோ? விடை - வலானோ?
கம்- அனுமப்படலம் 18

"ஆண்டிவன், உலகம் மூன்றும் காலினுல் கடந்து கொண்ட
புண்டரீகக் கண் ஆழிப்புரவலன், பொலன் கொள் சோதிக்
குண்டலவதனம் என்ருல், கூறலாம் தகைமைத்து ஒன்ரே
பண்டைநூல் கதிரோன் சொல்ல, படித்தவன் படிவம்? அம்மா"

- அனுமப்படலம் 32

எனக்கூறும் இப்பாடலில் அனுமன் உலகளந்த திருமாலின் கண்களுக்கும் புலப்படாத பேருருவம் உடையவனானான் என்ற குறிப்பு உள்ளது.

ஆனந்த இராமாயணம் – வாலிவதை

ஒரு சமயத்தில் வாலி அபூர்வமான ஏழு பழங்களைக் கொண்டுவந்து, அந்தக் குகையில் வைத்திருந்தான். பிறகு ஒரு சர்ப்பம் அவைகளைத் தின்பதைக் கண்டு கோபம் கொண்டு, அதன் மேல் ஏழு விருக்ஷங்கள் வளரக்கடவதென்று சபித்தான். அதற்கு அந்த ஸர்ப்பமும் "அவைகளைப் பிளக்கிறவன் உன் இருதயத்தையும் பிளப்பான்" என்று வாலியைச் சபித்தது.

பிறகு சுக்கிரீவன் ராமனைப்பார்த்து "ஸ்வாமி, தேவேந்திரன் வாலிக்கு ஒரு தங்க ஹாரத்தைக் கொடுத்திருக்கிறான். வாலி அதைதரித்துக் கொண்டு எவனுடன் யுத்தம் செய்கிறானோ அவனுடையபலம் வாலியைச் சேரும். முன்பு காச்யபப்பிரஜாபதி கடுந்தவத்தால் சிவனை ஆராதித்து, அந்த மாலையைப் பெற்றார். அதை அவர் இந்திரனுக்குக் கொடுத்தார், இந்திரன் வாலிக்குக் கொடுந்தான். இவனுடன் நீர் யுத்தம் செய்தால், வீரியத்தை இழப்பீர். இதற்கென்ன யுத்தி" என்று கேட்டான். உடனே ராமன் அந்த ஸர்ப்பத்தைப் பார்த்து, "நான் உன் சாபத்தை நீக்கினபடியால் எனக்கு ஓர் உபகாரம் செய். கிஷ்கிந்தைக்குச் சென்று வாலி நித்திரை செய்யும் சமயத்தில் அவனுக்குத் தெரியாமல் அந்த மாலையைக் கொண்டு வா" என்றார். அந்த ஸர்ப்பமும் அப்படியே செய்தது

இக்கதையில் கூறப்பட்ட செய்தி கம்பனில் இல்லை. வான்மீகி ராமாயணத்தில் வெளிப்படையாக இல்லை. வான்மீகியில் காஞ்சன மாலை என்ற ஒரு மாலை வாலியிடம் இந்திரனால் கொடுக்கப் பட்டது என்றும், அது அவனிடம் இருந்தது என்றும் ஒரு குறிப்புண்டு,

ஆனந்த ராமாயணத்தில் கூறுமாறு இம்மாலையைத் தரித்துக் கொண்டு எவன் யுத்தம் செய்கிறானோ அவனுக்கு எதிரியினுடைய பலம் சேரும். இதனால்தான் போலும் வாலி வான்மீகத்தில்

“இராமனை நான் வென்று வருவேன்” என்று கூறுகின்றான். வாலி அந்த மாலையை இறக்கும் தருவாயில் சுக்ரீவனுக்குத் தந்து ‘நான் இறந்தால் இம்மாலையினுடைய ஆற்றல் போய்விடும். அதனால் நீ தரித்துக்கொள்’ என்று தருகிறான். தாரையும் புலம்பும்போது கழுத்திலிருந்த மாலையைக் காணோமே என்று புலம்புகின்றாள். இக்குறிப்பு இருக்கிறதேயன்றி மாலையைத் தரித்தவனுக்கு எதிரியினுடைய பலம் வந்து சேரும் என்ற குறிப்பில்லை. சாபம் காரணமாகப் பாம்பின் மீது ஏழு மரங்கள் முளைக்கக்கடவது என்று வாலி சாபமிட்டான் என்று ஆனந்தராமாயணத்தில் உள்ளது. இக்கருத்து அப்படியே கம்பரில்,

“தெள்ளு நீரிடைக் கிடந்த பார் சுமக்கின்ற சேடன்
வெள்ளி வெண்படம் குடைந்து கீழ் போகிய வேர”
- கம். மராமரப்படலம் 10

என்று ஆதிசேடன் மீது ஏழுமரங்களும் முளைத்திருந்த செய்தி பேசப்பட்டுள்ளது.

அடுத்து ஸர்ப்பம் வாலியை நோக்கி, “ இந்த ஏழு மரங்களை எவன் பிளக்கிறானோ அவன் உன் இருதயத்தையும் பிளப்பான் என்று சபிக்கிறது. இச்செய்தியும் கம்பனில் கிடைக்கின்றது

இராமன் வாலியைக் கொல்வதாக உடன்பட்டு வருகிறபோது சுக்கிரீவன் இராமனுக்கு வாலியைக் கொல்லும் ஆற்றல் உண்டா? என்று ஐயுறாதிருக்க வேண்டி அனுமன் ஒருயோசனை கூறுகின்றான். தான் செல்லும் வழியில் நிற்கின்ற ஏழுமரங்களில் ஒன்றினை இராமன் துளைத்தால் அது, அவன் வாலியைக்கொல்லும் ஆற்றலைக் காட்டும் என்கின்றான். அதற்கு உடன்பட்ட சுக்ரீவன் இராமனிடம்,

“ஏக வேண்டும் இந்நெறி” என இனிது கொண்டு ஏகி,
மாகம் நீண்டன குறுகிட நிமிர்ந்தன மரங்கள்
ஆக ஐந்திேனாடு இரண்டின் ஒன்று உருவ நின் அம்பு
போகவே, என் தன் மனத்து இடர்போம், எனப்புகன்றான்”
கம். மராமரப்படலம் 1

இங்குச் சுக்கிரீவன் அனுமன் முதலியோர் மராமரத்தைத் துளைக்க வேண்டும் என்பதற்குரிய காரணத்தைக் கூறவில்லையென்றாலும் இந்த சர்ப்பம் இட்ட சாபத்தின்படி (ஏழு மரங்களை எவன் துளைக்கின்றானோ அவன் வாலியின் இதயத்தையும் பிளப்பான்) இருக்குமென்று ஊகிக்க இடமுண்டு. கம்பர் இதற்கு

வேறொரு காரணமும் கூறுகின்றார். ஏழு மரங்களும் வாலி, சுக்கிரீவன் என்ற இருவருடைய நெஞ்சுகள் எவ்வளவு வயிர்ப்புடையவோ அவ்வளவு வயிர்ப்புடையன, ஆதலால் இவற்றைத் துளைக்கும் ஆற்றல் இராமன் அம்பிற்கு இருந்தால்தான் வாலியின் மார்பினை ஒரு கணையினால் அறுத்துத் துளைக்க இராமனால் முடியும்.

" வள்ளல் இந்திரன் மைந்தற்கும், தம்பிக்கும் வயிர்த்த
உள்ளமே என, ஒன்றின்' ஒன்று உள் வயிர்ப்பு உடைய "

கம் - மராமரப்படலம்-10

ஆனால் வான்மீகத்தில் வாலி ஏழு ஆச்சா மரங்களைத் தனித்தனியாகவும், ஒன்றாகவும் துளைப்பான் என்றும் அதனால் இராமனும் அவ்வாறு துளைத்தால்தான் ஒத்த பலம் உடையவர்கள் ஆவர் என்றும் பேசப்பட்டுள்ளது ஆனால் எங்கும் வாலியோ, சுக்கிரீவனோ, அனுமனோ வில்லெடுத்துச் சண்டை செய்ததாகவோ ஒன்றைத் துளைத்ததாகவோ குறிப்பில்லை. ஆதலால் கம்பர் கூறியாங்கு அவன் நெஞ்சு அம்மரங்களைப் போல வயிர்ப்புடையது என்று கொள்வதே பொருந்தும். ஒரு மரத்தைத்தான் துளைக்குமாறு இராமனை அவர்கள் கேட்கின்றனர். ஆனால் ஆனந்த ராமாயணத்துச் சாபத்திற்கொப்ப இராமன் ஏழு மரங்களைத் துளைக்கின்றானேயன்றி இவர்கள் வேண்டுகோளுக்கு ஒப்ப ஒரு மரத்தைத் துளைக்கவில்லை. இதனால் கம்பரில் அந்த சாபச் செய்தியும் நிறைவேறுகிறது.

ஆனந்த - இராமாயணம் - இராவணன் வரலாறு

ராவணனுடைய தாயான கைகயி ஒரு நாள் "ராவணா நான் பூஜை செய்யும் விக்ரகம் ஆதிசேஷனுடைய மூச்சுக்காற்றால் பாதாளத்திற்குப் போய்விட்டது. பரமசிவனிடத்திலிருந்து ஓர் ஆத்மலிங்கத்தை வாங்கி வா" என்றாள். ராவணன் சங்கரனிடத்திற்குப்போய் "ஸ்வாமி இரண்டு வரங்களைக் கேட்கிறேன்" என்றான். அவர், "கொடுத்தேன்" என்றார். லங்கேஸ்வரன் "என் தாய் பூஜை செய்ய ஓர் ஆத்ம லிங்கத்தையும் எனக்குப் பாரியையாகப் பார்வதியையும் கொடுக்க வேண்டும்" என்றான். ருத்ரன் அப்படியே கொடுத்து, "இந்த லிங்கத்தைப் பூமியில் வைத்தால் பிறகு எடுக்க முடியாது" என்றார்.

ராவணன் பரம சந்தோஷத்துடன் அவ்விரண்டையும் எடுத்துக்கொண்டு வந்தான். பார்வதி, மகேஸ்வரர் பிரதிக்ஞைக்குக் கட்டுப்பட்டு, "என்னை இராவணனுக்குக் கொடுத்து விட்டாரே

இவனிடத்திலிருந்து தப்புதற்கு என் சகோதரரான விஷ்ணுவே உபாயம் செய்ய வேண்டும்" என்று அவனை நினைத்தாள். உடனே கேசவன் தன் மார்பிலிருக்கும் சந்தனத்தைத்திரட்டி ஒரு பெண்ணை உண்டாக்கி மயனிடத்தில் கொடுத்து வைத்தான்.

பிறகு அவர் பிராமண வேஷத்துடன் இராவணனுக்கெதிரே வந்து, "தசக்ரீவ! எங்கே போய் வருகின்றாய்? உன் தோளிலி ருப்பவள் யார்?" என்றார். அவன் நடந்ததைத் தெரிவித்தான். விஷ்ணு கைகொட்டிச் சிரித்து, "உன்னைப்போன்ற மடையனை நான் பார்த்ததில்லை. ருத்ரன் உன்னை அழகாக ஏமாற்றி விட்டாரே. தன் தேகத்தில் பாதியான பார்வதியைப் பிரித்துக்கொடுக்க முடியுமா? பூமியிலும், சொர்க்கத்திலும் நீ தேடுவாயென்றெண்ணிப் பாதாளத்தில் மயனுடைய வீட்டில் அவளை ஒளித்து வைத்திருக் கின்றான். வேறொரு பெண்ணைப் பார்வதி என்று பெயர் வைத்து உனக்குக் கொடுத்து விட்டான். பாதாளம் உன் வீடாகையால் அங்கே நீ தேடமாட்டாயென்று அவருக்கு நிச்சயமாய்த் தெரியும்" என்றார்.

ராவணன் அதை நம்பிப் பரமசிவனிடத்திற்குத் திரும்பி வந்து, "ஓய்! இப்படி என்னை மோசம் செய்வது நியாயமா? இந்த மாயப்பெண்ணை நீரே வைத்துக்கொள்ளும். பார்வதியை நீர் ஒளித்து வைத்திருக்குமிடம் எனக்குத் தெரியும்" என்று பாதாளத்திற்குப் போனான். வழியில் தேகோபாதையைத் தீர்க்க எண்ணி லிங்கத்தை யாரிடத்தில் கொடுக்கலாமென்று திரும்பிப் பார்த்தான். விஷ்ணு ஒரு பிரம்மச்சாரி பிராமணனாக அங்கே வந்து கொண்டிருந்தார். அவரிடத்தில் அந்த லிங்கத்தைக் கொடுத்துக் கீழே வைக்க வேண்டாமென்று எச்சரித்துப் போனான். திரும்பி வருவதற்குள் மூன்றுதரம் அப்பிராமணர் கூப்பிட்டார். அதற்குள் இராவணன் வர முடியவில்லை. அவர் அதைக் கீழே வைத்துப்போனார். உடனே அது வேரூன்றி விட்டது ராவணன் வந்து பார்த்தான். சங்கரன் சொன்னபடி அது வேரோடி அசைக்க முடியாமலிருந்தது. அவ்விடத்திற்கு இப்போது கோகர்ண க்ஷேத்திரம் என்று பெயர்.

பாதாளத்தில் மயனுடைய வீட்டில் அதி ரூப லாவண்யமுள்ள ஒரு பெண்ணிருக்கக்கண்டு அவளே பார்வதி என்று எண்ணினான். அவளைத்தனக்கு மனைவியாகக்கொடுக்கும்படி மயனை வேண்டி

னான். மயன் அப்படியே செய்து சீதனமாக ஒரு சக்தி ஆயுதத்தையும் கொடுத்தான். லக்ஷ்மணன் மேல் பிரயோகித்தது இதுவே. *

இங்குக் கூறிய இவ்வரலாற்றுச் செய்திக்குக் கம்பராமாயணத்திலோ, வான்மீகி ராமாயணத்திலோ முழு ஆதாரம் இல்லையென்றாலும் மண்டோதரி மயன் மகள் என்பதும், அவளை இராவணன் மணந்தான் என்பதும் இரு ராமாயணங்களிலும் காணக்கிடைக்கின்ற செய்தி.

கைகசி என்ற அவனுடைய தாய்க்காகச் சிவனிடத்து ஆத்மலிங்கத்தை வேண்டி வந்தபோது அது திருமால் சூழ்ச்சியால் ஓரிடத்து இடம் பெற்று விட்டது என்றது போன்ற செய்தி விபீஷணன், ராமன் வழிபட்ட திருமாலைத் தான் வழிபடவேண்டுமென்று வாங்கி வந்தபோது, அது திருவரங்கத்தில் விநாயகர் சூழ்ச்சியால் இடம்பெற்று விட்டது என்றதோர் வரலாறு உண்டு.

இச்செய்தி இட்சுவாகு குலதனம் என்ற நூலில் சத்திய விரதன் என்ற திராவிட தேசாதிபதியாய இராஜரிஷியும் அவனோடு சில இராஜரிஷிகளும் காவிரி, கொள்ளிடம் என்ற ஆற்றிடைக் குறையில் விடணனால் கொணர்ந்து வைக்கப்பெற்று, அவன் காலைக்கடன் முதலியவற்றை மேற்கொண்டபோது இவ் விருடிகள் திருமாலின் விக்ரகத்தைக் கண்டு, பக்திப் பரவசத்தால் கொண்டாட அது கண்ட வீடணன், இத்தகைய திவ்யத்திருமேனியைத் தரையில் வைத்து விட்டோமே நம்மினும் இவர்களே இத் தெய்வத்தை ஆராதிக்கத்தக்கவர் என்று நினைத்துச் செல்ல அச் சத்திய விரதன் ஆங்குக் கோவில் எடுத்ததாகக் கூறும்.

அனுமன் இலங்கையில் சீதையைத்தேடியபோது மண்டோதரியைக்கண்டு அவள் சீதையென்று ஐயுற்று பின் தெளிகின்றான் இவ்வாறு அனுமன் இருவருக்கும் வேறுபாடு காணமாட்டாது, இருந்ததாக வந்த குறிப்பு ஆனந்த ராமாயணத்தில் திருமால் தன் மார்பிலிருந்த சந்தனத்தால் ஒரு பெண்ணை உருவாக்கி அவளை மயனிடத்துக் கொடுத்து அவள்தான் பார்வதி என்று இராவணனை நம்பச் செய்ததிலிருந்து விளங்குகிறது.

---

* ஆர். ரா. மந்தோரி 54 - 154

### ஆனந்த ராமாயணம் – கும்பகர்ணன் பெற்ற வரம்

கும்பகர்ணன் தேவேந்திரப்பதவியை அடைய விரும்பினதால் ஸரஸ்வதி அவனுக்கு வாக்கில் பிரவேசித்து நித்யத்வமென்ற வரத்திற்குப்பதிலாக நித்ரா என்று கேட்கும்படித் தேவர்கள் செய்தார்கள்.

கம்பராமாயணத்தில் இச்செய்தி உத்தரகாண்டத்தில் காணப்படுகிறது. கம்பர் கும்பகருணனைச் சொல்கின்றபோது நெடுங்காலம் உறங்குபவன் என்று குறிப்பிடுகின்றார். ஆனால் அவ்வாறு அவன் உறங்கக்காரணம் பிரமன் சூழ்ச்சி என்ற குறிப்பு கம்பர் வாக்கால் இல்லை. அதற்கு வேறாகப் பெரு வரம் உடையவன் போல அவன் பேசப்பெறுகிறான்.

“ தான் உயர்ந்த தவத்தினன்
வான் உயர்ந்த வரத்தினன் ” — கும்பகர். வதைப்படலம்-115

“ சூலம் உண்டவன் ஆழிவாய்
ஞாலம் உண்டவ! நல்கினன் ” — கும்பகர். வதைப்படலம்-117

சரஸ்வதி சூழ்ச்சி செய்தாள் என்ற குறிப்பு கம்பனில் இல்லை.

### ஆனந்த ராமாயணம் - கும்பகர்ணனும் விபீஷணனும்

கும்பகர்ணன் யுத்தம் செய்ய ஆரம்பிப்பதற்கு முன்பு விபீஷணன் அவனை நமஸ்கரித்து, “அண்ணா! சீதையைத் திருப்பிக் கொடுக்கும்படி பலவிதமாகச்சொல்லியும் இராவணன் கேட்காமல் என்னை லங்கையிலிருந்து துரத்திவிட்டான். மகாவிஷ்ணுவே ராமனாக வந்திருக்கிறான் என்று தெரிந்து அவனைச் சரணமடைந்து உத்தம கதியைப்பெற்றேன். தாங்களும் அப்படியே செய்யலாகாதா? ” என்றான்,

கும்பகர்ணன், “ தம்பி! நல்ல காரியம் செய்தாய், சிரஞ்சீவியாக வாழ்ந்து கொண்டிரு. எங்களுக்கு உத்திரகிரியைகள் செய்து நல்ல கதி அடைவிப்பதற்கு நீ ஒருவனே மிகுந்திருக்கிறாய். உன்னால் ராக்ஷஸ குலம் நீடித்திருக்கும். நீ சொன்ன விஷயங்கள் எனக்கும் தெரியும். நானும் கூடிய வரையில் அண்ணனுக்குப் போதித்தேன். அவன் கேட்காததால் என் கடமையைச் செய்தேன். யுத்தத்தில் அவன் என்னையே நம்பியிருக்கின்றான். எனக்குப் பிரபுவாயும், சேனாதிபதியாயும் இருக்கிற அவனால் வளர்க்கப்பட்ட இந்த தேகத்தையும் உயிரையும் அவனுடைய காரியத்திலேயே

ஹோமம் செய்யக்கடமைப்பட்டவன். இதுவரை எந்த யுத்தத்திலாவது நான் அவனுடன் நின்று ஜெயம் பெறாமல் இருந்ததில்லை ஆகையால் நான் இராவணனை விட்டு இராமனைச் சரண் அடைய முடியாது. என் க்ஷத்திரிய தருமத்தை அனுசரித்து சக்தி உள்ள வரை யுத்தம் செய்து வீர சுவர்க்கத்தை அடைவேன். இராமனுடைய கையால் மரணமடைந்தால் எனக்கும் முக்தி கிடைக்கும். நீயோ அப்படியில்லை. என்னைப்போல யுத்தம் செய்ய உன்னால் முடியாது. அந்த விஷயத்தில் இராவணன் உன்னை நம்பியிருக்கவும் இல்லை. ஆகையால் உனக்கு அந்தக்கடமை ஏற்படவும் இல்லை. க்ஷேமமாக இரு. நான் யுத்தத்தில் புகுந்தால் வீராவேசம் கொண்டு இன்னானென்று தெரியாமல் கொல்வேன். என் கண்ணில் படாதே" என்றான். *

இதில் முதல் பகுதியில் காணப்பெறும் செய்தி கம்பனில் அப்படியே உள்ளது.

விபீடணன் தனக்கு இராமன் உத்தமகதியைத்தந்ததாகவும் கும்பகர்ணன் வந்தால் அவனுக்கும் அக்கதியை அவன் தருவானென்றும். கூறுகிற கருத்து கம்பனில் அப்படியே பேசப் பட்டுள்ளது.

> "இருளுறு சிந்தையேற்கும் இன் அருள் சுரந்த வீரன்
> அருளும் நீ சேரின், ஒன்றோ, அவயமும் அளிக்கும், அன்றி
> மருளுறு பிறவி நோய்க்கு மருந்தும் ஆம், மாறிச்செல்லும்
> உருளுறுசகட வாழ்க்கை ஒழித்து, வீடு அளிக்கும் அன்றே"

கும்பகர்ணன் வதைப்படலம்-134

அடுத்துக் கும்பகர்ணன், 'தம்பி! நல்ல காரியம் செய்தாய். சிரஞ்சீவியாக வாழ்ந்துகொண்டிரு. எங்களுக்கு உத்திரகிரியைகள் செய்து நல்லகதி அடைவிப்பதற்கு நீ ஒருவனே மிகுந்து இருக்கிறாய். உன்னால் ராக்ஷஸ குலம் நீடித்திருக்கும்" என்று ஆனந்த ராமாயணத்தில் பேசப்படுகிறது.

கம்பராமாயணத்தில் இதே கருத்து பேசப்படுகின்றது. கும்பகர்ணன் வீடணனை இராமன் பக்கம் போகுமாறு கூறுதற்குரிய :காரணம் சொல்லும்போது,

> "முந்தி வந்து இறைஞ்சினனே, மோந்து, உயிர் மூழ்கப்புல்லி,
> 'உயர்ந்தனே, ஒருவைபோனய்' என மனம் உவக்கின்றேன்"

கும்பகர்ணன் வதைப்படலம்-125

---

* ஆ. ரா - 1 - 11

"போதி நீ, ஐய! பின்னைப் பொன்றினர்க்கு எல்லாம் நின்ற
வேதியர் தேவன் தன்னை வேண்டினை பெற்று, மெய்ம்மை
ஆதிநூல் மரபினாலே, கடன்களும் ஆற்றி, ஏற்றி
மாதுயர் நரகம் நண்ணா வண்ணமும் காத்தி மன்னோ!

கும்ப வதைப்படலம்-160

என்று கூறுகின்றான்,

அடுத்து, நீ சொன்ன விஷயங்கள் எனக்கும் தெரியும். நானும் கூடியவரையில் அண்ணனுக்குப் போதித்தேன். அவன் கேட்காததால் என் கடமையைச் செய்தேன் (ஆ.ரா.) என்கிறான். இதே கருத்தைக் கம்பராமாயணத்திலும் கும்பகருணன்,

"கருத்திலா இறைவன் தீமை கருதினால் அதனைக்காத்துத்
திருத்தலாமாகினன்றே திருத்தலாம்"

கும்ப. வதைபட 152

எனப் பேசுகின்றான்.

மேலும் ஆனந்த ராமாயணத்தில் "யுத்தத்தில் அவன் என்னையே நம்பியிருக்கிறான். எனக்குப்பிரபுவாயும், அரசனாயும், அண்ணனாயும், தோழனாயும், சேனாபதியாயும் இருக்கிற அவனால் வளர்க்கப்பட்ட இந்த தேகத்தையும், உயிரையும் அவனுடைய காரியத்திலேயே ஹோமம் செய்யக் கடமைப் பட்டவன்." என்று வருகிறது.

இதே கருத்தைக் கம்பர் கும்பகருணன் வாயிலாக,

"நீர்க்கோல வாழ்வை நச்சிநெடிதுநாள் வளர்த்துப்பின்னைப்
போர்க்கோலம் செய்துவிட்டாற்கு உயிர் கொடாது
அங்குப் போகேன்"

கும்ப. வதைப். பட 150

". . . . . . . . . .                பொருதொழிற்கு உரியராகி
ஒருத்தரின் முன்னம் சாதல் உண்டவர்க்கு உரியதம்மா"

கும்ப வதை படலம் 152

எனச்சொல்கிறார்.

கம்பராமாயணத்தின்படி கும்பகருணன், இராவணன் திக்விஜயம் செய்த காலம் தோறும் சேனைத்தலைவனாக இருந்து கூற்றுவன் முதலியோரை வெல்லுவதற்குக் காரணமாக இருந்தான். அதுகாலை வீடணன் இராவணனுக்கு அமைச்சனாக இருந்து நாடாண்டு ஆற்றக் கடவ கடமைகளை யெல்லாம் ஆற்றி வந்தான்.

அதனால் இராவணன் போர் வருவழியெல்லாம் கும்பகருணனை நம்புவது வழக்கம் அதனால்தான் முதல்நாள் போரில் தோற்ற இராவணனிடம் மகோதரன், "என் இனி கும்பகருணனை இகழ்ந்தது எந்தாய்" என்று கேட்டபோது கும்பகருணனை அழைத்துப் போர்க்கோலம் செய்து இராமனோடு பொருதற்கு அனுப்புகின்றான். கும்பகருணன் இராவணனுக்கு அறிவுரை கூறியபோது,

"உறுவது தெரிய அன்று உன்னைக் கூயது
அறிவுடை அமைச்சன் நீ அல்லை"

கும்ப. வதைப்பட 85

என்று பேசுவதாலும்

"மறங்கிளர் செருவினுக்கு உரிமை மாண்டனை
பிறங்கிய தசையொடு நறவும் பெற்றனை"

கும்ப. வதைப்பட 86

என்று கூறுவதாலும் இவன் படைத்தலைவனாக இருந்த செய்தி தெரிகின்றது. இதனால்தான் இராமன் பக்கம் வருமாறு அழைத்த வீடணனிடம் 'இராமனைச் சார்ந்திருப்பது உனக்குத் தக்கது' என்றும் சாதல் தனக்குப் புகழ் என்றும் "உனக்கது தக்கதேயால்" எனக்கது புகழதேயால்" என்றும் கும்பகருணன் கூறுகின்றான்.*

அடுத்துப் பொருதொழிற் குரியவர் அரசனுக்கு முன்னர் சாதல்தான் உரியதேயன்றி அமைச்சர்களைப்போல ஓரிடத்துப் பொருந்தி வாளா இருப்பது உரியது அன்று என்பதையும் எடுத்துக் கூறுகின்றான். *

இவ்வாறு கம்பர் ஆனந்த ராமாயணத்தில் கண்ட பல நுட்பமான கருத்துக்களை இங்கே பெய்திருத்தலைக் காணலாம்.

ஆனந்த இராமாயணம் - மந்தோதரியின் இறுதி

"மந்தோதரி தன் பர்த்தாவின் தேகத்துடன் அக்னிப் பிரவேசம்செய்து வைகுண்டமடைந்தாள்."

கம்பராமாயணத்தில் இராவணன் உடல்மீது வந்து வீழ்ந்து புலம்பி, உயிர்த்து, உயிர் துறந்ததாகவும், பின் இருவர் உடலையும் ஈமத்து ஏற்றி வீடணன் இறுதிக்கடனைச் செய்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது.

---

* கும். வதை. 151

* கும். வதைப்பட 152

"பொன்- தழைத்த பொரு அரு மார்பினைத்
தன் தழைக் கைகளால் தழுவித் தனி
நின்று அழைத்து உயிர்த்தாள், உயிர் நீங்கினாள் "

மண்டோதரி புலம்புறு படலம்-29

ஆனந்த இராமாயணம் - பரதன் தீப்புகத்துணிதல்

பரதன் பதினான்கு வர்ஷங்களின் முடிவில் ராமன் வராதைதக்கண்டு சத்ருக்கனனை அழைத்து, 'ராம, லக்ஷ்மணர்கள் யுத்தத்தில் இறந்தார்கள் என்று எண்ணுகின்றேன். பிழைத்திருந்தால் இன்று தவறாமல் இங்கு வருவார்கள் ஸுரியாஸ்தமனம் வரையில் பார்த்துவிட்டு அக்னிபிரவேசம் செய்யப்போகிறேன். ராமனுக்குச் சகாயம் செய்வதற்காக நான் வருவித்த அரசர்களையும், சைன்யங்களையும் அழைத்துக் கொண்டு லங்கைக்குச் சென்று ராக்ஷசர்களை ஜெயித்து ஸீதையை மீட்டு வா. எங்களுக்கு உத்திரகிரியைகளைச் செய்வதற்கு நீ ஒருவனே மிகுந்திருக்கிறாய் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஜாக்கிரதையாக நட' என்று ஆக்ஞாபித்தார். ஸுரியாஸ்தமன காலம் நெருங்கினவுடன் பரதன் எல்லோரிடத்திலும் உத்திரவு பெற்றுக்கொண்டு பெரியோர்களை நமஸ்கரித்து ராமலக்ஷ்மணர்களையும், ஸீதையையும் இருதயத்தில் தியானித்து ஆகாசத்தை அளாவி எரியும் அக்னியைப் பிரதக்ஷிணம் செய்தார். அப்பொழுது கௌஸல்யை முதலியவர்களும் பந்து ஜனங்களும் நகரத்தார்களும் ஹா! ஹா! என்று கதறினார்கள். அப்பொழுது மாருதி வாயு வேக மனோவேகமாக வந்து வெகுதூரத்திலிருக்கும் போதே "வந்தான் ரகுநாதன்" என்று பலமுறை கர்ஜித்துக்கொண்டு, பிரிய சமாச்சாரமான மழையைப் பொழியும் மேகத்தைப்போல ஆகாச வீதியில் தோன்றி பரதனுக்கெதிரே குதித்தார் *

ஆனந்த ராமாயணத்தில் காணப்பெறும் இச்செய்தியில் எரிபுகநின்ற செய்தியும் அனுமன் வந்த செய்தியும் கம்பராமாயணத்தில் பேசப்படுகின்றன இராம. இலக்குவர்கள் அரக்கரோடு போரிட்டு இறந்து பட்டிருக்கக்கூடும் அதனால் வரவில்லையென்றும், தான் இறக்கப் போவதாகவும், சத்ருக்கன் படையெடுத்துச் சென்று அரக்கர்களை வெல்லவேண்டுமென்று கூறி எரிபுக நின்ற போது அனுமன் வந்ததாகவும் கூறும் செய்தி இல்லை. பதினான்கு ஆண்டுகள் முடியும் தருவாயில் இராமனைக் காணவில்லையே

---

* ஆ. ரா. 1-12

என்ற ஏக்கறவால் பரதன் தீப்புக நின்றகாலை அனுமன் வந்ததாகக் கம்பர்,

"என்று தீயினை எய்தி, இரைத்து எழுந்து
ஒன்று பூசலிடும் உலகோருடன்
நின்று பூசனை செய்கின்ற நேசற்கு
குன்று போல் நெடு மாருதி கூடினன்"

மீட்சிப்படலம் 80

ஆனந்த ராமாயணத்தில் "வந்தான் ரகுநாதன்" என்று அனுமன் பலமுறை கர்ஜித்துக் கொண்டு வந்தான் என வந்துள்ளது.

கம்பராமாயணத்திலும் இச்செய்தி அப்படியே,

"ஐயன் வந்தனன்; ஆரியன் வந்தனன்;
மெய்யின் மெய் அன்ன நின் உயிர்வீடினால்,
உய்யுமே, அவன்? என்று உரைத்து, உள்புகா,
கையினால் எரியைக் கரி ஆக்கினான்.

மீட்சிப்படலம் 82

என்று வருகிறது.

ஆனந்தராமாயணம் — தசரதர் வருகை

"முன் உனது பட்டாபிஷேகத்திற்கு முகூர்த்தம் வைத்து அது நடக்கவில்லை, அந்தக் கவலையால் உயிரை விட்டேன். இப்பொழுதாவது அதைப்பார்த்துக் களிக்கும் பாக்கியம் செய்தேன்" என்றார் தசரதர். அங்கிருந்த எல்லோரும் அவருக்கு உபசாரம் செய்ய, தேவ கணங்களுடன் ஸ்வர்க்க லோகம் சென்றார்.

இச்செய்தி கம்பராமாயணத்தில் பட்டாபிஷேகக்காலத்தில் பேசப்பெறவில்லை. இராவண வதம் முடிந்தபின்றைச் சீதை தீப் புகுந்து தன் கற்பின் தூய்மை காட்டியபோது, சிவபெருமான் கூறத் துறக்கத்திலிருந்த தயரதன் இலங்கைக்குப் போந்து, இராமனிடம், இராமனைப் போன்ற தக்க மகனைப்பெற்றதால் தெய்வம் தொழத்தகும் பேறு தனக்குக் கிடைக்கப் பெற்றதை,

"பண்டு நான் தொழும் தேவரும் முனிவரும் பாராய்,
கண்டு கண்டு எனைக் கைத்தலம் குவிக்கின்ற காட்சி,
புண்டரிகத்துப் புராதனன் தன்னொடும் பொருந்தி
அண்ட மூலத்து ஓர் ஆசனத்து இருத்தினை, அழகா!"

வீடணன் முடிசூட்டுப்படலம் 106

என்று கூறுகின்றார்.

ஆனந்த ராமாயணத்தில் கூறிய வண்ணம் தசரதன் துறக்கத்திலிருந்து வந்த செய்தி கம்பரால் கூறப்பட்டாலும், கூறப்பட்ட இடம் வேறு; செய்தியிலும் சில மாற்றங்கள் உண்டு.

### ஆனந்தராமாயணம் - வண்ணான் கதை

அந்த நகரத்தில் ஒரு வண்ணான் தன் பாரியையிடத்தில் கோபித்து அவளை வீட்டிலிருந்து அடித்துத் துரத்தினான். அவள் பெற்றோர் வீட்டில் சில நாளிலிருந்து பிறகு பந்துக்கள் ஸமாதானம் செய்ததால் புருஷனுடைய வீட்டிற்கு வந்தாள். அவன் கோபம் கொண்டு, "பிறருடைய வீட்டிலிருந்தவளை நான் மறுபடியும் தொடுவேனா? இராவணனால் பத்து மாதங்கள் வரையில் தன் அந்தப்புரத்தில் வைக்கப்பட்ட சீதையை மறுபடியும் அழைத்துக் கொண்ட ராமனென்று என்னையும் நினைத்தனையோ!" என்றான்.

இந்த வண்ணான் கதை தமிழ் உத்தரகாண்டத்தில் இல்லை. வான்மீகத்தில் பட்டணத்து ஜனங்கள் குறை கூறுவதாக உள்ளதே தவிர வண்ணான் குறை கூறுவதாக இல்லை.

### உத்தர ராம சரித்திரம்

"இராவணனுடைய அபிஷேக காலத்தில் அவருடைய உத்தம ஸ்திரீகள் ஸந்தோஷிப்பார்கள். பரதனுக்கு நேரும் கஷ்டத்தால் உன் நாட்டுப்பெண்கள் வருந்துவார்கள்." என்று அயோத்தியா காண்டத்தில் மந்தரை கைகேயிக்குச் சொல்லுகிறாள். மேலும், ஸுந்தர காண்டத்தில், "விசாலமான நேத்ரங்களையுடைய ஸ்திரீகளுடன் தாங்கள் பயமற்றுக் கவலையின்றிச் சகல போகங்களையும் அனுபவிக்கப் போகிறீர்கள்" என்று சீதை கூறுகின்றாள். உத்தம ஸ்திரீகளால் பல விதமாய்ப் பூசப்பட்ட புஜம் என்று இங்கே சொல்வதாலும் இராமனுக்குப் பல பாரியைகள் இருக்க வேண்டும்.

இங்கு இராமனுக்குப் பல மனைவியர் இருந்த குறிப்பு பேசப்பெறுகிறது சீதையை மணம் புரிந்த காலத்து, "இந்த இப் பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்" என்ற ஏக பத்தினி விரதம் பூண்டவன் அவன். வான்மீகத்தில் உத்தரராம சரித்திரத்தை ஒட்டி இராமனுக்குப் பல மனைவியர் இருந்த குறிப்பு மூன்று இடங்களில் பேசப்பட்டுள்ளது.

---

# புத்தர் ஜாதகக் கதைகள் எனவழங்கும் போதிசத்துவர் கதைகள்.

(பாலி மொழியிலிருந்து துர்க்காதாஸ் எஸ்.கே. சாமி என்பவரால் மொழி பெயர்க்கப் பட்டது)

முன்னொரு காலத்தில் காசிமா நகரத்தில் மாமன்னனான தசரதன் தீயவழிகளைத் துறந்து நீதி நேர்மையுடன் அரசாண்டு வந்தான். அவனுடைய பதினாறாயிரம் பத்தினிகளில் மூத்தவளும், பட்டத்துராணியுமானவள், இரண்டு ஆண் குழந்தைகளையும் ஒரு பெண் குழந்தையையும் பெற்றாள். மூத்தமகனுக்கு இராமபண்டிதன் (அதாவது அறிஞன் இராமன்) என்றும் இளைய மகனுக்கு இளவரசன் இலக்கண குமாரன் (அதாவது அதிர்ஷ்டசாலி) என்றும் மகளுக்குச் சீதாதேவி என்றும் பெயரிட்டு அழைத்து வந்தார்.

சில காலத்திற்குப் பிறகு பட்டத்து ராணி இறந்து போனாள். தசரதச் சக்ரவர்த்தி மிகவும் கவலையில் ஆழ்ந்து துயரப்பட்டுக் கொண்டிருந்தார். அரசிக்குரிய ஈமக்கிரியைகளை யெல்லாம் செய்து முடித்ததும். அமைச்சர்களின் தூண்டுதலினால் வேறொருத்தியைப் பட்டத்து ராணியாக்கிக் கொண்டார். அவள் மன்னரின் மனதிற்குப் பிரியமானவளாகவும் காதலுக்கு இசைந்தவளாகவும் இருந்தாள். சிலகாலம் கழிந்தபிறகு அவளும் கர்ப்பந்தரித்து ஆண் மகவொன்றைப் பெற்றெடுத்தாள். அந்த மகனுக்கு இளவரசன் பரதன் என்று பெயர் சூட்டப்பட்டது.

அந்தப் பரதன் மீது மன்னன் தசரதன் அளவில்லாத பாசம் கொண்டிருந்ததால் ஒரு நாள் பரதனின் அன்னையை அழைத்து "தேவி, நான் உனக்கு ஒரு வரங்கொடுக்கிறேன். உனக்கு எது வேண்டுமானாலும் கேள்" என்று கூறினான். அவன் கொடுத்த வரத்தைப் பட்டத்தரசி ஏற்றுக்கொண்டாள். ஆனால் சமயசந்தர்ப்பம் அறிந்து தான் விரும்புவதைக் கேட்டு அந்த வரத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று எண்ணிக் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தாள்.

அவளுடைய மகன் பரதனுக்கு ஏழு வயதானவுடன் அவள் தசரதச் சக்ரவர்த்தியிடம் சென்று "பிராணபதி! நீங்கள் என் குமாரனுக்கு ஒரு வரமளிப்பதாக முன்பு வாக்களித்தீர்கள். அதை இப்பொழுது வழங்குங்கள்" என்று கேட்டாள்.

அதற்குத் தசரதன் "எது வேண்டுமோ கேள்" என்றான்.

"பிரபோ! என் மகன் பரதனுக்கு இந்த ராஜ்யத்தின் அரசாட்சியைக் கொடுங்கள்!" என்று கேட்டாள் பட்டத்தரசி.

உடனே தசரத மன்னன் கோபத்துடன் "அடிபாவி! என்னுடைய மற்ற இரண்டு பிள்ளைகளான இராமனும் இலக்கணனும் ஜோதி விளக்குகள் போலப் பிரகாசிக்கின்றனர். நீ அவர்களைக் கொன்றுவிட்டு உன்னுடைய மகனுக்கு ராஜ்யத்தைக் கேட்பாயா?" என்று சீறினார்.

பரதனின் தாய் பயந்து நடுங்கித் தன் அந்தப்புரத்திற்கு ஓடிவிட்டாள். ஆனால் அன்று முதல் பழைய வரத்தையே திரும்பத் திரும்பப் பிடிவாதமாகப் பல முறை கேட்டு வந்தாள். அரசனால் அந்த வரத்தை வழங்குவதற்கு இயலவில்லை. அவன் தனக்குள் எண்ணமிடலானான். "பெண்கள் நன்றியற்றவர்கள்; கொடுமைகள் இழைப்பவர்கள். அரசுரிமைக்குரிய என் பிள்ளைகள் இருவரையும் கொல்வதற்காக இந்த ராணி போலிக்கடிதம் தயாரிப்பாள். அல்லது கைக்கூலி கொடுத்தாவது யாரையாவது ஏவி அவர்களைக் கொலை செய்யும்படித் தூண்டுவாள்! இவ்வாறு நினைத்த தசரத மன்னன் தன் இரு மைந்தர்களான இராம பண்டிதனையும் இலக்கண குமரனையும் வரவழைத்து நடந்தவற்றையெல்லாம் அவர்களிடம் கூறிவிட்டு, "என் மைந்தர்களே! நீங்கள் இங்கே அரண்மனையில் வாழ்ந்திருந்தால் உங்களுக்கு ஏதேனும் கேடுகள் சம்பவிக்கும். எனவே அடுத்த நாட்டுக்கோ அல்லது காட்டுக்கோச் சென்றுவிடுங்கள். என்னுடைய காலம் முடிந்து என் உடல் எரிக்கப் பட்டவுடன் நீங்கள் நமது நாட்டுக்குத் திரும்பி வந்து உங்களுக்குரிய அரசுரிமையைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று கூறினான். பிறகு தன் நாட்டிலுள்ள நிமித்திகர்களை வரவழைத்துத்தன் ஆயுட்காலத்தைக் கணித்துச் சொல்லும்படி கேட்டான். இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு மேல் அரசன் உயிர் வாழான் என்று நிமித்திகர்கள் அறிவித்தார்கள். உடனே தசரதன் மைந்தர்கள் இருவரையும் அழைத்து, "குமாரர்களே! இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு உங்கள் கொற்றக்குடையை உயர்த்துங்கள்" என்று கூறினான். அவ்வாறே மைந்தர்கள் இருவரும் வாக்குறுதி அளித்து விட்டு அரண்மனையிலிருந்து அழுது கொண்டே தங்கள் தந்தையைப் பிரிந்து சென்றனர். அப்போது மகள் சீதாதேவி "நானும் என் சகோதரர்களுடன் போகிறேன்" என்று புறப்பட்டுத் தன் தந்தையிடம் விடைபெற்றுக் கொண்டு அழுது கொண்டே சென்று விட்டாள்.

உடன் பிறந்த மூவரும் ஊர் மக்கள் அன்புடன் பின் தொடர நடந்தனர். ஊர் எல்லையை அடைந்ததும் மூவரும்

மற்றவர்களைத் திருப்பி அனுப்பிவிட்டு இமயமலைச் சாரலை அடைந்தனர். அங்கு, தண்ணீர் வசதிகளும் நல்ல காட்டுக்கனிகளும் கிடைக்கக்கூடிய இடமாகத் தேர்ந்தெடுத்துக் குடிசை கட்டி, ஒரு பர்ணசாலையை அமைத்துக் கொண்டு அதில் தங்கிக் காட்டுக் கனிகளைப் புசித்து வாழ்ந்து வரலாயினர்.

இலக்கண குமாரனும் சீதையும் மூத்த சகோதரனான இராம பண்டிதனை நோக்கி "நீங்கள் இப்போது எங்கள் தந்தையின் ஸ்தானத்தை வகிக்கிறீர்கள். ஆகவே நீங்கள் ஆசிரமத்திலே தங்கியிருங்கள். நாங்கள் வெளியே போய் காய், கிழங்கு வகைகளைப் பறித்து வந்து உங்களுக்கு உணவு படைக்கின்றோம்" என்று கூறினார்கள். அதற்கு உடன்பட்டு இராம பண்டிதன் இருந்த இடத்தை விட்டு அகலாமல் பர்ணசாலையில் இருந்து வந்தார். உடன் பிறந்த மற்ற இருவரும் காட்டுக்குச் சென்று பழம் பறித்து வந்தனர்.

இவ்விதமாக அவர்கள் காட்டுப்பழங்களைப் புசித்து வரும் காலத்தில் தசரத மன்னன் தன் மைந்தர்களைப் பிரிந்த துயரத்தால் ஒன்பதாவது வருஷத்தில் இறந்து விட்டான். அவனது ஈமச்சடங்குகள் முடிந்ததும் பட்டத்தரசி பூச்சக்கரக்குடையைத் தன் மகன் பரதனின் தலைமீது தான் உயர்த்த வேண்டும் என்று கட்டளையிட்டாள். உடனே அமைச்சர்கள், "குமாரர்கள் காட்டில் வாசஞ் செய்கின்றனர். அவர்கள் அனுமதிக்கமாட்டார்கள்" என்று கூறிப் பரதனுக்குப் பட்டம் கட்ட ஒப்புக்கொள்ளவில்லை.

இளவரசன் பரதன் அவர்களை நோக்கி, "நான் என் தமையனார் இராமபண்டிதரைக் கானகத்திலிருந்து அழைத்து வந்து அவருடைய தலைக்கு மேல் இந்தக் கொற்றக்குடையை உயர்த்துவேன்" என்று கூறிவிட்டு அரச சின்னங்கள் ஐந்துடனும் நால்வகைப் படைகளுடன் புறப்பட்டு இராமன் தங்கியிருந்த இடத்தை நோக்கிச் சென்றான்.

சற்று தூரத்தில் தனது படைகளை நிறுத்தி விட்டுப் பரத குமாரன் மந்திரிகளுடன் சென்று பர்ணசாலையை அடைந்தான். அப்பொழுது இலக்கணனும் சீதையும் காட்டிற்குச் சென்றிருந்தனர். பர்ணசாலையின் வாசலில் இராம பண்டிதன் மட்டும் வார்த்து நிறுத்தப்பட்ட தங்கச் சிலைபோல் நிம்மதியாக உட்கார்ந்திருந்தான்.

இளவரசன் பரதன் அவனிடம் சென்று வணங்கி, அவனுக்குப்பக்கத்தில் நின்று கொண்டு இராஜ்ஜியத்தில் நடைபெற்ற

வையெல்லாம் கூறிவிட்டு தமையனின் பாதங்களில் தன் அமைச்சர்களுடன் விழுந்து விம்மி விம்மி அழுதான். இராமபண்டிதன் வருந்தவுமில்லை, அழவுமில்லை. தன் உணர்ச்சியில் எந்தவிதமான மாற்றமும் இன்றி உட்கார்ந்திருந்தான். பரதன் அழுது ஓய்ந்து ஒருபுறம் உட்கார்ந்தான்.

வெளியே போயிருந்த இலக்கண குமரனும் சீதையும் பொழுது சாயும் நேரத்தில் காட்டுப் பழங்களுடன் ஆசிரமத்திற்குத் திரும்பினார்கள். அவர்களைக் கண்ட இராமபண்டிதன் தன் மனதிற்குள் சிந்தித்தான். "இவர்கள் இருவரும் இளையவர்கள், என்னைப் போல் பூர்ண ஞானமும் பக்குவமும் பெற்றவர்கள் அல்லர். தகப்பனார் இறந்து விட்ட செய்தியை இவர்கள் திடீரென்று கேள்விப்பட்டால் தாங்க முடியாத துக்கத்தை அடைவார்கள். இதனால் இவர்கள் இதயங்கள் கூட வெடித்துவிடக்கூடும். எனவே நான் ஏதாவது ஒரு மார்க்கத்தின் மூலம் அவர்களைத் தண்ணீர்த் துறைக்குப் போகச் செய்து அதன் பிறகுதான் மெல்லச் செய்தியைச் சொல்ல வேண்டும் என்று நினைத்தான். பிறகு எதிரே உள்ள ஒரு நீர் நிலையைத் தன் உடன் பிறந்தாருக்குச் சுட்டிக் காட்டி "நீங்கள் நேரங்கழித்துத் திரும்பியிருக்கிறீர்கள்! அந்தத் தண்ணீரில் போய் நில்லுங்கள்" என்று ஒரு சுலோகத்தைப்பாடிப் பாதியில் நிறுத்தினான். இலக்கணனும் சீதையும் அவ்வாறு நீர்த்துறைக்குச் சென்று தண்ணீரில் நின்றார்கள்.

பிறகு தந்தை இறந்த செய்தியைச் சுலோகத்தின் மற்றொரு பாதியின் மூலம் இராமபண்டிதன் உணர்த்தினான்.

**"மன்னர் தசரதரின் வாழ்வு முடிந்தது"** என்று பரதன் கூறுகின்றான்.

அதைக் கேட்டவுடன் இலக்கணகுமரனும், சீதையும் மூர்ச்சையடைந்து தண்ணீரிலே விழுந்தனர் மறுபடியும் அந்தச் செய்தியை இராமபண்டிதன் சொன்னான். மறுபடியும் அவர்கள் மயங்கி விழுந்தனர். மூன்றாவது தடவையும் கூறியபோது மயங்கி விழுந்தனர். உடனே அமைச்சர்கள் அவர்கள் இருவரையும் தண்ணீரிலிருந்து வெளியே எடுத்து வந்து காய்ந்த தரையின் மீது படுக்க வைத்தனர் பின்னர் அவர்கள் சுய நினைவு பெற்றதும் எல்லோரும் அழுது புலம்பினர்.

அப்போது பரதகுமரன் தன் மனதிற்குள் பின்வருமாறு சிந்தித்தான். "எனக்கு மூத்தவர்களான இலக்கணனும், சீதாதேவியும் தந்தை இறந்த செய்தியைக் கேள்விப் பட்டதுமே துக்கம் தாங்காமல் மூர்ச்சித்து விழுந்தார்கள் ஆனால் எங்கள் எல்லோ

ருக்கும் மூத்தவரான அண்ணன் இராம பண்டிதர் மட்டும் அழவும் இல்லை, புலம்பவும் இல்லை. அவர் துக்கப்படாமல் இருப்பதற்கு காரணம் என்னவென்று தெரியவில்லை. ஒரே விந்தையாக இருக்கிறது. இதைப்பற்றி அவரிடமே நான் கேட்டறிய வேண்டும்,'' என்று நினைத்து அந்தக் கேள்வியை ஒரு சுலோகம் போல் கேட்டான்

''துக்கம் வரும்போது நீங்கள் துயரப்படாமலிருப்பதற்கு உம்மிடம் இருக்கும் சக்தி என்ன இராமரே? தந்தை இறந்தார் என்ற போதும் அந்தத் துக்கம் தங்களை வருத்தவில்லையே ஏன்?''

அதற்கு இராம பண்டிதர், தான் துக்கப்படாமல் இருந்ததற்கான காரணத்தைச் செய்யுள்களின் மூலம் விளக்கினார். அவை:—

''ஓலமிட்டு ஓயாமல் அழுது புலம்பினாலும், சென்றது திரும்பி வராது. அந்த உண்மை ஞானம் கொண்டவன் அதற்காக ஏன் உளங்கொதித்து அழவேண்டும்?

''வயதில் இளையார்க்கும், வயதான மூத்தோருக்கும் வயங்கெட்ட அறிவிலிக்கும், வறுமைப்பட்ட ஏழைக்கும், வளமான செல்வருக்கும், பண்டிதருக்கும், பாமரருக்கும் ஒரு முடிவு உள்ளபடி உள்ளதன்றோ? இருப்பவர்கள் எல்லாம் ஒவ்வொருவராய் ஒரு நாளில் இறப்பதும் மெய் அல்லவோ?

''பழுத்துவிட்ட பழத்திற்கும் வீழ்ச்சியுறும் காலந்தன்னில் பயமதுவே நிச்சயமாய் உண்டன்றோ? அதுபோல உயிர் வாழும் உயிர்களுக்கே ஒரு நாளில் மரணபயம் உள்ளதன்றோ?

''காலை ஒளியில் கண்டவரே, மாலை ஒளியில் மறைவர்! மூடன் அழுது புலம்புவதால் சென்றது மீளுமென்றால் அறிஞனும் அவ்வாறே செய்வான் அன்றோ! அழுது, கதறிப் புலம்பியவன் பழுதாகிப் பிணியுற்றே இளைத்திடுவான். அதனால் இறந்தவனோ உயிர்பெற்று எழுவதில்லை! ஆகையால் அவனழுகையில் ஒரு பயனும் இல்லையே!

''பற்றியெரியும் வீட்டைத் தண்ணீரால் அணைப்பதுபோல் பலமும் அறிவும், பல நூல் உணர்வும் கொண்டோர் துக்கத்தை மனதில் கொள்ளாமல் சூறைக்காற்றில் பறந்து போகும் பஞ்சு போல் பறக்கச்செய்வர். புத்திமானின் துயரமெல்லாம் இப்பஞ்சு போன்றதே!

"இறப்பதும் பிறப்பதும் இயற்கை மெய் நூல்களைப் படித்து இம்மை மறுமைகளின் இயல்பை உற்றுணர்ந்த அறிஞர், துக்கம் என்ன பெரிதெனினும் நெஞ்சும் மனமும் தளர்வுறமாட்டான்"

"சென்றவர்களுக்காகத் துக்கப்படாமல், இருக்கிறவர்களைப் போற்றிக் காப்பதே கடமை! என் உறவினர்க்கோ நான் ஈவேன். என் உறவினரைப் போற்றி வளர்த்திடுவேன். உள்ளதெல்லாம் நான் உலகில் காப்பேன். அதுவே உயிர் ஞானம் கொண்டவனின் செயல்!"

இவ்வாறு இராம பண்டிதர் உலகத்துப்பொருளின் நிலையாமையை எடுத்து விளக்கினார்.

அதைக் கேட்ட எல்லோரும் துக்கத்தை மறந்து துன்பம் நீங்கி மன அமைதி கொண்டனர்.

பிறகு இராம பண்டிதர் பரதனை நோக்கி, 'தம்பி! சீதையையும் இலக்கணனையும் உன்னுடன் அழைத்துச் சென்று, நீயே நாட்டை ஆள்வாயாக!" என்றார்.

"இல்லை தாங்கள்தான் வந்து அரசாள வேண்டும்" என்று பரதன் கூறினான்.

"தம்பி! பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் நான் வந்து நாட்டை ஏற்றுக்கொள்ள வேண்டுமென நம் தந்தை கூறினார். நான் இப்பொழுது வந்தால் அவருடைய வாக்கை மீறியவனாவேன்"

"அதுவரை இராஜ்யத்தை யார்தான் ஆள்வது?"

"நீயே ஆட்சி நடத்து!"

"நான் செய்யமாட்டேன்" என்றான் பரதன்.

"அப்படியானால் நான் வருகிறவரை இப்பாதுகைகள் அரசாளட்டும்" என்று கூறிய இராம பண்டிதர் கோரைப்புற்களினால் செய்யப்பட்ட தம் பாதுகைகளைக் காலிலிருந்து கழற்றித் தன் தம்பியிடம் கொடுத்தார். எனவே, பரதன் அப்பாதுகைகளைப் பெற்றுக்கொண்டு, சீதையையும் இலக்கணனையும் அழைத்துக் கொண்டு, இராமபண்டிதரிடம் விடைபெற்று, அமைச்சர்களும் பரிவாரத்தினரும் பின் தொடர காசிமாநகருக்குச் சென்றான்

மூன்றாண்டு காலம் பாதரட்சைகள் நாட்டை ஆண்டன. எந்தவிதமான நீதி வழங்கும் போதும் அமைச்சர்கள் இராமரின் பாதுகைகளைச் சிம்மாசனத்தில் வைத்து நீதி வழங்கி வந்தனர்.

நீதி கூறுவதில் ஏதாவது தவறு நேர்ந்தால் உடனே பாதுகைகள் இரண்டும் ஒன்றோடு ஒன்று மோதிக்கொள்ளும். அவற்றைக் கண்ணுறும் அமைச்சர்கள் வழக்கை மறுபடியும் விசாரிப்பார்கள். நீதி சரியானதாக அமைந்தால் பாதுகைகள் வைத்த இடத்தில் அமைதியாக இருக்கும்.

மூன்றாண்டு காலம் கடந்தவுடன் இராமபண்டிதர் காட்டை விட்டுப் புறப்பட்டுக் காசிமாநகரின் எல்லையை அடைந்து அங்கிருந்த ஒரு பூஞ்சோலையில் தங்கினார். அதையறிந்த இளவரசர்கள் அமைச்சரும் பரிவாரத்தினரும் நகரத்துப் பிரஜைகளும் புடைசூழ பூஞ்சோலைக்குச் சென்றார்கள். சீதாதேவியைப் பட்டத்து அரசியாக்கி அவர்கள் இருவரின் மீது மங்கள நீர் தெளித்தனர். அதன் பிறகு அந்த மகான் இராமபண்டிதர் அழகான ஒரு தேரில் ஏறிக்கொண்டு ஏராளமான பொது மக்கள் சூழ்ந்து வர காசி நகத்தை வலப்புறமாக வந்து நகருக்குள் நுழைந்தார் சுகந்தகம் என்னும் பெயருள்ள அரண்மனையின் மேல் மட்டத்தில் தங்கினார். பதினாயிரம் ஆண்டுகள் நீதி நெறியோடு ஆட்சி செய்து பின்னர் மேலுலகம் அடைந்தார்.

இக்கதைக்கும் வான்மீகர், கம்பர் கூறிய இராமாயணக் கதைக்கும் தொடர்புகளும் வேறுபாடுகளும் மிகுதி:-

1. ஜாதக்கதையில் தசரதன் காசிமாநகரத்தில் அரசாண்டான் என்றிருப்பது வான்மீகத்திலும், கம்பராமாயணத்திலும் அயோத்தியில் என்றிருக்கின்றது.

2. தசரதனுக்கு ஜாதக்கதையில் பதினாயிரம் பத்தினிகள் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. வான்மீகரும், கம்பரும் தசரதனுக்கு அறுபதினாயிரம் மனைவியர்கள் இருந்ததாகப் பேசுகின்றனர்.

3. மூத்த மனைவியான பட்ட மகிஷிக்கு, இராமபண்டிதன் (அறிஞன்) இலக்கணகுமரன் (அதிர்ஷ்டசாலி) என்ற ஆண் மக்களும் சீதை என்ற பெண் மகளும் பிறந்ததாக ஜாதகக்கதை கூறும். வான்மீகரும் கம்பரும் தயரதனுக்கு மூத்த மனைவி கோசலைவழி இராமனும், சுமித்திரைவழி இலக்குவனும், சத்ருக்கனனும், கைகேயி வழிப்பரதனும் பிறந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.

இங்குச் சீதை சனகனுக்கு மகளாகப் பிறந்து இராமனுக்கு மனைவியாக வருகின்றாளேயன்றி உடன்பிறந்தவள் என்ற பேச்சில்லை.

4. தசரதனுடைய மூத்தமனைவி இறந்துபடவே வேறொருத்தியைப்பட்டத்து ராணியாக ஆக்கிக்கொண்டான். அவளுக்குப் பிறக்கின்றான் ஒரு மகன். அவனே பரதன் என்று கூறும் ஜாதகக் கதை வான்மீகத்திலும், கம்பராமாயணத்திலும் மனைவி இறப்பு ஒன்று நிகழ்ந்ததாகப் பேச்சில்லை.

5. ஜாதகக்கதையில் பரதனும், அவன் தாயும் தசரதன்பால் அளவில்லா அன்புடையவர்களாய் இருந்ததால் அவன் மகிழ்மீக் கூர்ந்து இரண்டு வரம் தர ஒருப்படுகின்றான். அப்பொழுது அந்தப் பட்டத்து ராணி அந்த வரத்தைச்சொன்னதிலிருந்து பரதனுக்கு ஏழு வயது முதிர்ந்த பின்னர் அதை நினைவுபடுத்திப் பரதனுக்கு அரசைக் கொடுக்குமாறு வரமாகக் கேட்கின்றாள். இந்த நிகழ்ச்சி வான்மீகத்திலும், கம்பராமாயணத்திலும் வேறு வகையாகப் பேசப் பெற்றுள்ளது. தசரதன் வரம் கொடுத்ததும் அதனைக் கைகேயி பரதனுக்கு அரசுரிமை பெறப் பயன்படுத்தியதும் கம்பராமாயணத்தில் உண்டு. ஆனால் வரங்கொடுத்த காலம் சம்பராசுர யுத்த காலத்தில் தசரதனுக்குக் கைகேயி உதவிசெய்ய அதற்கு நன்றிக் கடனாகத் தந்ததாகும். வான்மீகத்தில் கைகேயியை மூன்றாந் தாரமாக மணக்க வேண்டிய போது கேகயமன்னன் விருப்பிற் கிணங்கி கைகேயிக்குப் பிறக்கும் மகனுக்கு நாடு கொடுப்பதாக கன்யால்கத்தின் வழிக் கூறியதால் கொடுக்க நேர்ந்ததாகும்.

6. பரதனுக்கு இளவரசுப் பட்டம் கட்ட வேண்டுமென்று கேட்டதற்காகப் பரதனின் தாயைத் தசரதன் கடுமையாகச் சினக்கின்றான் அவளும் பிடிவாதமாகக் கேட்கின்றாள் என்று கூறும் ஜாதகக்கதை. இந்தச் சீற்ற நிகழ்ச்சியும் கைகேயியின் பிடிவாதமும் கம்பர் வான்மீகர் இருவருக்கும் பொது.

7 ஜாதகக்கதையில் தசரதன், இராம பண்டிதனையும் இலக்கண குமரனையும் சீதையையும், இவ்வாறு வரம் கேட்ட சிற்றன்னை சூழ்ச்சி முறையில் கொன்றுவிடுவாள் என்று அஞ்சுகின்றான். அதனால் அவன் அரசுக்கு உரிமையுடைய மைந்தர் இருவரையும் அழைத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று வாழுமாறும் அதன்பின்னர் நாட்டுக்குப் போந்து தங்களுடைய கொற்றக்குடையை ஏற்குமாறும் கூறுகின்றான். இதற்குக் காரணம் அவன் சோதிடர்களை அழைத்துத் தன் ஆயுட்காலத்தைக் கணிக்குமாறு கேட்டபோது அவன் பன்னிரண்டு ஆண்டுகளே வாழ்வான் என்றும் அதன்பிறகே இறந்துபடுவான் என்றும் கூறியதாலாகும்.

இவ்வாறு மக்கள் இருவரும் தந்தை சொல்லைத் தட்டாது காடுபுக நேர்ந்தபோது சீதையும் தந்தையின் உடன்பாடு பெற்று அவர்களோடு காட்டிற்குச் செல்கிறாள். இவ்வாறு ஜாதகக்கதை மூவரும் காட்டிற்குச் சென்ற காரணத்தையும் பன்னிரண்டு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று வாழுமாறு கூறிய காரணத்தையும் காட்டுகின்றது.

வான்மீகரும் கம்பரும் 14 ஆண்டுகள் இராமன் காட்டிற்குச் செல்ல வேண்டும் என்றாள் கைகேயி என்பதற்குரிய காரணத்தைக் கூறினார்களல்லர். *

ஜாதகக்கதையில் பன்னிரண்டு ஆண்டு என்பதற்குச் சோதிடன் கூறிய கூற்றுப் பொருத்தமாகத் தோன்றுகிறது.

8. ஜாதகக்கதையில் இராமன் இமயமலைச் சாரலை அடைந்து அங்கு நல்ல கனிகளும் நீரும் கிடைக்கக் கூடிய இடமாகத் தேர்ந்து குடிசை கட்டிக்கொண்டு வாழ்ந்தான் என்றும், இராமன் தனியாகக் குடிசையில் இருப்ப, இலக்குவனும் சீதையும் வெளியிற்சென்று தந்தையிடத்தை வகிக்கும் இராமனுக்குக் காய் கனி முதலியவற்றால் உபசாரம் செய்து வந்தனரென்றும் பேசப் பெற்றுள்ளது. வான்மீகத்திலும் கம்பரிலும் இமயமலைக்கு வேறாகத் தண்டகவனம் போந்ததாகப் பேசப்பெற்றுள்ளது.

வான்மீகத்தில் கைகேசி இராமனைக் காட்டிற்கு அனுப்பியது அவன் நாட்டில் இருந்தால் மகனுக்கு இடையூறாகும் என்ற கருத்தில் பேசப்பெற்றிருக்கின்றது.

கம்பராமாயணத்தில் இராமன் காட்டிற்குச் சென்று பதினான்கு ஆண்டுகள் தாங்கொணாத் தவம் செய்து மீளவேண்டும் என்று அரசன் ஆணையிட்டதாகக் கைகேசி குறிப்பிட்டாள் என்று பேசப்பெற்றுள்ளது.

இப்படி வாழ்ந்து வருங்காலத்துத் தசரதன் இராமன் பிரிவால் உயிர் துறக்கின்றான். பரதனுக்கு முடிசூட்டுமாறு கைகேசி அமைச்சர்களை நோக்கிக் கட்டளையிட, அவர்கள் பட்டத்துக்குரியவர்கள் காட்டில் இருப்பதால் பரதனுக்குப் பட்டம் சூட்ட மறுக்கின்றனர். அது கேட்ட பரதன் இராமனை அழைக்கப் படைகளுடன் புறப்பட்டுக் காட்டிற்குச் சென்றான் என்று ஜாதகக்கதை கூறுகின்றது.

---

* இதற்குரிய விளக்கத்தைத் ''தூய சிந்தையாள்'' என்னும் என் நூலிற் காண்க.

வான்மீகத்திலும், கம்பராமாயணத்திலும் தசரதன் இறந்த செய்தி கேட்டுப் பரதன் முடிசூட்டிக்கொள்ள விரும்பாது இராமனைத்தேடிக் காட்டிற்கு வருகின்றான் என்று பேசப்படுகின்றது. இங்கு அமைச்சர்களோ பிறரோ இராமனுக்குரியது அரசு என்று கூறிப் பரதனுக்கு முடி சூட்டத் தடை சொல்லவில்லை.

9. ஜாதகக்கதையில் இராமனைத் தேடி வந்த பரதன் சேனைகளை ஓரிடத்தில் நிறுத்தித் தான் மட்டும் இராமனிடம் தனியாகச் சென்று தசரதன் இறந்ததைக் கூறி விம்மி விம்மி அழுகின்றான். இராமன் அது கேட்டு எத்தகைய மாற்றமுமின்றி வாளா இருந்தான் என்று பேசப்படுகின்றது.

வான்மீகரும் கம்பரும் தசரதன் இறப்புக் கேட்டு இராமன் அழுது புலம்பச் சான்றோர்கள் தேற்றத் தெளிந்த செய்தியை விரிவாகப் பேசுகின்றனர்.

10. வெளியிற் சென்ற இலக்கண குமரனும் சீதையும் வந்த போது அவர்கள் தசரதன் இறப்புச் செய்தியைக் கேட்டுப் பொறுக்கமாட்டார்கள் என்று கருதி இராமபண்டிதன் அவர்களை நீர்நிலைக்கு அழைத்துச் சென்று ஒரு சுலோகத்தின் வழி மன்னன் இறந்த செய்தியைக் கூறினான். பின்னர் பரதன் மன்னர் தசரதனின் வாழ்வு முடிந்தது என்று கூறினான். அது கேட்ட இலக்கணகுமரனும், சீதையும் மயங்கித் தண்ணீரில் வீழ்ந்தனர். பின்னர் அவர்களை எழுப்பி நிறுத்தி மீண்டும் சொல்ல அவர்கள் அவ்வாறே மூச்சற்று விழ மூன்றாம் முறையாக அவ்வாறு வீழ்ந்தவர்களுக்குச் சுய நினைவு வந்து, நால்வருமாகச் சேர்ந்து அழுகின்றனர்.

வான்மீகத்திலும் கம்பரிலும் இவ்வாறு இராமன் துளங்காதிருந்து, சீதையையும் இலக்கணகுமரனையும் நீரில் நிறுத்தி உணர்த்தித் தேற்றியது போன்ற செய்திகள் இல்லை. அதற்கு வேறாக இராமன் தேற்றொணாத் துயரமுற்றான் என்றிருக்கின்றது.

11. ஜாதகக்கதையில் பரதன், இராமன் கலங்காதிருப்பதற்குரிய காரணத்தைக் கேட்கின்றான். அதற்கு இராமன் உலக நிலையாமை முதலிய தத்துவங்கள் பலவற்றைப் பேசிச் சென்றவர்களுக்காகத்துக்கப்படாமல், இருக்கின்றவர்களைப் போற்றிக்காப்பதே கடமை; அதுவே உயர் ஞானம் உடையவன் செய்யத்தக்க செயல் என்றெல்லாம் பேசுகின்றான். அது கேட்டு எல்லோரும் துயரம் அகல்கின்றனர்.

வான்மீகத்திலும் கம்பரிலும் இந்த நிலையாமைத் தத்துவப் பேச்சு இல்லை என்றாலும், வான்மீகத்தில் பரதன் இராமனை நாட்டிற்கு வந்து அரசினை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிய போது ஜாபாலியின் பேச்சு ஒன்று இதுபோன்று அமைந்துள்ளது.

12. பரதன், இராமபண்டிதனிடம் நாட்டிற்கு வந்து அரசேற்க வேண்டுமென்று கேட்கின்றான். அதற்கு இராமன் தந்தை கூறிய எண்ணம் பன்னிரண்டு ஆண்டுகள் முடியும் முன்னர் வந்தால் தந்தைக்குக் கொடுத்த வாக்கைத் தவிர்த்த குற்றம் வரும் என்று கூறுகின்றான். இவ்வாறு ஜாதகக்கதை பேசும்.

வான்மீகத்திலும், கம்பரிலும் இராமன் நாட்டிற்கு வந்து அரசினை ஏற்க மறுக்கின்றான். ஆண்டும் தந்தையிடம் கொடுத்த பதினான்கு ஆண்டு முடியும்வரை அரசினை ஏற்பது தந்தைக்குத் தந்த வாக்கைத் தவிர்ப்பதாகும் என்று கூறுகின்றான்.

13. பரதன் பிடிவாதமாக இராமன் நாட்டிற்கு வரவேண்டும் என்று வேண்டியபோது இராமன் கோரைப்புற்களால் அமைந்த தன் பாதுகைகளைத் தந்து "இவை அரசாளட்டும்" என்று கூற பரதன் அவற்றைப் பெற்று மீண்டு வந்தான் என்று ஜாதகக்கதை கூறும்.

வான்மீகரும் கம்பரும் இராமன் வரமறுத்ததால் இராமனுக்கு வேறாக அவன் பாதுகைகளைப் பரதன் வேண்டிப்பெற்று வந்து அரசபீடத்து வைத்து அரசாண்டான் என்று பேசுவர்.

14. பாதுகைகளை வைத்துப் பரதன் மூன்றாண்டு காலம் அரசாண்டான் என்றும் அப்பாதுகைகள் பரதனுக்கு அரசியலில் தவறு நிகழ்வுழியெல்லாம் ஒன்றோடு ஒன்று மோதிச் சுட்டிக்காட்டி நீதியோடு அரசாளத் துணைபுரிந்தன என்றும் ஜாதகக்கதை கூறும்.

வான்மீகத்திலும் கம்பராமாயணத்திலும் பரதன் பதினான்கு ஆண்டுகளும் பாதுகைகளை அரசிருக்கையில் வைத்து நந்திக் கிராமத்தில் தான் துறவியாக இருந்து அரசியல் நடாத்தினான் என்று பேசப்பெற்றுள்ளது.

5. ஜாதகக்கதையில் இராமன் பிரிந்த துயரத்தால் ஒன்பது ஆண்டுகள் வாழ்ந்து தசரதன் இறந்தான் எனறும், பாதுகை மூன்று ஆண்டுகள் ஆண்டன என்றும் கூறப்பட்டுள்ளது.

வான்மீகத்திலும் கம்பராமாயணத்திலும் இராமன் பிரிந்த செய்தி கேட்டு உயிர் துறந்தான் தசரதன் என்றும், பின்னர்

பரதன் இராமனிடம் பாதுகைகளைப் பெற்று வந்து பதினான்கு ஆண்டுகள் பாதுகை உதவியால் அரசாண்டான் என்றும் பேசப் பெற்றுள்ளது.

16. மூன்றாண்டு கழித்து காசிமாநகரத்திற்கு வந்து சீதா தேவியைப் பட்டத்தரசியாக்கி அவளோடு இராமபண்டிதர். சுசந்தகம் என்னும் அரண்மனையில் தங்கிப் பதினாயிரம் ஆண்டுகள் அட்சி செய்து மேலுலகம் அடைந்தார் என்று ஜாதகக் கதை பேசும்.

கர்பர் இராமனும் சீதையும் இலக்குவனும் சத்ருக்கனும், பரதனும் புடைசூழ இருந்து முடிசூட்டிக்கொண்டனர் என்பார். வான்மீகர், இராமன் அயோத்தியில் முடி சூட்டிக்கொண்டு பத்தா யிரம் ஆண்டுகள் அரசாட்சி செய்து, பின் வானுலகு புக்கதாகப் பேசும்.

இவ்வாறு புத்தர் ஜாதகக் கதையில் கூறப்பெற்றுள்ள இராமாயணக் கதையில் உள்ள பல கூறுகள் வான்மீகத்திலும் கம்பராமாயணத்திலும் வேறுபட வழங்கினும், அடிப்படை ஒற்றுமைகள் பல இருப்பது நோக்கத்தக்கது. இதுகொண்டு காணும் போது இராமகாதைக்கு மூலம் வான்மீகம் இல்லை என்று தெளிய முடிகின்றது. இந்த ஜாதகக்கதைக்கும் ஒரு மூலம் உண்டோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

---

# சங்க இலக்கியங்கள் வழங்கிய இராமாயணச் செய்திகள்.

பல்வேறு புராணங்களும் இராமாயணங்களும் கம்பருக்கு முழுமையான இராமாயணக் கதைகளாலும், நிகழ்ச்சிகளாலும், கிளைக்கதைகளாலும் இராமகாதை இயற்றத் துணை புரிந்தது போலவே சங்க இலக்கியங்களும் ஒருவாறு துணை புரிந்துள்ளன.

ஒரு காப்பியம் தனக்குரிய காப்பியத்தலைவனை அமைக்கும் போது அவன் பிறந்த நாடு, பிறப்பு, ஈன்றோர் பெருமை அவனை வளர்த்த திறம் அவன் வழிமுறை போன்ற பலதிறப்பட்ட செய்தி களைத்தாங்கி நிற்க வேண்டு மென்பது மரபு. பாத்திரப் படைப்பி லும் பாத்திரங்களிடையே நிகழும் உரையாடல்களிலும் பண்பாடு சிறக்கப் பெறல் வேண்டும் என்பதும் அம்மரபு.

கம்பர் இராமனை இதிகாசத் தலைவனாகக் கண்டு முன்னை யோர் கூற்றுவழி நின்று வழுவற உரைக்க வேண்டுமென்ற கடப் பாட்டில் அவற்றிற்கு வேண்டப்படும் செய்திகளை முன்னையோர் இயற்றிய நூல்களில் கிடைத்தவற்றைக் கொண்டு பிறவற்றை விளக்கித் தாம் பாடத் துணிந்த இதிகாசந்தை, நமக்குக் கிடைத்த சங்க இலக்கியங்கள், சிலப்பதிகாரம், சிந்தாமணி, பெருங்கதை, மணிமேகலை, திருக்குறள், திவ்யப்பிரபந்தம், தேவாரம் போன்ற தமக்கு முந்திய நாவினார் உரைவழி நின்று யாத்தபெற்றியை ஒன்றொன்றாகக் காண்போம்.

இராமன் சூரிய குலத்தவன் என்றும், இக்குவாகுவிற்கு முன் வாழ்ந்த அவன் குலமுதல்வர் பலர் காவிரிப்பூம்பட்டினம் திருவாரூர் முதலிய இடங்களைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர் என்றும், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்கள் கூறுகின்றன. இராமாயணத்தில் வருகின்ற இராமன், இலக்குவன், சீதை, பரசுராமன், இராவணன், அகத்தியன், இந்திரன், சடாயு, சம்பாதி போன்றவர்களைப் பற்றிய பல செய்திகளைச் சங்க இலக் கியங்களும், சிலப்பதிகாரமும், மணிமேகலையும், பெருங்கதையும், புறத்திரட்டும், நாலாயிரத் திவ்வியப்பிரபந்தமும், தேவாரமும், திருவாசகமும் உவமமாகவும் பிறவாறும் பேசுகின்றன, இவை வறிதே பழங்காலத்தில் இராமாயணம் இருந்த செய்தியைக் குறிப்பன என்றில்லாமல் கம்பர் பாடிய இராம காதைக்குரிய பல அடிப்படைகளைத் தந்தனவாகவும் உள்ளன.

அதனால் கம்பர் மேற்குறித்த நூல்களிலிருந்து தம் காப்பியத்திற்குரிய கருத்துக்கள் பலவற்றைத் தேர்ந்து கொண்டதோடு உவமை, உருவகம், அரியசொல்லாட்சி முதலியவற்றையும் எடுத்துக் கொண்டிருப்பதைத் தனித்தனிக் காணலாம் இங்குப் பொதுவாக இராமாயணம் பற்றிய செய்திகள் பரந்துபட்ட இந்த இலக்கியங்களில் எவ்வாறு பயிலப்பெற்றுள்ளன என்பதைக் காண்போம்.

பத்துப்பாட்டில் இராமாயண உறுப்பினர்:

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்போடு ஐந்துடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக" - மதுரைக்காஞ்சி: 453-55

"திசைகளோடு விண், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகிய ஐந்தினையும் ஒரு சேரப்படைத்த மழுப்படையுடைய நெடியோனை தலைவனாகக் கொண்டு" என்பது இதன் பொருள்.

இங்கு, உலகத்தைப் படைத்தவன் மழுப்படையுடைய நெடியோன் என்று பேசப்பெற்றுள்ளது. மழுப்படை பரசுராமனுக்குரியது நெடியோன் என்பது திருமாலைக் குறிக்கும். உலகு படைத்த பிரமனைப் படைத்தவன் திருமால். அதனால் திருமாலாகிய பரசுராமன் என்று இங்கு எண்ணவேண்டும்.

கம்பர் இப்பரசுராமன் வரலாற்றைப் பரசுராமப்படலம் என்று ஒரு படலம் அமைத்து, அதில் இராமன் இவன் செருக்கடக்கி இவன் தவவலிமை, வில் முதலியவற்றை வாங்கிக் கொண்டது போன்ற பல செய்திகளை விரித்துப் பாடியுள்ளார் ஆண்டு அவன் இயல்பைப் பற்றியும் அவன் படையைப் பற்றியும்,

"பாழிப் புயம் உயர்த்திக்கிடை அடையப் புடை படரச்
சூழிச் சடை முடிவின் தொட அயல்வெண் மதிதொத்த
ஆழிப்புனல் எரிகால் நிலம் ஆகாயமும் அழியும்
ஊழிக்கடை முடிவில் தனியுமை கேள்வனை ஒப்பான்"
- கம் பரசுரா பட 11

"அயிர்துற்றிய கடல் மாநிலம் அடையத் தனிபடரும்
செயிர் சுற்றிய படையான் அடல் மறமன்னவர் திலகன்
உயிர் உற்றதோர் மரமாமென ஓராயிரம் உயர்தோள்
வயிரப்பணை துணியத்தொடு வடிவாய்மழு வுடையான்"
- கம். பரசுராம பட 12

என்று கூறுவர்.

அகநானூற்றில் பரசுராமன்.

அகநானூற்றில் மதுரை மருதனிள நாகனார் என்ற புலவர் தலைவி ஒருத்தி பெற்றோரால் இற்செறிக்கப்பெற்று அரிய காவலில் இருக்கின்றாள் என்பதை விளக்கப் பரசுராமன் அரசர்களைக் கொன்ற பெருமையைக்கூறி, அவன் அதன் பின்னர் இயற்றிய வேள்வியைக் கூறி, அவ்வேள்வியில் வைக்கப்பெற்ற வேள்வித்தூண் போலக் காப்புமிகுதியுடையவள் என்கின்றார், இதனை,

"கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழுஉச்சமந் ததைய
மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல யாவரும்
காண லாகா மாணெழி லாகம்" - அகநானூறு. 220:3 9

என்று பாடுவர். மன்னர்களின் வழிமுறைகளை அழித்த பரசுராமன் முன்பு அரிதில் முடித்த வேள்வியில், கயிற்றினை அடியிற்கட்டிய அழகான காவல்மிக்க வேள்வித்துணைப்போல யாராலும் காண முடியாத மார்பு என்பர்

இங்குப் பரசுராமன் இருபத்தொரு வழிமுறை அரசர்களைக் களைகட்டவன்; வழிமுறைகளை அழித்தவன் என்று கூறப் பட்டுள்ளது. இவன் இருபத்தொரு முறை அரச மரபினரைக் கொன்ற செய்தியைக் கம்பர்,

"மூவெழு முறைமை பாரின் முடியுடை வேந்தை யெல்லாம்
மேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட் டன்னூர்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை முறையின் எந்தைக்கு
ஆவன கடன்கள் நேர்ந்தேன் அருஞ்சின மடக்கிப் போந்தேன்"
கம் பரசுராமப்படலம் 33

என்று குறிப்பிடுவர்.

இவன் செய்த வேள்வி, அதில் உள்ள வேள்வித்தம்பம் முதலிய செய்திகளை மருதனிளநாகனார் எளிமையாக உவமை கூறுவாரேயானால், இராமன் காலத்து முன் வாழ்ந்த பரசுராமன் வரலாறு இந்நாட்டில் எத்துணைப் பழகியதும் உவமை கூறத்தக்க அறிமுகம் உடையதும் ஆகும் என்பது போதரும். இந்த நூலே இப்பரசுராமனைக் கண்டு அவன் செருக்கொழித்த இராமனைப் பற்றிய செய்தி ஒன்றை உவமையாகக் கூறுகின்றது.

மதுரைத் தமிழ்க்கூத்தனார் கடுவன் மள்ளனார், பாண்டிய ருக்குச் சொந்தமான மிகப்பழைய கோடிக்கரை என்னுமிடத்தில் அமைந்த ஆலமரத்திலடையும் பறவைகளின் ஒலியாரவாரம், இராமன் இராவணனை வெல்லக்கருதி அணைகட்ட வேண்டி வானர வீரர்களோடு மறைவாகப் பேச இடையூறு செய்யாதிருக்கும் பொருட்டு அவித்த ஆலமரத்துப் பறவை ஒலிபோல தூற்றிய ஊரலர் அடங்கிற்று என்று உவமை கூறுகின்றார்.

"வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவம் இரங்கும் முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக்கவித்த
பல்வீழ் ஆலம் போல
ஒலியவிந் தன்றால் அழுங்கல் ஊரே"

அகநானூறு 70, 13-17

இங்கு இந்த உவமையில் உள்ள சிறப்பு, இராமாயணக் காலச்செய்தி பேசப்பெற்றது ஒருபுறம் இருப்பினும், இராமன் கடலடைக்க முனைந்து வானரத்தலைவர்களோடு சிந்தித்த கோடிக் கரை பேசப்பெற்றதும், அஃது இன்றும் இருப்பதும் அங்கு இராமன் நின்று கடலைப் பார்த்த அடிச்சுவடுகள் இன்றும் இருப்பதும் இராமாயண நிகழ்ச்சியை வரலாறாக உறுதிப்படுத்துவதோடு அதன் பழமையையும் காட்டுவதுமாகும். அன்று கட்டிய சேது என்ற அணை இன்றும் இலங்கை நோக்கிச் சிதைந்து கிடப்பதும், வெள்ளையர்கள் ஆட்சிக்காலத்து இலங்கைக்குத் தரைவழிப் பாலம் அமைக்கக் கடலிடை ஆராய்ந்தபோது அன்றைய ஆராய்ச்சியாளர் இந்த அணையுடைமையைக் குறித்திருப்பதும் நோக்கத்தக்கது. அதனால் கம்பர் அகநானூறு போன்ற நூல்களிலிருந்து பல செய்தி களைக் கொண்டிருப்பதில் ஆழ்ந்த பொருளுண்டு.

அகநானூற்றில் குறித்த பரசுராமன் வேள்வி நிகழ்ச்சியையும், அவன் வேள்வித்தூணின், காப்பின் அருமையையும் பற்றி வான் மீகம் குறிப்பிடவில்லை.

ஆலமரத்துப் பறவை ஒலி அவிந்தது போலக் கடலும் அலைக்காது ஒலி அவிந்து இருந்தது என்ற வேறு ஒருநிகழ்ச்சியைப் பேசக்காணலாம்.

" வலியான் அவ் இராகவன் வாய்மொழியால்
சலியாத நெடுங்கடல்தான் எனலாய்
ஒலியாது உறுசேனையை உற்று ஒருநாள்
மெலியாதவர் ஆர்த்தனர் விண்கிழிய " -யுத் நிகும்பலையாகப் 22

" வழங்கா சிலை நாண் ஒலி வானில் வரும்
பழங்கார்முகம் ஒத்த பணைக்குலமும்
தழங்கா கடல் வாழ்வனபோல் தகைசால்
முழங்கா முகில் ஒத்தன மும்முரசே " - யுத் திரு. 21

புறநானூற்றில் இராமாயண உறுப்பினர்

சோழன் செருப்பாழி எறிந்த இளஞ்சேட்சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் என்ற புலவர் பாடும்போது அவன் பாடிச்சென்ற இரவன் மாக்கட்குத் தந்த கொடைப்பொருள்களின் சிறப்பையும் அவற்றைப் பெற்றோர் மகிழ்ந்த மகிழ்ச்சியையும்,

" எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த வல்ல மிகப்பல
மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந் தோனே, அதுகண்டு
இல்ம்பாடு உழந்தஎன் இரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின செவித்தொடக் குநரும்
செவித்தொடர் மரபின விரற்செறிக்குநரும்
அரைக்கமை மரபின மிடற்றியாக் குநரும்
மிடற்றமை மரபின அரைக்கியாக்குநரும்
கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந் தாஅங்கு"

புறநானூறு 378: 6- 1

என்று இராமாயண நிகழ்ச்சியை உவமை காட்டிக் கூறுகின்றார்.

இவ்வாறு சீதையை இராவணன் வௌவிச் சென்றபோது அவள் தன் அணிகலன்களைக் கீழே போட்டுச் சென்ற நிகழ்ச்சியைக் கம்பர்,

" இவ்வழி யாம் இயைந்து இருந்தது ஓர் இடை
வெவ்வழி இராவணன் கொணர மேலைநாள்
செவ்வழி நோக்கி நின்தேவியே கொலாம்
கவ்வையி ன்அரற்றினள் கழிந்த சேணுளாள் "

" உழையரின் உணர்த்துவது உளதென்று உன்னியோ
குழைபொருகண்ணினாள் குறித்தது ஓர்ந்திலம்
மழைபொரு கண்இணை வாரியோடுதன்
இழைபொதிந்து இட்டனள் யாங்கள் ஏற்றனம் "

கிட்கிந்த கலன்காண் 2,3

என்று பாடுவதால் சீதை இட்ட கலன்களைக் கிட்கிந்தையிலிருந்த வானரர்கள் எடுத்து வைத்திருந்த செய்திக்குப் "புறநானூறு" அடிப்படையாக அமைந்திருத்தல் காணலாம்.

## கலித்தொகையில் இராவணன்

கபிலர், குறிஞ்சிக்கலியில் நிகழ்ந்த ஓர் இயற்கை வருணனையை விளக்க இராவணனை உவமை காட்டுகின்றார். பூத்த வேங்கை மரத்தை யானை கண்டால் அதனைப் புலியெனப் பிறழ உணர்ந்து சினந்து அதன் அடிமரத்தைக் கோடுகளால் குத்தித் தாக்குவது உண்டு. அவ்வாறு குத்திய ஒருயானை மரத்தூடு பதிந்த தன் கொம்பினைப் பறிந்தெடுக்க மாட்டாது மரத்தையே அடியோடு பறித்து ஆட்டி அலைந்துக்கொண்டிருந்தது. இக்காட்சி இறைவன் உமையோடு வீற்றிருந்த இமயமலையின் மீது தன் புட்பகம் பறக்காமையால், அதனை அடியோடு பறித்தெடுத்து எறியக் கருதித் தன் இருபது கைகளையும் மலையடியில் புகுத்த, இறைவன் அது கண்டு மலையை மிதித்து ஊன்ற, நெறியுண்ட கைகளை எடுக்க மாட்டாது மலையோடு அலைத்து உழக்கும் இராவணனைப்போல் அந்த யானை இருந்தது என்பதை,

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக
ஐயிருத லையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ் புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல
உறுபுலி யுரு வேய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண் டதன்முதற் குத்திய மதயானை
நீடிரு விடரகஞ் சிலம்பக் கூய்த்தன்
கோடுபுய்க் கல்லாது உழக்கும்"

யுத். குறிஞ்சிக்கலி. 38: 1-9

எனக்குறிஞ்சிக்கலி குறிப்பிடுகின்றது. இவ்வரலாற்றினைக் கம்பர்

"வெள்ளி அம் கிரியினை விடையின் பாகனோடு
அள்ளி விண் தொட எடுத்து ஆர்த்த ஆற்றலாய்"

இராவண மந்திரப். 25

என்று, இராவணன் கயிலை பெயர்த்த செய்தியையும்,

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்"

என்ற கலித்தொகையின் செய்தியை,

"இமையவில் வாங்கிய ஈசன் பங்கு உறை
உமையினை இகழ்ந்தனன் என்ன ஓங்கிய
கமைஅறு சினத் தனிக் கார்முகம் கொளா
சமைஉறு தக்கனர் வேள்வி சாரவே" கார்முகப்படல. 12

என்று சிவபிரான் மேருவை வில்லாக வளைத்த வரலாற்றையும் கூறுகின்றார்.

சிலப்பதிகாரத்தில் இராமாயணம்

1. சிலப்பதிகாரத்தில் ஊர்காண்காதையின்கண் கவுந்தி அடிகள் ஓரிடத்திலிருந்து இறை வழிபாடு மேற்கொண்டிருந்தபோது, கோவலன் கண்ணகியை அவ்வடிகளிடம் காட்டி அவட்கு அவர் சிறிது பொழுது காப்பாக இருக்க வேண்டுமென்று வேண்டியபோது அவர் அவனுக்கு ஆறுதல் கூறும் முறையில் இராமன் வரலாற்றைக் குறிப்பிடுகின்றார்.

"தாதை யேவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந் திலையோ நெடுமொழி யன்றோ"

சிலப். ஊர்காண் காதை 46 49

இங்கு இளங்கோவடிகள் கூறிய "தாதை ஏவல்" என்பதைக் கம்பர் குறிப்பிடும்போது,

"ஆழிசூழ் உலகமெல்லாம் பரதனே ஆள நீபோய்
தாழ் இருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியப் புனல்கள் ஆடி
ஏழிரண்டு ஆண்டின் வாஎன்று இயம்பினன் அரசன்"

கைகேயி சூழ்வினைப் 1-11

என்பர்.

2. மாங்காட்டு மறையோன் என்பவன் மாதவி தந்த ஓலையைக் கொடுப்பதற்குக் கோவலனைத் தேடிவந்து அவனை இடைச் சுரத்துக் கண்டு அவன் பிரிவால் புகார் நகரம் உற்ற அல்லலைக் குறிப்பிடும்போது இராமாயண நிகழ்ச்சி ஒன்றை உவமையாகக் குறிப்பிடுகின்றான். அதனை இளங்கோவடிகள்,

“ பெருமகன் ஏவலல்லது யாங்கணும்
அரசே தஞ்சமென்று அருங்கானடைந்த
அருந்திறல் பிரிந்த அயோத்திபோல
பெரும்பெயர் மூதூர் பெரும் பேதுற்றதும்” சிலப் 13: 62-6

என்பர். அஃதாவது, “எத்துணைச் சிறுதொழிலாயினும் பெருமகனாகிய தந்தை ஏவிய பணியைச் செய்தலே அரிய பொருளாவதல்லது வேறு பணியன்று அரசாட்சி என்றும் தனக்கு எண்மைப் பொருட்டாம் என்று கருதி, அடைதற்கு அரிய வெங்கானிலே சென்றடைந்த இராமன் இல்லாத அயோத்தியில் வாழும் மக்கள் செயலற்று மயக்கினாற்போலப் புகழையுடைய புகாரின்கண் உள்ளார் யாவரும் மிகவும் அறிவு மயங்கிய செய்தியையும்” பேசுவர்.

“ மன்னவன் பணியன்றாகில் நும் பணி மறுப்பேனு”
“ எந்தையே ஏவ நீரே உரை செய இயைவ துண்டேல்
உய்ந்தனன் அடியேன்”
கம்ப. அயோ நகர் : 606

என்று கம்பர் இளங்கோவடிகளின் ‘பெருமகன் ஏவலல்லது’ என்ற தொடரையும், ‘தாதை ஏவலின்’ என்ற தொடரையும் வாங்கி எழுதியிருப்பது நோக்கத் தக்கது.

இங்கு, “அருந்திறல் பிரிந்த அயோத்தி” யின் அவல நிலையைக் கம்பர் மிகவிரித்துப் பாடும்போது,

“ ஒவுஇல் நல்உயிர் உயிர்ப்பினோடு உடல் பதைத்து உலைய
மேவுநல் அழகு எழில்கெட விம்மல் நோய் விம்ம
தாவு இல் ஐம்பொறி மறுகுறத் தயரதன் என்ன
ஆவி நீக்கின்றது ஒத்தது அவ் அயோத்தி மாநகரம்”
கைகேயி சூழ்வினைப் 211

என்று விளக்குகிறார்.

8. ஆய்ச்சியர் குரவையில் திருமால் பெருமையைப் படர்க்கைப் பரவலாகப் பாடும்பொழுது, இராமன் இலங்கையை அழித்ததைக் குறிப்பிடுவர்.

“ மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பா வகை முடியத்
தாவிய சேவடி சேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன் சீர் கேளாத செவியென்ன செவியே”
சிலப் 17: ஆய்ச்சியர் குரவை 35-39

இப்பாடலில் உள்ள பல செய்திகளைக் கம்பர் பல இடங்களில் பேசுவார்.

மணிமேகலையில் இராமாயணம் :

காயசண்டிகை என்னும் வித்தியாதர நங்கை காஞ்சன புரத்தைச் சார்ந்தவள். இவள் ஒரு முனிவன் சாபத்தால் யானைத்தீ யென்ற பசிநோய் பெற்றாள். அவள் கணவன் காஞ்சனன் என்பவன் அவள் பெற்ற பசியைப் போக்க, காடுபடு பொருளோடு நாடுபடு பொருள் அத்தனையும் உண்ணத் தந்தும் அவள் பசி தணியாதது கண்டு காவிரிப்பூம்பட்டினத்தை விட்டகன்று விடுகின்றான் பின்னர் அவள் மணிமேகலை தந்த அமுதசுரபியென்னும் அட்சயபாத்திரம் பெற்று ஆற்றாமாக்கட்கு உணவளிக்கும்போது அவளிடம் போந்து, தன் தீவினை காரணமாகப் பெற்ற பசிநோயையும் அதன் கொடுமையையும் ஓ நவமையால் விரித்துரைக்கின்றாள்.

திருமாலாய இராமன் சீதையை, இலங்கையினின்றும் மீட்கும் பொருட்டுச் சுக்கிரீவனின் அறுபது வெள்ளம் குரங்குகளின் துணையால் கடலை அணையிட்டு அடைக்க முயன்றபோது, அக் குரங்குகள் கொணர்ந்து எறிந்த பெரிய பெரிய மலைகளெல்லாம் எவ்வாறு கடல் ஆழத்தில் ஆழ்ந்து, போட்ட இடம் தெரியாது போயினவோ அவ்வாறு அவள் உண்ட உண்பொருள் அனைத்தும் யானைத்தீயெனும் பசியால் மறைந்தன என்று கூறுகின்றாள்.

"காயசண்டிகை யெனும் காரிகை வணங்கி
நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று
குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை யளக்கர் வயிறு புக்காங்கு
இட்ட தாற்றுக் கட்டழற் கடும்பசி
பட்டேன் என்தன் பழவினைப் பயத்தால்"

மணி உலகவறவி புக்க காதை 8-14

காயசண்டிகையின் தீராப் பசிக்குக் குரங்கினம் கடலிடையிட்டும் அதனை அடைக்கா நெடுமலைகளை மணிமேகலை உவமை கூறுகின்றது. கடலில் குன்றிட்ட காட்சியைக் கம்பர்,

"எண்இல் எண்கு இனம் இட்ட கிரிக்குலம்
உண்ண உண்ணச் சென்று ஒன்றினொடு ஒன்று உற
சுண்ண நுண்பொடி ஆகித் தொலைந்தன
புண்ணியம் பொருந்தார் தம் முயற்சி போல்" சேதுபந்தனம் 44

என்று கூறுகின்றார்.

சிந்தாமணியில் இராமாயணம் :

1. சிந்தாமணியில் வில்லுடைக் கடவுள் இராமனே என்பதைக்குறிக்க வந்த திருத்தக்க தேவர்,

" மராமரம் ஏழுமெய்த வாங்குவில் தடக்கை வல்வில்
இராமனை வல்லனென்பது இசையலால் கண்டதில்லை
உராமனம் இவன்கண் இன்றி உவக்குமா செய்வலென்று
குராமலர்க் காவின் நீங்கிக் கோயிலே கொண்டு புக்கான் "

சிந்தா 7 கனகமாலையார் 87

என்று பாடுவர்.

"சீதையின் காரணமாக வில்லை வளைத்த இராமனை ஏழு மராமரம் உருவுமாறு வில்லெய்யும் தொழில் வல்லான் என்பது செவிவழிச் செய்தியன்றிக் கண்ணால் காணாதது, அதனை இங்கு நின்கண் கண்டேன்" என்கின்றான்.

மத்திமதேசத்து ஏமமாபுரத்து அரசன் தடமித்தன் மகன் விசயன் வில்லால் எய்து கொய்யமாட்டாது நின்றமாங்கனி ஒன்றைச் சீவகன்தன் கலைவல்லபத்தால் வில்லைக் கையால் எடுத்து மாங்கனியைக் குறிவைத்துத் தோள்பிறழாது நொய்தாக அம்பு விட்டுக் காம்பறுத்து அதனைக் கைக்கண் வரவழைத்த வித்தகத்தைக் கண்டு வியந்த விசயன் சீவகனை நோக்கி வில்லுடைக்கடவுள் என்கின்றான்.

" வண்சிலை கொண்டவாறும் வார்கணை தொடுத்தவாறும்
கண்கணை வைத்தவாறும் கல்செய்தோள் இருந்தவாறும்
திண்சரம் விட்டவாறும் சென்றகோல் போந்தவாறும்
கண்டெலாம் வியந்து நோக்கி வில்லுடைக்கடவுள் என்றான்"

சிந்தா 36

இதனை உட்கொண்டே கம்பர், இராமன் சீதை பொருட்டாக வில்லிறுத்ததைக் குறிப்பிடும்போது,

" தடுத்து இமையாமல் இருந்தவர் தாளின்
மடுத்ததும் நாண்நுதி வைத்ததும் நோக்கார்
கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார் "

பால கார்முகப் 31

என்று பாடுவர்.

கனகமாலையின் ஐந்து சகோதரர்கள் ஐந்து விதமான போர்களில் வல்லவர்கள். இவர்களைக் குறிப்பிடும்போது தேவர் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருவரை உவமை கூறுகின்றார். அதில் வாட்போருக்கு வல்லவனாகக் கூறப்பெறுபவன் பரசுராமன் என்கின்றார். விசயன், கதம்பன், கனகன், அசலகீர்த்தி, சேனன் என்ற ஐவரையும்,

" விசயனே விசயன் விற்போர்க்கதம்பனே முருகன் வேற்போந்த
திசையெலாம் வணங்கும் வாட்போர்க் கந்தணன் செம்பொனுமன்
அசைவிலான் யானைத் தேர்ப்போருக்கு அசலனே அசல கீர்த்தி
வசையிலன் புரவிச் சேனனென் றியாவரும் புகழப்பட்டார் "

சிந்த 7 கனகமாலை 125

இங்கு வாட்போருக்கு அந்தணன் என்று பரசுராமன் பேசப்பெறுகின்றான். இவன் அந்தணன் என்பதும் வாட்போரில் வல்லவன் என்பதும் பற்றிய செய்தியைக் கம்பர்,

" நிருபர்க்கொரு பழிபற்றிட நிலமன்னவர் குலமும்
கருவற்றிட மழுவாள்கொடு களைகட்டுயர் கவரா
இருபத்தொரு படிகாலெழு கடலொத்தலை யெறியும்
குருதிப்புனல் அதனிற்புக முழுகித்தனிக் குடைவான் "

கம். பால பரசுரா. 13-1359

என்று கூறுகின்றார். இவ்வாறு சீவகசிந்தாமணி இராமாயண நிகழ்ச்சிகளையும் உறுப்பினர் இயல்புகளையும் மிக நுணுக்கமாக வாங்கிப் பேசக் காணலாம்.

## பெருங்கதையில் இராமாயணம் :

உதயணன் வாசவதத்தைக்கு யாழ் கற்பித்துக் கொடுத்து வரும்போது இருவரும் களவுக்காதலர் ஆயினர். வாசவதத்தையை மணம்பேசி வேற்று அரசர்களிடம் பெற்றோர் தூது போக்கியது அறிந்த வாசவதத்தை சாங்கியத்தாய் என்ற செவிலித்தாயிடம் கூற, அவள் நற்றாயிடம் அவள் இயல்பு கூறுமுகத்தான் சீதையை உவமை காட்டிக் கூறுகின்றாள்.

இராவணனிடம் இருந்து சீதையை மீட்டபோது ஊரவர் கவ்வைக்கு அஞ்சி அவளைத் தீயிடைப் புகுந்து வருமாறு இராமன் கூறியதைப் போலவே பின்னும் ஒருமுறை ஊரவர் பழிமொழிக்கு அஞ்சிக் காட்டிடை உய்த்து மீட்க நின்றபோதும் தீயிடைப் புகக்கூற, அவள் நொந்து நிலத்திடைப் புகுந்தாள் என்பது வரலாறு.

சீதை, இராமன் அழுங்குமாறு பூமிக்குள் புகுந்த செய்தியை மேற்கோள் காட்டி உதயணனிடம் தத்தையின் காதலையும் அவள் பெற்றியையும் சாங்கியத்தாய் கூறும் போது உதயணன் அவளை உடனே மணக்கவில்லையென்றால் அவள் தன் கற்பிற்குச் சோதனை சூழ்வதை நினைந்து சீதை போல் நிலங்குளிப்பாள் என்கின்றாள்.

"பூட்டுறு பகழி வாங்கிய வேட்டுவன்
வில்விசை கேட்ட வெருஉப் பிணை போலக்
காவ லாட்டியர் நாமிசை எடுத்த
சொல்லிசை வெரீஇய மெல்லென் பாவை
என் முகத் தேயும் இரங்கிய தலையள்
நின்முகத் தாயின் இகழ்ந்தனை நாணி
நிலம் புகு வன்ன புலம்பின ளாகிச்
சிறுமையி னுணர்ந்த பெருமக னிரங்க
மண்கெழு மடந்தாய் மறைவிடந் தாவென
ஒன்றுபுரி கற்பொடு உலகு விளக் குறீஇப்
பொன்ற லாற்றிய புகழாள் போல"

- பெருங்கதை : உஞ்சைக்காண்டம் சாங்கியத்தாயுரை 331-41

இந்த வரலாற்றை வான்மீகம், தமிழ் உத்தர காண்டம் இரண்டும் கூறும்.

இங்கே இராமன் அரசவை கூட்டி இருந்தபோது வான்மீக முனிவர் சீதையை அழைத்துக்கொண்டு அவைக்கு வருகின்றார். இராமன் முனிவரை அழைத்து ஆசனத்தமர்த்திய பின் இராமன் சீதையை நோக்கினான் அல்லன். சீதை பூமியை நோக்கி நின்றாள். அப்போது முனிவர் சீதையின் கற்பின் திறத்தை இராமனே அறிவான் என்றும் தேவர்கள் அறிவார்கள் என்றும் கூற, இராமன் அஃது உண்மை என்றாலும் உலகவர் அத்திறத்தை இதுகாலை தீக்குளித்தலால் காணவேண்டும் என்கின்றான். அதுகேட்ட சீதை அதற்கு நொந்து உடன்பட்டபோது முனிவர் தந்த கமண்டல நீரையும் சமித்தையும் நிலத்திலிட்டனள்.

"வருந்தியே பயந்த நீ மற்றென் கற்பும் அவ்
அருந்ததி கற்பும் ஒன்றனது என்றிடில்
பெருந்துதி மாநிலம் பிளத்தி என்றனள்
இரும்ததி அமரரும் ஏத்தும் கற்பினள்"

- உத்தரகாண்டம் அசுவமேத யாகப்படலம் 188

அப்பொழுது ஆதிசேடன் மீது வைகிய நிலம் பிளக்க நிலமகள் தோன்றினாள். தோன்றியவள் சீதையை அப்படியே தழுவிக் கதிரியக்கம் முற்றிலும் அற்ற நிலத்தின் அடிக்கே சென்று விடுகின்றாள்.

"சேணுலாவிய நிலமடந்தை சீதைதன்
பூணுலாவிய புயம் பொருந்தப் புல்லுரீஇ
வாணிலாவிய கதிர் வழங்கல் செல்லாக்
கீணிலப் படலமுங் கிழிபப் போயினுள்"

(உத் அசுவமேதயாகப்படலம் 190)

உதயணன் வாசவதத்தை என்பாளைப் பிடிமேல் ஏற்றிப் பாலை நிலம் கடந்து செல்லுழி அப்பிடி இறக்க அவன் அவளோடும் ஓரிடத்து மறைய, பாலைநில மக்களாகிய சவரர், புளினர் என் போர் பிடியின் அடிச்சுவடு முதலியன கண்டு அவ்வழியில் யாரோ போந்திருத்தல் கூடுமென்று தொடர்ந்து சென்று தேடியதைக் குறிக்கும்போது,

"செருக்கயல் உண்கட் சீதையைத் தேர்வுழிக்
குரங்கினத் தன்ன பரப்பின ராகிப்
பிடி முதற் கொண்டு மலரடி முதல் ஒற்றி"

உஞ்சைக்காண்டம் 55 சவரர் புளினர் வளைத்தது 109-111

என்று கூறும் கொங்குவேளிர் மாக்கதை. இராமனுக்காகச் சுக்கிரீவனின் அறுபது வெள்ளம் சேனைகளும் இராவணன் கொண்டொளித்த சீதையைத் தேடும்பொருட்டுத் திசை எங்கணும் பரந்து சென்று தேடியதைப்போன்று பிடியின் அடிச்சுவட்டையும் மக்கள் அடிச்சுவட்டையும் அடையாளமாகக்கொண்டு பாலை நிலத்துவாழ் சவரர் புளினர் என்போர் தேடினர் என்பர்.

கொங்குவேளிர்தம் மாக்கதையில் குரங்கினங்கள் சீதையைத் தேடிய செய்தியை உவமையாகக் கொள்வதைப் பார்த்தால் அவர் இராமகாதையில் எத்துணைத் தோய்வுடையவர் என்பது விளங்கும்

பெருங்கதையில் இராமன் தம்பி இலக்குவன் அப்பெயர் பூணக் காரணம் அவன் கையில் சக்கர ரேகை இருந்ததால் அந்த அடையாளத்தைக் குறிக்கும் முறையில் அவன் பெயர் இலக்குவன் என்று அமைந்தது என்பதை,

" இருங்கடல் வரைப்பில் இனியோர் எடுத்த
இறைமீக் கூறிய இராமன் தம்பி
மறுவொடு பெயரிய மதலைக் கியைந்த
ஆணுப் பெரும்புகழ் யாமும் எய்த "

– பெருங். மகத காண்டம் 24 மேவீழ்வலித்தது 89-92

என்பர்.

இராமாயணத்தில் கம்பர்,

" சங்கு சக்கரக்குறியுள தடக்கையில் தாளில்
எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை
செங்கண் விற்கரத்து இராமன் அத்திரு நெடுமாலே
இங்கு உதித்தனன் ஈண்டு அறம் நிறுத்துதற்கு இன்னும் "

- கிட் நட்புகோட் 76

என்பர்.

பெருங்கதையில் இலக்குவனுக்கு இருந்ததாகக் கூறிய அடையாளங்கள் இங்கு இராமனுக்கு இருப்பதாகக் கம்பர் குறிப்பிடுகின்றார்.

---

# இராமாயணக்கதையும், உறுப்பினர்களும்பற்றி மூவர் தேவாரம் வழங்கும் செய்திகள்

இராமாயணக் கதைக்கு அடிப்படையாக உள்ள இராமனைப் பற்றியும் இராவணனைப் பற்றியும் தேவாரம் பேசுகின்றது. அதில் இராவணனைப் பற்றிய செய்திகள் மிகுதியாக வருகின்றன.

இராவணனைப் பற்றிச் சம்பந்தர் தேவாரத்தில் பதிகந்தோறும் எட்டாவது பாடலில் பேசப்பெறும். அப்பர் தேவாரத்தில் பதிகந் தோறும் இறுதிப் பாட்டில் காணப்பெறும்.

முதல் திருமுறையில் :

5, 18, 39, 45, 57, 63, 78, 87, 90.

இரண்டாம் திருமுறையில்:

2, 6, 20, 58, 67, 70, 73, 74, 78, 79, 112, 117.

மூன்றாம் திருமுறையில் :

37, 58, 72, 110, 113.

இராவணனைப் பற்றிய குறிப்பில்லாத பதிகங்கள் :

முதல் திருமுறையில்

68, 73, 83, 87, 118, 119, 121.

இரண்டாம் திருமுறையில் :

68, 77, 78, 79, 100, 111, 112.

மூன்றாம் திருமுறையில் :

1, 53, 63, 94, 102, 104, 112.

நான்காம் திருமுறையில் :

3, 8, 9, 11, 12, 20, 21, 23, 24, 26, 44, 46, 50, 53, 76, 81, 89, 99, 104, 112, 113.

ஐந்தாம் திருமுறையில் :

5, 7, 54, 89, 90, 91, 93, 95, 96, 99.

ஆறாம் திருமுறையில்:

1, 2, 4, 5, 7, 8, 9, 13, 21, 22, 24, 25, 26, 57, 93, 94, 95, 98.

பாக்கள்தோறும் இராவணன் பேசப்பெறுங் குறிப்பு:

4614 முதல் 4623 வரை
4626 முதல் 4735 வரை

**தேவாரம் கூறும் இராவணன் வரலாறு :**

பிரமனை நோக்கி இராவணன் தவம் செய்தான் என்பதும், அவனைக்குறித்துத் தலையை அறுத்துக் கொடுத்தான் என்பதும் வரலாறு. ஆனால் இங்குச் சிவபிரானுக்கு இராவணன் தலையை அறுத்துக்கொடுத்ததாக அப்பர் பாடுகின்றார். தேவார ஆசிரியர்கள் பிரமனை ஒருபொருட்டாகக் கொள்வதில்லை. இராவணனுக்கு வரம் தந்ததெல்லாம் சிவனே என்பது அவர்தம் கொள்கை. யாரை நோக்கித் தவம் செய்திருந்தாலும் அவன் தலையை அறுத்த வரலாறு கிடைக்கின்றது. எப்படியும் அப்பர் இராவணன் தலையரிந்து பிரமனுக்கோ, சிவனுக்கோ இட்டு வரம் பெற்றதை அறிந்ததாகக் கூறுவாரேயானால் அவரும் துவாபர யுகத்தைச் சார்ந்தவராதல் வேண்டும்.

வாகீச முனிவரே அப்பர் அடிகளாகப் பிறந்தார் என்று கூறும் ஒரு செய்தியும் உண்டு. அதுபற்றிப் பார்த்தாலும் அப்பர் ஆண்டவனை அடைய வாகீச முனிவாராய் இருந்து தவம் செய்து, பின் இறந்து அப்பராகிப் பழம்பிறப்புணர்ச்சியுற்றுப் பாடினார் என்று கொள்ள வேண்டும்.

**"இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும்**
**இறுத்தவனுக்கீந்த பெருமை கண்டேன்"**

திருவாய்மூர் தாண்டகம்-7017

என்று பேசுவதால் இதனை அறியலாம்.

இராவணன் பத்துத் தலையையும் அரிந்து வேள்வி செய்து வரம் பெற்ற வரலாறு இங்குக் கிடைக்கின்றது. இராவணன் இறைவனிடம் மூன்று கோடி வாழ்நாள் வேண்டிப் பெற்றுள்ளான் (1935) என்பதை வேறொரு பதிகம் கூறும்.

இராவணன் வரம் பெற்றதோடு மாயம் வல்லனாயும் வானகம், மண்ணகம் முதலிய எல்லா இடத்திலும் வாழும் எல்லோருக்கும் இறைவனாகியும் வாழ்ந்திருக்கின்றான். (576) இராவணன் நாடு மிக்குடைமையால் பலவாறு திரிபவன் (4733).

இராவணன் இலங்கையில் தனக்கு அமைத்துக் கொண்ட கோட்டையும் கோயிலும், செம்பினால் இயன்றவை (4727). அவன் சனி, புதன், ஞாயிறு, திங்கள் போன்ற கோள்களுக்குக் கேடு செய்து அவற்றை ஒடுக்கி மகிழ்ந்து வாழ்ந்தவன் (2906, 5442).

அவனுடைய நாட்டின் மீது இருசுடர் இயங்கா (6643) வண்ணம் தகைத்து வாழ்ந்த பெருமை படைத்தவன் (2909). தன் நாட்டின் பாதுகாப்பிற்குக் கடற்படை ஒன்று வைத்துப் பேணியுள்ளான் (2535).

இந்த இராவணன் பொருள் மன்னனாய குபேரனிடமிருந்து புட்பகத்தைக் கவர்ந்து வந்தவன் (4334): இந்தப் புட்பகத்தில் இவர்ந்து வந்தபோது அது கயிலையின் மீது போகாது நிற்கச் சினங்கொண்டான் இராவணன் (4481). சினந்த இராவணன் புட்பகத்தினின்றும் கீழிறங்கிக் கண்சிவந்து நோக்கித் (4615-4622) தன் வீரங்காட்ட முனைந்தபோது பாகன் தடுக்க (4302) இராவணன் அவனை முனிந்து மேற்சென்று கயிலையை முக்கிச் (4493) சிரமத்தால் (4730) எடுக்கலுற்றபோது (4302) உமை யம்மை நடுங்கினாள் (4615). பின் பூதகணங்கள் அஞ்சி இரிந்து ஓடின (4665).

பின் இராவணன் தன் இருபது தோளால் மலையைப் பெயர்த்தெடுத்தான் (115). அதுகண்டு இறைவன் தன் கால் விரலை மெல்ல ஊன்றினான் (3875). அப்போது இராவணன் 'அம்மையோ' என்று அலறினான் (4731). அப்பொழுது அவன் எலும்புகள் நெடுநெடு என்று முரிந்தன (4302). மலையால் நசுக்குண்டு கண்ணும் முடியும் பிதுங்கியோட (7094) இராவணன் மிதியுண்ட அத்திப்பழம்போல் நசுக்குண்டான் (4732).

பின் இராவணன் தன் செருக்கொழிந்து பணிந்து தன் உடம்பின் நரம்புகொண்டு (6740, 6923, 7150) பாட (4591, 4733) அப்பாட்டைக் கேட்டு அவனுக்கு இராவணன் என்ற பெயரளித்துப் (7037) பெருவாள் கொடுத்து அவனுக்கு முன்னிற் பவர் இல்லாது செய்தவன் சிவன் (115).

சூரிய குலத்து உதித்த சடாயு, சம்பாதி என்ற கழுகு அரசர்கள் புள்ளிருக்கு வேளூரில் இருந்து (1928) இறைவனுக்கு ஒரு யோசனைத்தொலைவு சென்று பூக்கொணர்ந்து வழிபடுவது வழக்கம். அவர்கள் பத்தியோடு பலகாலம் தவம் செய்து புத்தி ஒன்ற வைத்தவர்கள் (1933). அவருள் சடாயு என்பவன் இராவணன் சீதையைக் கவர்ந்து பேரரவத்தோடு புட்பகத் (7085) துணையால் வான வழியே இயங்கக்கண்டு இராமனுக்காக அவன் மனைவி சீதையை மீட்கவேண்டி (1937) வானவெளியில் பெரும் போரிட்டு முக்கோடி வாழ்நாள் உடைய அவனைப் புண்செய்து (1935) தகைந்து (1931) உயிர் துறந்த (1929) செய்தியை ஞானசம்பந்தர் விரித்துரைப்பர்.

சீதை தண்டக வனத்திருந்தபோது இராவணன் மாயமான் ஒன்றை உருவாக்கி, இராம இலக்குவர்களை அவளினின்றும் பிரித்து மாயையால் அவளை வவ்விய செய்தியை (2902) ஞான சம்பந்தர் கூறுவர்.

சீதையை இராவணன் கவர்ந்து சென்ற பின்னர் அவள் இலங்கையில் இருப்பதை அறிந்து இராமன் கடலடைத்து வழி செய்து, இலங்கை புகுந்து இராவணனை வில்லால் அழித்த அக் கொலைப்பாவம்போக்க இராமேச்சுரத்தில் சிவனுக்குக் கோயில்கட்டி வழிபட்ட செய்தியை ஞானசம்பந்தர் தேவாரம் (6833, 2901, 2905) கூறும். இச்செய்தி கம்பரின் மீட்சிப் படலத்தில் இல்லை.

இராவணனை இராமன் அழித்ததற்கு அடிப்படைக் காரணம் பிறன்மனை நயந்த குற்றம் உடைமையாலேயாம் என்பதை (2903) ஞான சம்பந்தர் கூறுவர்.

இராவணன் பெருவலி படைத்ததால் செருக்குற்று வாலியிடம் போருக்குச்செல்ல வாலி அவனைத் தன் வாலினால் பிணித்த செய்தியை ஞானசம்பந்தர் தேவாரம் (3784) கூறக் காணலாம்.

வான்மீகி இராமாயணம் கூறாத பல கருத்துக்களை இங்குக் காணலாம். குறிப்பாக இராவணன் (1) தவம் செய்து (2503, 3103), (2) வரம் பெற்று (19, 115) (3) மலையை எடுக்கத் துணிந்தது (4302) ஆண்டு நந்தி தடுத்தது, பாகன் தடுத்தது, முனைப்போடு அவன் போந்தது, (4) உமை நடுங்கியது, (6369-7920) பூதங்கள் பயந்தோடியது, (5) மலையைப் பெயர்த்து எடுத்தது, இறைவன் அடர்த்தது, அவன் அலறியது, என்பு நொறுங்கியது (4355, 4455) (6) கையை வீணைத் தண்டாக்கித் தன் நரம்பை வீணை நரம்பாக்கி யாழ்வாசித்துச் சாம கீதம் பாடியது, (7471) (7) இறைவன் மகிழ்ந்து வரமளித்தது போன்ற நிகழ்ச்சிகள் பலவற்றை ஆண்டுக் காணலாம்.

இவற்றையெல்லாம் வைத்து நோக்கினால் தேவார ஆசிரியர் காலத்தில் இராமாயண நிகழ்ச்சிகள் இந்த நாட்டில் வேரூன்றிக் கிடந்ததும், அந்த இராமாயண நிகழ்ச்சிகளை உவமையாக எடுத்துப் பயில வழங்குவதும், அச்செய்திகள் வான்மீகம் போன்ற இராமாயணத்திலும் கம்பராமாயணத்திலும் கூட இல்லாத செய்தியாக இருப்பதையும் காணும்போது பழைய தமிழ்ச் சான்றோர் வழங்கிய இராமாயணம் இந்த நாட்டு உடைமையாக இருந்தது தெளிவாகும்.



---

# ✓ திவ்யப்பிரபந்த பாசுரப்படி இராமாயணம்

## பால காண்டம் :

திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ (1238) நலமந்த மில்லதோர் நாட்டில் (2867) அந்தமில் பேரின்பத்தடிய ரோடு (3765) ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும் (3051) அயர்வரும் அமரர்கள் அதிபதியான (2675) அணியார் பொழில் சூழ் அரங்க நகரப்பன் (2029) அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாய்போல் ஆராவார் துணையென்று துளங்கும் (3125) நல் அமரர் துயர்தீர (3125) வல்லரக்கர் (3674) இலங்கை பாழ்படுக்க எண்ணி (1414) மண்ணுலகத்தோருய்ய (2271) அயோத்தி என்னும் அணிநகரத்து (741) வெங்கதி ரோன் குலத்துக்கோர் விளக்காய் (741) கௌசலை தன் குல மதலையாய் (732) தயரதன் மகனாய்த் தோன்றி, குணந்திகழ் கொண்டலாய் மந்திரங்கொள் மறை முனிவன் (742) வேள்வி காக்க நடந்து (724) வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக் கீறி (742) வல்லரக்கர் உயிருண்டு (742) கல்லைப் பெண்ணாக்கிக் காரார் திண் சிலையிறுத்து மைதிலியை மணம் புணர்ந்து (1255) இருபத்தொருகால் அரசர் களைகட்ட (3247) மழுவாளேந்தி வெவ்வரி நற்சிலை வாங்கி வென்றி கொண்டு (743) அவன் தவத்தை முற்றும் செற்று (738) அம்பொன் நெடு மணி மாட அயோத்தி எய்தி (748).

## அயோத்தியா காண்டம் :

அரியணைமேல் மன்னனாவான் நிற்க (730) கொங்கை வன் கூனி சொற்கொண்டு (125) கொடிய கைகேயி வரம் வேண்ட (320) அக்கடிய சொற்கேட்டு (405) மலக்கிய மாமனத் தனனாய் மன்னவனும் மறுதொழிய (320) குலக்குமரா காடுறையப் போ என்று விடை கொடுப்ப (320) இரு நிலத்தை வேண்டாது (731) ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமும் ஆங்கொழிந்து (405) மைவாய களிறொழிந்து (731) மாவொழிந்து தேரொழிந்து (731) கலனணியாதே காமரெழில் விழலுடுத்து (736) அங்கங் கள் அழகு மாறி (736) மானமரு மென்னோக்கி வைதேவியின் துணையா (1992) இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின் செல்ல (1992) கலையும் கரியும் பரிமாவும் (125) திரியும் கானம் கடந்துபோய் (988) பத்தியுடைக் குகன் கடத்தக் கங்கை தன்னைக் கடந்து வனம் போய் புக்குக் (744) காயோடு நீடு

கனியுண்டு (1157) வியன் கான மரத்தி னிழல் (732) கல்லணை மேல் கண் துயின்று (232) சித்திர கூடத்திருப்ப (323) தயரதன் தான் (740) "நின் மகன்மேல் பழி விளைத்திட்டு என்னையும் நீள் வானில் போக்க (737) என் பெற்றாய் கைகேசி (737) நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன்" என்று (739) வானேறத் (322) தேனமரும் பொழில் சாரல் சித்திரகூடத்து (322) ஆனை புரவி தேரொடு காலாளணி கொண்ட சேனை (1490) சுமந்திரன் வசிட்டருடன் சென்று (736) பரத நம்பி பணிய (322) தம்பிக்கு மரவடியை வான் பணயம் வைத்துக் (412) குவலயத் துங்கக் கரியும் பரியும் இராச்சியமும் (125) எங்கும் பரதற்கருளி விடை கொடுத்து 125 திருவுடைய திசைக்கருமம் திருத்தப் போய்த் (412) தண்டகாரணியம் புகுந்து (1860)

## ஆரணிய காண்டம் :

மறை முனிவர்க்கு 'அஞ்சேல் மின்' (2673) என்று விடை கொடுத்து (320) வெங்கண் விறல் விராதனுக்கு (742) விற்குனித்து (1183) வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப் (745) புலர்ந்தெழுந்த காமத்தால் (2674/144) சீதைக்கு நேராவன் என்னப் (2673/39) பொன்னிறங் கொண்ட சுடுசினத்த சூர்ப்பணகாவை (2674 144) கொடி மூக்கும் காதிரண்டும் கூரார்ந்த வாளால் ஈராவிடுத்து (2673/40) கரனோடு தூடணன் தன்னுயிரை வாங்கி 745 அவள் கதறித் தலையில் அங்கை வைத்து (1231) மலையிலங்கை யோடிப் புக (1231) கொடுமையில் கடுவிசையரக்கன் (1414) அலைமலிவேற் கண்ணாளை யகல்விப்பான்–ஓருருவாய் மானை அமைத்து (1988) சிற்றெயிற்று முற்றல் மூங்கில் (803) மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து (803) இலைக்குரம்பில் தனியிருப்பில் (803) கனிவாய்த் திருவினைப் பிரித்து, நீள் கடல் சூழ் இலங்கையில் (1414) அரக்கர் குடிக்கு நஞ்சாகக் கொடுபோய் (1861 வம்புலாங் கடிகாவில் சிறையாய் வைக்க (1862) அயோத்தியர் கோன் (321) மாயமான் மாயச்செற்று (2047) அலைமலிவேற் கண்ணாளை அகன்று (1988) தளர்வெய்தி (746) சடாயுவை வைகுந்தத்தேற்றி (746) கங்குலும் பகலும் கண் துயிலின்றிக் (3572) கானகம் படியுலாவி (278) கணையொன்றினால் (1142) கவந்தனை (1822) மடித்துச் சவரி தந்த கனியுவந்து (278)

## கிட்கிந்தா காண்டம் :

வனமருவு கவியரசன் தன்னோடு (746) காதல் கொண்டு மராமரமேழெய்து (2724) உருத்தெழு வாலி மார்பில் ஒரு கணை

உருவ ஓட்டி, கருத்துடைத் தம்பிக்கு இன்பக் கதிர்முடி அரசளித்து [1300] வானரக் கோனுடனிருந்து [9325] வைதேகி தனைத் தேட [325] விடுத்த திசைக்கருமம் திருத்து [9] திறல் விளங்கு மாருதியும் [751] மாயோன் [2487] தூதுரைத்தல் செப்ப [3623]

**சுந்தர காண்டம் :**

சீராடும் திறல் அனுமன் [327] மாக்கடலைக் கடந்தேறி [1863] மும்மதிள் நீள் இலங்கை புக்கு கடிகாவில் வாராரு முலைமடவாள் வைதேவி தனைக்கண்டு [327] "நின்னடியேன் விண்ணப்பம் கேட்டருளாய் அயோத்தி தன்னில் ஓர் இடவகையில் [319] எல்லியம் போதினி திருத்தல் [319] மல்லிகை மா மாலை கொண்டங் கார்த்ததும் [319] கலக்கிய மா மனத்தனளாய்க் கைகேயி வரம் வேண்ட [320] மலக்கிய மா மனத்தனனாய் மன்ன வனும் மறாதொழியக் குலக்குமரா காடுறையப் போ என்று விடை கொடுப்ப இலக்குமணன் தன்னோடங்கேகியதும் [320] கங்கை தன்னில் கூரணிந்த வேல்வலவன் குகனோடு சீரணிந்த தோழமை கொண்டதுவும் [321] சித்திரகூடத்திருப்பப் பரதநம்பி பணிந் ததுவும் [322] சிறு காக்கை முலை தீண்ட மூவுலகும் திரிந்தோடி வித்தகனே! இராமா! ஓ! நின்னபயம் என்ன அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும் [323] பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட நின்னன்பின் வழி நின்று சிலைபிடித் தெம்பிரான் ஏகப் பின்னே யங்கு இலக்குமணன் பிரிந்ததுவும் [324] அத்தகு சீர் அயோத்தியர் கோன் உரைத்த அடையாளம் ஈது அவன்கை மோதிரமே" என்று அடையாளம் தெரிந்துரைக்க, மலர்க்குழலாள் சீதையும் [325] வில்லிறுத்தான் மோதிரம் கண்டு அனுமான் அடையாளம் ஒக்கும் என்று உச்சிமேல் வைத்து உகக்கத் [326] திறல் விளங்கு மாருதியும் [751] இலங்கையர் கோன் மாக்கடிகாவை யிறுத்து [1863] காதல் மக்களும் சுற்றமும் கொன்று [1863] கடியிலங்கை மலங்க எரித்து [1863] அரக்கர் கோன் சினமழித்து மீண்டு [746] அன்பினால் அயோத்தியர் கோன் [321] தளிர்புரையும் [2022] அடியிணை பணிய [2046]

**யுத்த காண்டம் :**

கான எண்கும் குரங்கும் முசுவும் படையா [1543] கொடியோ னிலங்கை புகலுற்று [1701] அலையார் கடற்கரை விற்றிருந்து [330] செல்வ விபீடணற்கு நல்லானாய் [1522] விரி நீரிலங்கை யருளிச் [3400] சரண்புக்க குரைகடலை [747]

அடலம்பால் மறுக எய்து [747] கொல்லை விலங்கு பணி செய்ய [1701] மலையாலணை கட்டி மறுகரையேறி [727] இலங்கை பொடி பொடியாகச் [1988] சிலைமலி செஞ்சரங்கள் செலவுய்த்து [1988] கும்பனொடு நிகும்பனும் பட [1862] இந்திரசித்தழியக் கும்பகர்ணன் பட [1862] அரக்கராவி மாள [1668] அரக்கர் கூத்தர் போலக் குழமணி தூரமாட [1868] இலங்கை மன்னன் முடியொருபதும் [1243] தோளிருபதும் போயுதிரச் சிலைவளைத்து [1243] சரமழை பொழிந்து [1822] கரந்துணித்து [867] வெற்றி கொண்ட செருக்களத்துக் கடிக்கமல நான்முகனும் கண் மூன்றத் தானும் எண்மர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர் [2433] மற்றுமுள்ள வானவர் மலர் மழை பொழிந்து [1822] மணிமுடி பணி தர அடியிணை வணங்கக் [2675, 45] கோலத் திருமாமகளொடு [3317] செல்வ வீடணன் வானரக் கோனுடன் [1522, 325] இலகுமணி நெடுந்தேரேறி [750, 731] சீரணிந்த குகனோடு கூடி [321] அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தி எய்தி [741, 748] நன்னீராடிப் பொங்கிளவாடை யரையில் சாத்தி [706] திருச்செய்ய முடியும் ஆரமும் குழையும் [3486] முதலா மேத்தகு பல்கலனணிந்து சூட்டுநன் மாலைகளணிந்து [1074] பரதனும் தம்பி சத்ருக்கனனும் இலக்குமணனும் இரவு நண்பகலும் ஆட் செய்ய [1074] வடிவிணையில்லாச் சங்கு தங்கு முன்கை நங்கை [80c] மலர்க் குழலாள் சீதையும் தானும் [326] கோப்புடைய சீரிய சிங்காதனத்திருந்து [496] ஏழுலகும் தனிக்கோல் செல்ல [3275] வாழ்வித்தருளினார் [3275].

---

# ஆழ்வார்கள் பாசுரப்படி இரணியன் வரலாறு

எல்லை இலாத தவமும் வரமும் கருதி, அல்லல் செய்த இரணியனுக்கு அஞ்சி, இமையோர் இறைவனை யடைந்து வணங்காமுடியான் உன்னை இகழ்ந்தான்; மூர்க்கன் செயலால் தளர்ந்தோம்; சரண் தா, என்ன, அரண் ஆவோம், முரணானவனை முடிப்போம் என்றான்.

பொன் பெயரோன் பள்ளியில் ஓதிவந்த தன் சிறுவன் இறைவனது ஆயிரநாமம் ஓத, பொறுப்பிலனாகி, பிள்ளையைச் சீறி, வெகுண்டு, தூண்புடைத்தான்.

அளந்திட்ட தூணை அவன் தட்ட, ஆங்கே வளர்ந்திட்டது ஓர்பிறை எயிற்று அனல்விழிப் பேழ்வாய் ஆள்அரி, அதுகண்ட பொன்னன் வயிறு அழல்வாள் உருவி எதிர்ந்தான். வாள் எயிற்றுக் கோளரியோ ஏனோர் அஞ்ச, செஞ்சமத்து எரிவிழித்தது.

அப்போது வானோர், எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய எயிற்றோடு இது எவ்உரு? என்று கலங்கி இரிந்தோட, நாத் தழும்ப நான்முகனும் ஈசனும் முறையால் ஏத்த அந்தியப் போதில் வந்த ஆள் அரி, உரம்பற்றி இரணியனை, உகிர் நுதியால் ஒள்ளிய மார்வு உறைக்க ஊன்றிச் சிரம்பற்றி, முடியிடியக் கண் பிதுங்க, வாய் அலற ஒண் மார்பு அகலம் குருதி குழம்பி எழ வாளுகிரால் மார்பிரண்டு கூறாகக் கீறிப் போழ்பட வீர்த்துப் பிளந்து தெழித்தான். குலமகற்கு இன்னருள் கொடுத்தான்.

இவ்வாறு ஆழ்வார்கள் இரணியன் கதையில் தோய்ந்து தாம் இயற்றிய பிரபந்தங்களில் அவன் வரலாறு முழுமையும் ஒரு நிகழ்ச்சியும் விடாமல் அமைத்துப் பாடியிருப்பார்களே யானால் இக்கதை தமிழகத்தில் எவ்வளவு பழமையானது என்பதும், வேரூன்றிக் கிடந்தது என்பதும் போதரும்.

நரசிங்க அவதாரம் இராம அவதாரத்திற்கு முற்பட்டது. அத்தகைய பழைய அவதாரக் கதை அடுத்த இராமாவதாரக் கதையிலும் இடம் பெறுமேயானால் இது பிற நாட்டவர்க்கோ பிற மொழியினர்க்கோ உரியது என்று கூற முடியாது. அதற்கு ஏற்ப இக்கதை சங்க இலக்கியங்களிலும்,* கல்லாடம், சிந்தாமணி† போன்ற நூல்களிலும் தெளிவாகப் பேசப் பெறுவது கொண்டும் இச்செய்தி புராணங்களில் வருவது கொண்டும் கம்பர், தம் நூலுக்கு உரிய மூலத்தைச் சங்க இலக்கியங்களிலிருந்தும் பிரபந்தங்களிலிருந்தும் பெற்று யாத்தாரே அன்றி வான்மிக ரிடத்தில் இருந்து மொழிபெயர்த்துப் பாடினார் என்று கூற முடியாது. வான்மிகத்தில் இக்கதை இல்லை.

---

*பரிபாடல்: 4

†1813-ஆம் செய்யுள்

# முடிவுரை

இதுவரையிலும் கம்பர் தம் காப்பியத் தலைவனாக இராமனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டதற்குரிய காரணங்களையும் இராமகாதை, வரலாறு தோன்றாத காலப் பழைமையுடையது என்பதையும் திருமால் வழிவந்த சோழகுடி எழுபாரையும் தன்னாட்சிக்குரிமையாக்கி வாழ்ந்ததையும் அது திருவாரூர் காவிரிப்பூம் பட்டினம் போன்ற இடங்களைத் தலைநகராகக் கொண்டு வடக்கு தெற்கு என்ற வேறுபாடற்றுத் தனிக்கோல் ஓச்சியது என்பதையும் புராண இதிகாச இலக்கியக் கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு கண்டோம்.

வான்மீகருக்கு முன்னிருந்த புராணங்களில் இராமாயணம் வழங்குவதும் பல இராமயணங்கள் வான்மீகருக்கு முன்னிருந்ததையும் கண்டோம். நாரத முனிவர் வாயிலாக இராம காதையைச் செவி வழிச் செய்தியாகக் கேட்டறிந்த வான்மீகர் தமக்குரிய முறையில் தம் அகன்ற புலமையைக் காட்ட நூல் எழுதினாரேயல்லாமல் உண்மை வரலாறு உணர்ந்து பாத்திர நலங்குன்றாது பாடினார் அல்லர் என்றும் கண்டோம். தெய்வத்திற்குத் தெய்வமாய் சோழகுடியில் தமிழ் மொழிக்குரியோனாய்ப் பிறந்து முத்தெய்வங்களாலும் வெல்ல முடியாது வரம் பெற்றிருந்த பிரம குலத்துதித்த இராவணனை க்ஷத்திரிய குலத்தில் பிறந்து அழித்த இராமனென்ற தெய்வம் மனிதத் தரத்தனாய் தாழ்த்தப் பெற்றது கண்டு நொந்த கம்பர் வான்மீகருக்கு எதிர் நூலாக இயற்றியதே கம்பராமாயணம் என்பதைப் பலதிறப்பட்ட சான்றுகளுடன் பல கோணத்தில் ஆராய்ந்திருப்பதைக் காணும் தமிழ் மக்களும் பிறரும் இனியேனும் இன்று நாம் கொள்ளும் பொருளில் திராவிட மரபினனாகிய இராமனை ஆரியன் என்றும் ஆரிய மரபினனாகிய இராவணனைத் திராவிடன் என்றும் யாரோ ஆராய்ச்சியின்றி எழுதியதைச் செவி வழிச் செய்தியாகக் கொண்டு, பிழையுணர்வு நீங்கித் தெளிவு பெறுவாராக. இராமகாதை இனியேனும் தமிழகத்தின் குலவுடைமை என்று ஏற்றுக் கம்பருக்குக் கோட்டமும் கம்பராமாயணத்திற்கு ஆராய்ச்சிக் கூடங்களும் அமைத்துப் பெருமை காட்டிச் சிறப்புறுவோமாக.



## நூலாசிரியரைப் பற்றி.........

இந்நூலாசிரியர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புலவர், பி.ஓ.எல். என்ற பட்டங்களைப் பெற்றுச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றுக் கேரளப் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர். இவர் டாக்டர் பட்டத்திற்குச் செய்த ஆராய்ச்சி தமிழிற்கும் தமிழ் மக்கட்கும் இருந்த நீக்கரும் கறை யொன்றைப் போக்கி முதுகெலும் பளித்ததாகும். சிலப் பதிகாரம், இராமாயணம் போன்ற காவியங்களின் உறுப்பினர் களிடையே நிலவும் சிக்கல்களை நீக்கி இவர் நூல்கள் எழுதி யுள்ளார். இவருடைய நாடகச் சிலம்பு என்ற நூல் நடையாலும் நாடகப் பண்பாலும் தமிழக அறிஞர்களின் உளங்கவர்ந்தது. இவர் வானொலியில் திருக்குறள் காமத்துப்பாலைத் தொடர் நிகழ்ச்சியாகக் கற்பித்துக் குறளோடு தம் கற்பனையையும் விளக்கத்தையும் சேர்த்து வெண்பாவாக்கி இசை நாடகமாக்கியவர். கூற்றாடல் கொண்டான், வாலி, மனோன்மணீயம், கங்கை கொண்ட சோழபுரம், சிலப்பதிகாரம், கோப்பெரும் சோழன் போன்ற நாடகங்களை எழுதி வானொலி வழி மொழிக்கும் மக்கட்கும் பெருமை சேர்த்தவர்.

வடக்கிருந்தான் என்ற நாடகம் பழந் தமிழகத்தை நேரே கண்டுகளிக்க இடந்தரும் நடைவீறும், நாடக நலமும் நயவுரை களும் கொண்டது. திறனாய்வு உலகிற்கும் இலக்கிய ஆய்வுக்கும் இவரை ஒரு வழிகாட்டியென்றால் அது மிகையாகாது. இவர் நூல்களில் ஏதேனும் ஒன்றை ஊன்றிப் படிப்பவர் இவர் வழிப் படுவர்.

*